## தனது சட்டையே வெண்மையென நினைத்தவன்
## ரின்ஸோவினால் வெளுக்கப்பட்ட
## ராமுவின் சட்டையைப் பார்த்ததும் பிரமித்தான்

ரின்ஸோவினால் வெளுக்கப்பட்ட துணிகள் கண்ணைப்பறிக்கும் வெண்மை யுடையவை—பார்த்த மாத்திரத்தில் பளிச்சிடும் உன்னதமான வெண்மை! உங்கள் குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகித்துப் பாருங்கள்! அதன் விறுவிறுப்பான நுரை எவ்வளவு இலகுவாகவும் விரைவாகவும் அழுக்கை அறவே அகற்றிவிடுகிறது. துணிகளுக்கு எவ்வளவு அற்புதமான சுத்தம் அளிக்கிறது என்பதைக் கண்டு திருப்தி அடைவீர்கள். ஊறவைத்திருக்கட்டும். அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ தேவையில்லை!

வெள்ளைத்துணிகள் அதிவெண்மையாவதற்கும், வர்ணத் துணிகள் அதிகப் பிரகாசமடைவதற்கும் ரின்ஸோ சலவைப் பவுடர் உபயோகியுங்கள்!

பெரிய சைஸ் உபயோகியுங்கள்—அதனால் சிக்கனம் அதிகம்.




## அதி வெண்மையாக வெளுப்பது ரின்ஸோ

**உங்கள் வேலையை இலகுவாக்கும் அற்புத சோப் பவுடர்!**

R. 15-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




B.A.S. புரொடக்ஷன்ஸ்

# செஞ்சுலக்ஷ்மி

-தமிழ்-

தயாரிப்பு & டைரக்ஷன்
**B.A. சுப்பாராவ்** ★ ★

சங்கீதம்
S. ராஜேஸ்வரராவ்

உரிமையாளர்கள்: **மஹாலக்ஷ்மி பிக்சர்ஸ்** மதராஸ்-1




மலர் 17 | இதழ் 41

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

விளம்பி௵ | சித்திரைமீ 28உ


# அதிர்ச்சி வைத்தியம்!

நாடகம் முடிந்தது. ஒருக்காலமும் காங்கிரஸ் நேருஜியை விலகவிட இயலாது. "நீங்கள் யோசியுங்கள். உங்களுடைய தீர்ப்பை நான் ஒப்புக் கொள்ளுகிறேன்" என்று நேருஜி நிபந்தனை போட்ட அன்றே முடிவு எப்படியிருக்கும் என்று நமக்குத் தெரிந்து விட்டது. காங்கிரஸ் தற்போது இருக்கும் நிலையில் எப்படி நேருஜியை விலகவிட முடியும்? விட்டால் காங்கிரஸை அறம்,

"என்பிலதனை வெயில்போலக் காயுமே!"

நேருஜி பிரிந்த உடன் காங்கிரஸானது என்பற்ற உடம்பாகும். அறம் அதைக் காய்ந்து விடும்,—வெயில் புழுக்களைக் கொல்வது போல்.

காங்கிரஸ் கட்சியார் இதை நன்கு உணர்ந்தே "உங்களை விட முடியாது" என்று சொல்லி விட்டனர். சரியான முடிவு.

காங்கிரஸில் ஒரு குறையுமில்லை என்று சொல்லிச் சொல்லித் தம்மையும் மக்களையும் ஏமாற்றி வருகின்றனர். அப்படிக் குறையற்ற அமைப்பாக இருப்பின் நேருஜிக்கு ஓய்வு கொடுப்பதற்கு ஏன் இவ்வளவு ஆட்சேபணை, இவ்வளவு பயம்?

குறை என்ன வென்றால் காங்கிரஸுக்குள் தருமம் குன்றி விட்டது. அதற்குக் காரணம் என்ன வென்றால் காங்கிரஸ் கட்சி அடைந்திருக்கும் அபரிமித அதிகார பலம். சரியான எதிர்க்கட்சி இல்லாத காரணத்தினால் அதிகார பலத்துக்கு வரம்பும் காவலும் இல்லாமல் போய் விட்டது. "ஏழைகளுக்கு உதவுகிறோம். பணக்காரர்களுடைய சொத்து எல்லாம் ஏழைகளுக்குப் பிரித்துக் கொடுப்பது எங்கள் திட்டம்" என்று பொருள்படச் சொல்லி வந்தபடியால் வாக்குகள் கிடைக்கின்றன. தவிர, அதிகார பலத்தால் ஏராளமான திரவிய சகாயம் தேர்தல்களுக்குக் கிடைக்கிறது. இது வெல்லாம் தருமம் குறைவதற்குக் காரணம்.

தருமம் குறைந்தால் எலும்பற்ற உடம்பு என்பது நியதி.

எதிர்க் கட்சி வேண்டும். பலமான எதிர்க் கட்சி இருந்தால் தான் நாட்டில் ஒழுக்கம் காக்கப்படும். உண்மையான பலம் வளரும். நேருஜி இருந்து கொண்டு காங்கிரஸ் ஆட்சி நடைபெறும் காலத்திலேயே இந்த எதிர்க்கட்சிக் காப்பு உண்டாக வேண்டும். இல்லையேல் அராஜகம்தான் விளைவு.

அராஜகத்திலிருந்தும் குழப்பத்திலிருந்தும் விளைவது பலாத்காரமும் பயமும். குழப்பத்தினின்று குடியரசுக் கட்சி தோன்றாது. ஆனபடியால்தான் எதிர்க்கட்சியின் அவசியம் மிக அவசரமான அவசியம். ஒத்திப் போடுவதற்கில்லை. காங்கிரஸின் தலைவராக நேருஜி நாட்டை நடத்தும் காலத்திலேயே சரியான எதிர்க்கட்சி தோன்ற வேண்டும். இல்லாமற் போனால் அதற்குக் காலவரை தாண்டிப் போகும். நேருஜிக்குப் பின் காங்கிரஸின் ஏகபோகம் நடக்காது. நாடு குழப்பத்தில்தான் சிக்க வேண்டியதாகும்.

# துறைமுக விஸ்தரிப்பு

அந்நியச் செலாவணி நெருக்கடி காரணத்தினால் சென்னைத் துறைமுக விஸ்தரிப்புத் திட்டம் கைவிடப்படுமோ என்ற கவலை இப்போது நீங்கி இருக்கிறது. உலக பாங்கியிலிருந்து இந்தத் திட்டத்துக்கென்று தனியாக 6 கோடி ரூபாய் கடனாக அளிக்கப்பட்டிருக்கிறது. 20 வருஷத் தவணையில் திருப்பிக் கொடுக்கும்படி 5½ சதவீதம் வட்டிக்கு இந்தக் கடன் வசதி அளிக்கப்பட்டிருக்கிறது. இக்கடனை ஏற்பாடு செய்வதற்காக ஒரு மாதத்துக்கு முன்பு அமெரிக்கா சென்ற கோஷ்டியினருக்கும், அதில் சென்னைத் துறைமுக சம்பந்தமாகக் கலந்து கொண்ட திரு ஜி. வெங்கடேசுவரனுக்கும், அவர்கள் எடுத்துரைத்த வாத விவாதங்களை அங்கீகரித்துக் கடன் வழங்குவதற்குச் சம்மதித்த உலக பாங்கிக்கும் தமிழகத்தின் பாராட்டு உரித்தாகும்.

சென்னைத் துறைமுக விஸ்தரிப்புத் திட்டத்தின் மொத்தச் செலவு 15 கோடி ரூபாய் என்று மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இத் தொகையில் நம் நாட்டிலேயே செலவழிக்கப்பட வேண்டியவை சுமார் 8 அல்லது 9 கோடி ரூபாய். இவையெல்லாம் கட்டடங்கள் எழுப்புவதற்கும் ரோடுகள் அமைப்பதற்கும், உள்நாட்டிலேயே தேவைப்படும் சாமான்கள் வாங்குவதற்கும் செலவாகும். அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்தே தருவிக்க வேண்டிய சாமான்களுக்குத்தான் இப்போது கிடைத்திருக்கும் கடன் உபயோகப்படுத்தப்படும். இவ்வாறு தருவிக்கும் யந்திரங்களில் சுமார் ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள ராட்சத தூர்வாரியும், கனமான சாமான்களை எளிதில் கப்பலிலிருந்து இறக்கவும் ஏற்றவும் அத்தியாவசியமான கிரேன்களும் அடங்கியுள்ளன. ஆக விஸ்தரிப்புத் திட்டம் ஏற்கனவே வகுத்துள்ள ஏற்பாட்டின்படி வேலை தொடங்கி 1961-ஆம் ஆண்டில் பூர்த்தியடைவதில் தடங்கல் ஒன்றும் இருக்கக் காரணமில்லை.



திரு ஜி. வெங்கடேசுவரன்

சென்னைத் துறைமுகத்தில் கப்பல்கள் நாலைந்து மைல்களுக்கு அப்பால் நீநாள் கணக்கில் நின்றுகொண்டு துறைமுகத்துக்குள் வர முடியாமல் காத்திருக்கும் காட்சியும், இதனால் வர்த்தகர்களுக்கு அதிகப்படி கட்டணம் செலுத்துவதன் மூலம் நஷ்டமேற்படுவதும், நன்கறிந்த விஷயங்கள். இவ்வகை இன்னல்களுக்கெல்லாம் இப்போது சிறிதளவுக்கேனும் பரிகாரம் கிடைக்கப் போகிறது என்பதைக் குறித்து நாம் மகிழ்ச்சி கொள்ளலாம்.

சென்னைத் துறைமுகங்களைப் பற்றிப் பிரஸ்தாபிக்கும்போது தூத்துக்குடி துறைமுக விஸ்தரிப்பைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். இது தற்போது ஒரு இரண்டாந்தர துறைமுகம். கப்பல்கள் ஒன்றும் நேரடியாகத் துறைமுகத்துக்கருகில் வர முடியாது. 5 அல்லது 6 மைல்கள் தள்ளித்தான் நிற்கும். அங்கிருந்தபடியே சாமான்களைச் சிறு படகுகளில் இறக்குமதி செய்யும். அவ்வாறே சிறு படகுகள் ஏற்றுமதி செய்ய வேண்டிய சாமான்களைத் துறைமுகத்திலிருந்து ஏற்றிச் சென்று ஐந்து மைல்களுக்கப்பால் நின்று கொண்டிருக்கும் கப்பல்களில் ஏற்றி வைக்கும். இதிலுள்ள அபாயங்கள் ஒருபுறமிருக்க, கனமான சாமான்களோ, யந்திரங்களோ இத்துறைமுக மூலமாக அனுப்பவும் முடியாது, தருவித்துக் கொள்ளவும் முடியாது. துறைமுகத்தின் முக்கியத்வம் குறைந்துகொண்டே வருகிறது.

அப்படி இருந்தும் இத்துறைமுகத்தின் மூலம் சுமார் 5½ லக்ஷம் டன் சாமான்கள் போக்குவரத்து செய்யப்படுவதாகக் கூறப்படுகிறது. இப்பகுதியில் முக்கிய தொழில் உப்பு உற்பத்தி. சமீபத்தில் ஐந்தாண்டு திட்டத்தின் கீழ் பல புதிய தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின் மூலம் தொழில் வளம் பெருகவும் கிழக்கு தென்-கிழக்கு ஆசியா பகுதிகளுக்கு, நம் நாட்டின் வர்த்தகம் பெருகவும் இத்துறைமுகம் மிகவும் முக்கியமானது. தென் இந்தியக் கடற்கரையிலுள்ள சிறு துறைமுகங்களில் தூத்துக்குடிதான் அதிக வசதிகளையுடையது என்பது ஒப்புக் கொள்ளப்பட்டது.

எனினும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இது இடம் பெறவில்லை. அயல் நாட்டு உதவி கிடைக்காதென்ற காரணமோ, உள் நாட்டு நிதி நிலைமையே சரியாக இல்லை என்ற காரணமோ, இது முக்கியமில்லாத அம்சமாகப் புறக்கணிக்கப்பட்டுள்ளது.

இவ்வித முடிவு சரியானதல்ல. இதை மாற்றி இந்தத் திட்டத்தையும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதை வற்புறுத்த முழுப் பிரதிநிதித்துவமுள்ள ஒரு தூதுகோஷ்டியினர் டில்லி மேலிடத்தாரிடம் சென்று நிலைமையை எடுத்துரைத்தனர். அவர்கள் எடுத்துக் காட்டிய நன்மைகளையும், பலன்களையும், கூறிய வாதங்களையும் மத்திய அரசாங்கம் கேட்டு அதிலுள்ள அடிப்படை உண்மைகளை உணர்ந்து கொண்டிருக்கின்றனர் என்று தெரிகிறது. இப்போது சென்னைத் துறைமுக விஸ்தரிப்புக்குக் கிடைத்துள்ள உதவியிலிருந்தும், நாட்டின் இதர அபிவிருத்தித் திட்டங்களுக்குக் கிடைத்திருக்கும் உதவியைக் கொண்டும், தூத்துக்குடித் துறைமுகத்துக்குக் கூடத் தீவிரமாகப் பிரயாசைப் பட்டால் அமெரிக்க உதவி கிடைக்கக் கூடும் என்று எதிர்பார்க்கலாம். அந்நியச் செலாவணி மூலம் தருவிக்க வேண்டிய யந்திரங்கள்தான் முட்டுக்கட்டையாக இருக்குமென்றால், இப்போது இதை ஒரு பெரிய இன்னலாகக் கருதவேண்டியதில்லை என்றே எண்ணலாம்! மத்திய அரசாங்கம் இவ்விஷயத்தை நன்கு ஆலோசித்து இப்பிராந்தியப் பிரதிநிதிகள் வகுத்த கோரிக்கைக்கு இணக்கம் தெரிவித்து உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# என்ன சேதி?

## ஜனாதிபதி பதவி

**கா**ங்கிரஸ் ஸ்தாபனத்தைப் புனிதப் படுத்த, பிரதமமந்திரி பதவியை விட்டுச் சிறிது காலம் விலகியிருக்க விரும்புவதாக நேருஜி அறிவித்தபோது, நமது ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் தாமும் வேண்டுமானால் பதவியைத் துறந்து விட்டு, கட்சியைப் பலப்படுத்த வேலை செய்ய முன் வருவதாகச் சொன்னார் என்று சில பத்திரிகைகளில் செய்திகள் வெளிவந்திருக்கின்றன!

ஜனாதிபதி பதவி கட்சிப் பற்றுகளுக்கு அப்பாற்பட்ட ஒரு உயர்ந்த பதவி. ஜனாதிபதியாக இருப்பவர் எல்லாக் கட்சிகளையும் சமமாக நோக்க வேண்டும்; கட்சிச் சார்பிருக்கக் கூடாது. ஆனால் நமது ஜனாதிபதி காங்கிரஸ் கட்சியைச் சீர்ப்படுத்துவதற்காக ஜனாதிபதிப் பதவியை ராஜினாமா செய்வதாகச் சொன்னதனால் அவர் இன்னும் காங்கிரஸ் கட்சிச் சார்புள்ளவர் என்று மக்கள் எண்ணலாம். இது வீண் அபவாதங்களுக்கு இடம் தரும்!

## துணிச்சலைப் பாராட்டுகிறோம்

**அ**ரசாங்கம் செய்யும் செலவுகளைச் சரியாகச் செய்து வருகிறதா என்றெல்லாம் மதிப்பிடத் தில்லி மக்கள் சபையினர் ஒரு மதிப்பீட்டுக் கமிட்டி நியமித்தனர். இந்த மதிப்பீட்டுக் கமிட்டியில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் மட்டுமின்றி மற்றக் கட்சி அங்கத்தினர்களும் இருக்கிறார்கள். திரு பலவந்தராய் மேத்தா இதற்குத் தலைவர். மொத்தம் முப்பது பேர்கள். தமிழ்நாட்டைச் சேர்ந்த திரு வி. ஆர். நரசிம்மன் அவர்களும் திரு ஆர். ராமநாதன் செட்டியார் அவர்களும் இக்கமிட்டியிலுள்ளனர். இந்தக் கமிட்டியினர் ஒவ்வொரு பிரதேசத்துக்கும் விஜயம் செய்து மந்திரிகள், உத்தியோகஸ்தர்கள் எல்லோரையும் பேட்டி கண்டு, சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் நீண்ட கடிதப் போக்குவரத்துகள் நடத்தி, சந்தேக விளக்கங்கள் பெற்று நீண்ட ஆலோசனைக்குப் பிறகு தங்கள் முடிவுகளைச் சமர்ப்பித்திருக்கின்றனர். பல விஷயங்

## கர்ஜிக்கலாம், ஆனால் பல் இல்லையே!




சமீபத்தில் பஸிபிக் மகாசமுத்திரத்தில் பிரிட்டன் அணு ஜலஜன்குண்டு சோதனைகள் நிகழ்த்தியதை ருஷ்யப் பிரதமர் குருசேவ் வன்மையாகக் கண்டித்தார். "பிரிட்டிஷ் சிங்கம் கர்ஜிக்கலாம்! ஆனால் அதைக் கண்டு பயப்படுவோர் இன்று யாருமில்லை" என்றார்.

## காரணம் என்ன?




எகிப்தின் தலைவர் நாஸர் ருஷ்யாவுக்குச் சென்றிருக்கிறார்.

கள் சம்பந்தமாக அவர்கள் முடிவுகள் பத்திரிகையில் வெளியாகி யிருக்கின்றன. அவற்றில் திட்டக் கமிஷனைப் பற்றிய முடிவு துணிச்சலாக இருக்கிறது!

திட்டக் கமிஷனுக்கு ஜவாஹர்லால் நேரு தலைவராக இருக்க வேண்டுமா? மத்திய சர்க்கார் மந்திரிகள் திட்டக் கமிஷனில் இருக்க வேண்டுமா? என்ற சந்தேகத்தைக் கிளப்பிவிட்டிருக்கின்றனர்.

திட்டக் கமிஷன் என்பது, திட்டங்களைப் பற்றிச் சர்க்காருக்கு ஆலோசனை சொல்லும் ஒரு குழு என்று மக்கள் சபையில் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. அத்தகைய குழுவில் திட்டத்தை நிறைவேற்றுபவர்களே, அதாவது மந்திரிகளே அங்கத்தினர்களாக இருப்பது, திட்டக் கமிஷனின் நோக்கத்தைப் பாதிக்காதா என்ற சந்தேகத்தைக்கிளப்பியிருக்கிறது!

ஆலோசனை சொல்பவர்களும் வேண்டும், திட்டத்தை நிறைவேற்றுபவர்களும் வேண்டும். அப்போதுதான் ஆலோசனை சொல்பவர்களுக்குத் திட்டத்தை நிறைவேற்றுவதில் உள்ள கஷ்டங்களையெல்லாம் அவ்வப் போது தெரியப்படுத்த முடியும்!

இதை மதிப்பீட்டுக் கமிட்டி உணராமல் இல்லை! உணர்ந்து அதற்குத் தக்க ஆலோசனையும் கூறியிருக்கிறார்கள்.

"பண்டித ஜவாஹர்லால் நேரு தலைவராக இருக்க வேண்டுமா?" என்று கேட்டது, அவர்கள் துணிச்சலைக் காட்டுகிறது! நேரு நியமித்த கமிட்டியாயிற்றே என்று பயப்படாமல் விஷயத்தை ஆராய்ந்ததற்காக அந்தக் கமிட்டியைப் பாராட்டுகிறோம்!

### உணவில் விஷம்

கேரள ராஜ்யத்திலிருந்தும் தமிழ் நாட்டின் சில பகுதிகளிலிருந்தும் வரும் செய்திகள் நமக்கு நிலைகலங்குவதாக இருக்கின்றன. சர்க்கரையிலும் ஆட்டா மாவிலும் விஷப் பொருள்கள் கலந்திருக்க வேண்டும் என்று அதிகாரிகள் அபிப்பிராயப்படுகின்றனர். அதிலும் உணவுப் பொருள்கள் இறக்குமதியாகும் துறைமுகங்களிலும் கிடங்குகளிலும் ஜாக்கிரதையின்றி யிருப்பதால் இத்தகைய கலப்படங்கள் நேர்கின்றன என்று தெரிகிறது. துறைமுக அதிகாரிகளும் தொழிலாளிகளும் லட்சோப லட்சம் மக்களின்வாழ்வைப்பொறுத்த பொருள்களைக் கையாளுகிறோம் என்ற நினைவுடன் வேலை செய்தால் எவ்வளவோ நன்றாக இருக்கும். இத்தகைய பயங்கர ஆபத்துக்களைத் தவிர்க்கலாம்.

# இலங்கையில் வேலை நிறுத்தம்

—கொழும்பு, மே மீ 2உ.

இலங்கையில் அரசியல் பொருளாதார சமூக வாழ்க்கை எவ்வளவு தூரத்துக்குச் சீர்குலைய முடியுமோ அவ்வளவு தூரத்துக்குச் சீரழிந்து போய்க் கிடக்கிறது. பொது ஜனங்களுக்கு எல்லாம் ஒரே திகைப்பாயிருக்கிறது. இந்த அலங்கோல நிலைமை எங்கு கொண்டு போய்விடுமோ என்று அஞ்சுகின்றனர்.

இலங்கை சர்க்கார் அதனுடைய மொத்த வருமானத்தில் 38 சத விகிதத்தை அரசாங்க ஊழியர்களுக்காகச் செலவு செய்கின்றதாம். அப்படியிருந்தும் வாழ்க்கைச் செலவு விஷம் போல ஏறியிருப்பதை முன்னிட்டு அவர்கள் வாழ்க்கைப்படியை உயர்த்தக் கோரி சென்ற பத்து தினங்களாகக் கட்டுப்பாட்டுடன் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். நாடு முழுவதிலுமுள்ள சகல அரசாங்கக் காரியாலயங்களிலுமாகச் சேர்ந்து சுமார் 25,000 பேர்கள் வேலைநிறுத்தம் செய்வதாகக் கூறப்படுகிறது. தபால் இலாகா வழக்கம்போல் வேலை செய்வதாக அரசாங்கம் சொல்லிக் கொண்ட பொழுதிலும் ஏழெட்டு தினங்களாகத் தபால் பட்டுவாடா சரிவர நடைபெறவில்லை.

இரவு ரயில் போக்குவரத்துகள் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. பகலில் மட்டும் பலத்த காவலுடன் சில இடங்களுக்கு ரயில் போக்குவரத்து நடைபெறுகிறது. சர்க்கார் ஊழியர்கள் நடத்தும் இந்தப் பிரம்மாண்டமான வேலைநிறுத்தத்துடன் கம்யூனிஸ்ட்டு சார்புள்ள இலங்கை தொழிலாளர் சம்மேளனம் தனியார் துறைகளிலும் பல வேலை நிறுத்தங்களை ஆரம்பித்திருக்கிறது. இந்த வேலைநிறுத்தங்கள் சமூக வாழ்வையே சீர்குலைத்துள்ளன. துறைமுகத்தில் வேலை நிறுத்தம் நடப்பதினால் நான்கு கோடி பவுண்டு தேயிலை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாக முடியாமல் தேங்கிக் கிடக்கிறது. கப்பலில் இலங்கைக்காக வந்திருக்கும் பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் இறக்கப்படாமல் கப்பல்களிலேயே கிடக்கின்றன.

வேலை நிறுத்தக்காரர்கள் வேலைக்குத் திரும்பினால் மட்டுமே சமரசம் பேச முடியுமென்று அரசாங்கம் பிடிவாதமாயிருக்கிறது. தங்களுடைய கோரிக்கைகள் நிறைவேறினால் ஒழிய வேலைக்குத் திரும்புவதில்லையென்று அரசாங்க ஊழியர்களும் தொழிலாளர்களும் கண்டிப்புடன் இருக்கின்றனர்.

* * *

தீவிர சிங்கள வகுப்புவாதிகளான சிங்கள ஜாதிக பெரமுனையைச் சேர்ந்தவர்கள் நேற்று அனுராதபுரியில் துட்டகமுனு சிலையின் முன்னால் ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். துட்டகமுனு என்பவர் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்னால் தமிழர்களை வேட்டையாடி இலங்கையில் சர்வ சிங்கள ஆதிக்கத்தை நிலைநிறுத்திய சிங்கள மன்னனாவான். அவனுடைய சிலைக்கு முன்னால் திரு ராஜரத்னா என்பவரும் அவரது கட்சியைச் சேர்ந்த சிங்கள தீவிரவாதிகளும் ஒரு வார காலம் 'தமிழர் சம்ஹார' இயக்கத்தை நடத்துவதென்று பிரதிக்ஞை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். தமிழர் சம்ஹார இயக்கம் என்பது பெயரளவில் பயங்கரமாக இருப்பினும் அதன் நோக்கம் ஒரு வார காலம் வரையில் தமிழர்களைச் சகல விதங்களிலும் பகிஷ்கரிப்பதாம். அதாவது தமிழர்களுடன் ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை. தமிழர் கடைகளில் ஏதும் வாங்குவதில்லை, யாழ்ப்பாணத்தில் உற்பத்தியாகும் சுருட்டு முதலியவைகளை ஒரு வாரம் உபயோகிப்பதில்லை—இதுதான் தமிழர் சம்ஹார இயக்கமாம். இம்மாதிரி இயக்கம் தமிழர் நடத்தும் சத்தியாக்கிரகப் போராட்டத்துக்குப் போட்டியாக நடத்தப்படுவதாய்ச் சொல்லிக் கொள்ளப்படுகிறது. தமிழர்கள் நடத்துவது உரிமைப் போராட்டம். அது அரசாங்கத்தை எதிர்த்து நடத்தும் போராட்டம். சிங்களவர்களுக்கு விரோதமான போராட்டமல்ல. தீவிர தமிழ்ப் பிரதேசங்களில் வசிக்கும் சிங்களவர்களுக்குச் சகல பாதுகாப்புகளையும் அளிக்கும் பொறுப்பைத் தமிழர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். சிங்கள தீவிரவாதிகள் நடத்தும் போராட்டமோ தமிழர்களை விரட்டும் போராட்டம்.

—ரஜனி



அவள் அழகி — அவள் அருகாமை
மகிழ்ச்சியூட்டுகிறது
அவள் உபயோகிப்பது
டாடாவின்




# ஜேய்

மணங்கமழும் மணமுள்ள சௌம்யமான டாய்லெட் சோப்பு!

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

TJ 5635

# அருள் வாக்கு

ஸ்வராஜ்யத்துக்கு மேம்பட்டது ஸ்வாராஜ்யம். பேத வாதத்தைக் கொண்டு பார்த்தால், ஈஸ்வரன் ராஜா; நாம் அவனினும் வேறுபட்ட பிரஜைகள்.

ஈஸ்வரன் தன்னினும் வேறுபட்டதான ஒரு உலகைத் தனியே சிருஷ்டித்து அவ்வுலகின் ஆட்சியைத் தான் ஏற்றுக் கொண்டானா? இல்லை. உலகம் அவனினும் வேறு பட்டதன்று. கண்ணுக்குப் புலனாவதெல்லாம் அவனுடைய ஸ்வரூபம்தான். ஈஸ்வரனேதான் மரமாயும், செடியாயும் மற்றும் நாம் பார்க்கும் எல்லா வஸ்துக்களாகவும் தோற்றமளிக்கிறான். இது அவனுக்கு ஒரு லீலை. சிறு பிள்ளைகள் தாங்களே தங்கள் கண்களைக் கட்டிக்கொண்டு கண்ணாமூச்சி விளையாடுகிறார்கள். அதுபோல்தான் ஈஸ்வரனின் விளையாட்டும். ஸீதை காணவில்லை என்று ராமன் துக்கப்பட்டதெல்லாம் இந்த லீலையில் சேர்ந்ததுதான். மண்ணிலிருந்து மரம் முளைக்கிறது. மண்ணின் பலத்திலேயே வளர்கிறது. கடைசியில் மரம் பட்டுப்போய் மண்ணாகவே ஆகிவிடுகிறது. அதேமாதிரிதான் உலகமும்.

கடவுளிலிருந்துதான் உலகம் தோன்றுகிறது. அவரையே ஆதாரமாகக் கொண்டுள்ளது. முடிவில் அவரிடமே லயமாகி விடுகிறது. பிரபஞ்சமெல்லாம் அந்த ஒரு பகவானின் தோற்றம்தான். மற்றவையெல்லாம் மாயை. நாயன்மார் பாடியுள்ளதுபோல் 'வாழ்வாவது மாயம். அது மண்ணாவது திண்ணம்.' அந்த ஒன்றான பரப்பிரும்மம் பலவிதமாகத் தோற்றமளிப்பது பராசக்தியினால். சக்தியையும் சக்திமானையும் நாம் பிரித்துப் பேசினாலும் அவர்கள் உண்மையில் ஒன்றுதான். சக்தி தாய். சக்திமான் தந்தை. சக்திமான் ஞானம் (அறிவு); தாய் ஆனந்தம். இவர்களுடைய ஒன்றுபட்ட ஸங்கல்பத்தால் பிரபஞ்சம் தோன்றுகிறது.

வேதாந்தம் 'பிரபஞ்சம் எல்லாம் ஈச்வரன்' என்று மாத்திரம் போதிக்கவில்லை. நாம் ஒவ்வொருவரும் அந்த ஈச்வரன் என்றும் போதிக்கிறது. அவன்தான் நான்; நான்தான் அவன். ஒரு அரசனுக்கும் பிரஜைக்கும் உள்ள சம்பந்தம் பயத்தினால் உண்டாவதானால் அது அரசாட்சி முறையாகும். ஆனால் இருவரும் ஒன்றுதான் என்ற ஞானத்தினால் பரஸ்பர உறவு உணரப்படுமாயின் இந்த உணர்ச்சி நிலைதான் உண்மையான ஸ்வாராஜ்யம். இந்த ஆனந்த அனுபவத்தைத்தான் பேதமற்ற தன்மையாகிற தத்துவத்தை, அத்வைதத்தை ஸ்ரீ சங்கர பகவத்பாதர் உபதேசித்தார். ஸர்வ வியாபியான பரமாத்மாவும், ஜீவாத்மாவும் வெவ்வேறல்ல. கடலில் எழும்பும் அலைகள் நுரைக் குமிழி போன்றதே. ஒன்றின் உற்பத்தி ஸ்தானமே அதன் லயமாகவும் இருக்குமானால், அதுவே அதன் ஸ்வரூபமாகிறது.

அட்டைப்பட விளக்கம்

# ஓலையும் உள்ளமும்

"ஸார்! போஸ்ட்!" என்ற குரல் கேட்டவுடன் வீட்டிலுள்ள தொண்டு கிழம் முதல் தொட்டில் குழந்தை வரையில் வாசலில் ஓடி வருவதைப் பார்க்கிறோம்.

ஏதோ ஒரு செய்தி எங்கிருந்தோ யாரோ அனுப்புவார்கள். இதை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் அப்படிப் பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறது!

"ஸார்! எனக்குக் கடிதம் வந்தால் பதில் போடுகிற வழக்கமே கிடையாது. எனக்கு ஓர் இடத்தில் உட்கார்ந்து பதில் எழுத ஏது நேரம்?" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்பவர்கள் எத்தனையோ பேர்கள் உண்டு. இவர்கள் எல்லாம் தபால் எதிர்பார்க்க நியாயமே கிடையாது! இருந்தாலும் இவர்கள் வாசல் வழியாகத் தபால்காரர் போனால் சும்மா விடுகிறார்கள் என்கிறீர்களா? அதுதான் கிடையாது! "என்ன தபால்கார ஐயா! நமக்கு ஒன்றும் கிடையாதா?" என்று ஒரு கேள்வி போட்டு வைப்பார்கள்!

ஏன்? எங்கிருந்தாகிலும் ஏதாகிலும் தபால் வரும் என்ற ஆர்வம்தான்! நமக்குத் தெரிய முடியாத எதிர்பார்க்காத இன்பச் செய்தி ஏதாகிலும் எங்கிருந்தாகிலும் வரக்கூடாதா என்ற உள்ளத்தின் தாபம் தான் அப்படியெல்லாம் கேட்கச் செய்கிறது!

சாதாரண மக்கள் பாடே இப்படியென்றால் காதல் நிலையிலிருப்பவர்கள் பாடு எப்படியிருக்கும்! ஒவ்வொரு காதலியும் தன் காதலனிடமிருந்து ஏதாகிலும் கடிதம் வராதா என்று எவ்வளவு ஏக்கம் கொள்வாள். அதே போல் ஒவ்வொரு காதலனும் தன் காதலியிடமிருந்து ஏதாகிலும் வராதா என்று எவ்வளவு ஏங்குவான்!

இது இன்று நேற்று ஏற்பட்ட மனோபாவம் அல்ல. மனித வர்க்கம் இந்த மாநிலத்தில் தோன்றிய நாளிலிருந்து இருந்து வரும் ஒரு மனோபாவம்.

காகிதமும் கார்டும் கவரும் தபால்காரரும் ஏற்படுவதற்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் நாட்டில் காதலர்கள் பலப்பல விதமாகப் பேசிக் கொண்டார்கள். வண்டிடம் செய்தி சொல்லி யனுப்பினார்கள். கிளியைத் தூது விடுத்தார்கள். மேகத்தைத் தூது போகச் சொன்னார்கள்!

ஒரு யக்ஷன் தன் காதலிக்கு மேகத்தின் மூலமாகத் தன் உள்ளத்தைத் திறந்து காட்டிச் செய்தி சொல்லி யனுப்பிய வரலாறுதான் 'மேக ஸந்தேசம்' என்ற அற்புத காவியம். மகாகவி காளிதாஸனின் கற்பனை ஊற்று பொங்கியோடும் காவியம். அது உலக இலக்கியங்களில் ஒன்றாக மதிக்கப்படுகிறது.

அதேபோல் தமிழில் தூதுப் பிரபந்தங்கள் எத்தனையோ!

நம் நாட்டில் காதலிகள் கிள்ளையையும், பூவையையும், வண்டையும், நாரையையும், தூது விடுத்ததோடல்லாமல் ஓலை மூலமும் எழுதியும் அனுப்பினார்கள். எழுத்து என்று வரும்போது ஒரு தொல்லை எழுகிறது.

உள்ளத்தில் உள்ள உணர்ச்சியை வெல்லாம் கொட்டி எவ்வளவு எழுதினாலும், அது சரியாக எழுதினதாகத் தோன்றுவதில்லை. அதனால் எழுதி எழுதிக் கிழித்தெறிய வேண்டியிருக்கிறது! இதைப்பார்க்கும்போது தனக்கே ஏதோ பைத்தியம் பிடித்து விட்டதோ என்ற சந்தேகம் கூட எழுதுபவர்க்கு வந்துவிடுகிறது.

இதைக் கிளிக்கண்ணி ஆசிரியர் வெகு அழகாகச் சொல்லுகிறார்:

[மாலைவடி வேலவர்க்கு
  வரிசையாய் நானெழுதும்
ஓலைகிறுக் காச்சுதே-கிளியே
  உள்ளமும் கிறுக்காச்சுதே!]

இப்படிக் காதல் வெறியினால் உள்ளம் கிறங்கிப் போய்க் காதலனுக்கு ஓலை எழுதும் ஒரு மங்கையை இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்கி யிருக்கிறார் நமது ஓவியர் வினு. பழங்காலச் சிற்பத்தை மனத்தில் கொண்டு எழுதப்பட்ட ஓவியம்!

இதுவரை எத்தனை ஓலைகள் எழுதி எழுதிக் கிழித்துவிட்டாளோ தெரியவில்லை! இந்த ஓலை எழுதஆரம்பிக்கும்போதே, 'சரியாகவருகிறதா?' என்று சந்தேகம் எழுந்து தயங்கி நிற்கும் நிலையும், உள்ளத்தில் அலைமோதும் காதல் உணர்ச்சி முகத்தில் பிரதிபலிப்பதையும் நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். அழகிய வண்ண ஓவியம். -எஸ்.வி.எஸ்

# வள்ளுவர் வாசகம்

**ராஜாஜி**

## 29

இவன் யோக்கியன் என்று எண்ணி ஒருவன் உனக்கு இடம் தருகிறான். அவனை ஏமாற்றி நம்பிக்கைத் துரோகம் செய்து அவன் மனைவியின் கற்பைப் பிழைபடச் செய்தாயானால் உயிரற்ற பிணத்துக்குச் சமானமாவாய். நல்லுணர்ச்சியும் அறிவும் கொஞ்சமேனும் இருந்தால் அவ்வாறு செய்யக் கூசுவாய்.

> **விளிந்தாரின் வேறல்லர்**
> **மன்ற தெளிந்தார்இல்**
> **தீமை புரிந்துஒழுகு வார்.**

விளிந்தார்—செத்தார். தெளிந்தார் இல் – தெளிந்தாருடைய இல்லம் – சந்தேகப்படாமலே இடம் கொடுத்த ஒருவனுடைய மனைவியினிடம். தீமை புரிந்து ஒழுகுவார்—பிறன் மனைவியை விழைதல் என்னும் குற்றத்தில் அகப்பட்டுப் பாப காரியம் செய்பவர்கள். விளிந்தாரின் வேறல்லர் மன்ற—செத்த பிணத்துக்குச் சமானமாவார், இதில் சந்தேகமில்லை. 'மன்ற' என்பது நிச்சயம் குறிக்கும் ஒரு பழைய சொல்; Indeed என்கிற ஆங்கிலச் சொல்லைப் போல். நம்பினவனுடைய குடும்பத்தைக் கெடுக்கும் இழிவான பாப எண்ணத்தைக் கொள்வதை விடச் சாதலே நலம். இதைக் குறிப்பதற்காக இறந்தாருக்குச் சமானம் என்றார்.

கொஞ்சம் யோசித்தாலும் இந்தக் குற்றம் இழிவைத் தரும் என்பது விளங்கும். அப்படிப்பட்ட குற்றத்தில் அவிவேகமாகச் சிக்கிக் கொள்ளும் மனிதன் வேறு விஷயங்களில் எவ்வளவு மேன்மை பெற்றிருந்த போதிலும் உதவாது.

> **எனைத்துணையர் ஆயினும்**
> **என்னாம் தினைத்துணையும்**
> **தேரான் பிறன்இல் புகல்.**

[தேரான் புகல்—தேராது புகுதல். சரியாக யோசியாமல் புகுதல்.]

இல்லத்தில் புகுதலாவது இல்லற வாழ்க்கையின் சிறப்பாகிய கற்புக்குச் சிதைவு உண்டாக்குதல், குடியைக் கெடுக்கும் செயல்.

என்ன கல்வியும் செல்வமும் வேறு பெருமையும் பெற்றவனாயிருந்தும் அவமானம் அடைவான். தப்புவதற்கு வழியில்லை.

இந்தப் பாபச் செயல் மிக எளிதாகத் தோன்றும். கஷ்டமின்றி இன்பம் அனுபவித்து விடலாம் என்று அந்த வேளையில் தோன்றும். ஆனால் அடையும் பயனோ நீடித்து நிற்கும் பழி. காமத்தின் வேகம் புத்தியை மயக்கி இதைக் காணாமற் செய்து விடுகிறது.

> **எளிதென இல்இறப்பான்**
> **எய்தும் எஞ்ஞான்றும்**
> **விளியாது நிற்கும் பழி.**

கருதிய சிற்றின்பம் பெறுவது எளிதாகவே இருக்கலாம். ஆனால் எய்தும் பயன் பழி, என்றைக்கும் மறையாத பழி.

'இறத்தல்' என்றால் எல்லை மீறுதல். இல் இறத்தல்—எல்லையைத் தாண்டிப் பிறன் மனைவியைத் தீண்டல், தனக்குச் சேராத இல்லத்தில் புகுதல்.

குற்றத்தில் வீழ்வது மிக எளிதாகவே இருக்கும். ஆனால் பழியோ காலம் உள்ள வரையில் நீங்காது. காம வசத்தில் சிக்கி அறிவு இழந்து விட்ட சமயத்தில், இவ்வளவுதானே என்றும் அதனுடன் தீர்ந்து போகும் என்றும் ஒருவன் எண்ணுவான். அடையும் இன்பம் ஒரு கணத்துக்கு. பழியோ என்றைக்கும் அனுபவிக்கவேண்டியதாகும். குற்றம் செய்வது மிக எளிது. அதனால் எய்தும் துயரமோ மிகக் கடினம்.



# விட்ட

## சிறு சேமிப்பு

சிறு சேமிப்புத் திட்டம் சமீபத்தில் செயல்பட்டு, நிறைவேறியுள்ளது. பெரும்பான்மையான மக்கள் அதில் பங்கு கொண்டனர். இதில் பெரும் பணக்காரர்கள் பங்கு கொள்வதைவிட, சிறு வருவாய் உள்ளோரே அதிகம் கவனம் செலுத்துதல் வேண்டும். அத்தகையோர் இதில் தாராளமாகக் கலந்து கொள்ள முடியாதபடி சில இடையூறுகள் உள்ளன. சிறு சேமிப்புப் பத்திரங்களின் குறைந்த மதிப்பு ரூபாய் ஐந்தாக இருக்கிறது. இதை இன்னும் குறைந்த மதிப்புடைய பத்திரங்களாக வெளியிடலாம். ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் மதிப்புடைய பத்திரங்கள் வெளியிட்டால் இதில் கலந்து கொள்வோரின் தொகை இன்னும் அதிகமாகும்.

பாலூர் சத்திரம்
15—4—58 — இளங்கோ

## பயிற்சிக் காலம்!

ஓராசிரியர் பாடசாலை ஆசிரியர்கள் மூன்று ஆண்டுகள் அல்லது முப்பது மாதங்களுக்குப் பிறகு தங்கள் வேலையினின்றும் நீக்கப்படுவார்கள்; அல்லது இரண்டு வருட நிரந்தர ஆசிரியர் பயிற்சிக்குச் செல்ல வேண்டும் என்று ஜில்லா போர்டு மூலம் அறிந்தேன்.

நாங்கள் மூன்று வருட காலம் ஒரே சிற்றூரில் அமர்ந்து ஆசிரியர் தொழிலைச் சிறப்புற நடத்தி உள்ளோம். ஒன்று முதல் ஐந்து வகுப்புகள் வரை போதித்திருக்கிறோம். ஆக நாங்கள் பயிற்சி பெறவேண்டிய பகுதி, 6, 7, 8ம் வகுப்புகளுக்கு எவ்வாறு போதிப்பது என்பதே ஆகும். இதைக் கற்றுக்கொள்ள ஓராண்டு போதாதா? இரண்டு ஆண்டுகள் பயிற்சிவைத்து ஏன் கஷ்டப்படுத்த வேண்டும்?

ஊரூர்
8—4—58 — இ. சிதம்பரம்

## 'வானொலி' நிலையங்கள்

அதிகாரிகள் வானொலிப் பெட்டியை மலிவாகச் செய்ய வேண்டும், எல்லோரும் உபயோகிக்கக் கூடியதாக இருக்கவேண்டும் எனச் சொல்லுகிறார்கள். ஆனால், ரேடியோ வைத்திருப்பவர்களில் சிலர் அதை எதற்காக வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று நினைக்கிறார்கள். மதராஸிலிருந்து ஒலிபரப்பப்படுவதைப் பாதிக்கு மேல் நன்றாக வடக்கே இருக்கும் ஜனங்கள் கேட்க முடிவதில்லை. சிற்றலையில் ஒலிபரப்பாகும் பாட்டும், செய்திகளும் முக்காலுக்கு மேல் தமிழில் இல்லை. தமிழில் ஒலிபரப்பப்படும் பகுதியில் முக்காலுக்கு மேல் கேட்க முடிவதில்லை. நமது தேசத்தில் இருக்கும் மூன்று சக்தி வாய்ந்த ஒலிபரப்பிகள் பெரும்பாலோருக்கு உபயோகம் இல்லாமல் இருந்து வருகின்றன. மதராஸில் இருப்பதைக் கர்நாடக சங்கீதத்துக்கும், பம்பாயிலிருப்பதை ஹிந்துஸ்தானி சங்கீதத்துக்கும், டில்லியில் இருப்பதை அகில இந்திய சமாசாரங்கள், முக்கியமாக ஒவ்வொரு நாள் இரவு 8-30 மணிக்கு ஒலிபரப்பப்படும் செய்திச் சுருள் ஒலிபரப்புவதற்காகவும் உபயோகப்படுத்தினால், ஆயிரக்கணக்கான மக்கள் நாட்டில் எந்தப் பாகத்திலிருந்தாலும் கேட்டு ஆனந்தமடைவார்கள்.

பம்பாய்
8—4—58 — கே. எஸ். ராஜகோபால்

## தாமதம் ஏன்?

திருநெல்வேலி ஜில்லா, சங்கரன்கோவில் தாலுக்கா இளையரசனேந்தல், இனாம் லக்ஷ்மி அம்மாள்புர அக்ரஹாரம் கிராமம், ஜமீன் ஒழிப்பில் எடுக்காமல், 1947-வது வருஷத்து ஆர். ஆர். சட்டப்படி இனாம்தார்களின் தீர்வை வருவலைச் சர்க்கார் ஏற்று வசூல் செய்து வருகிறது. சர்க்காருக்கு 35 இனாம்தார்கள் செலுத்த வேண்டிய, குயிட்ரெண்ட் கழித்து, மீதியுள்ள தொகை இனாம்தார்களுக்குக் கிடைக்க வேண்டும். அந்தத் தொகைகளை இனாம்தார்களுக்கு அளிக்கும்படி போர்டார் அனுமதியளித்து நான்கு மாதங்கள் ஆகியும் இன்னும் கொடுக்கப்படவில்லை. அது சம்பந்தமாக மேலதிகாரிகளுக்குத் தெரிவித்தாலும், பலன் இல்லை.

தாலுக்கா ஆபீசில் காரணமின்றித் தாமதப் படுத்தி வருகிறார்கள். ஆகையால் இது வரை தொகைகளைப் பட்டுவாடாச் செய்யாததின் காரணத்தை விசாரித்து, உடனே பணம் கிடைக்க வழி செய்ய வேண்டும்.

இளையரசனேந்தல்
7—4—58 — ஏ. எம். வெங்கட சுப்பிரமணியம்

## பகல் சாப்பாடு!

பள்ளிகளில் மத்தியான நேரத்தில் ஏழை மாணவர்களுக்கு உணவு அளிக்கும்படி சர்க்கார் ஒரு திட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள். இதன்படி பையன் ஒருவனுக்கு 6 நயா பைசா வீதம் கொடுக்க வேண்டும். இதைத் தவிர 3 நயா பைசா மக்களிடமிருந்து வசூலிக்க வேண்டும் என்பது அத் திட்டமாகும். ஆனால் இன்று பள்ளிகளில் நடப்பதென்ன? பையன் ஒருவனுக்கு 6 நயா பைசா வீதம் கொடுப்பதை முன்பணமாகக் கொடுப்பதில்லை. பகல் சாப்பாடு மட்டும் கண்டிப்பாகப் போட வேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார்கள். வெறும் கை முழம் போடுமா? அன்றாட வாழ்வுக்கே அல்லல்படும் ஆசிரியர்கள், முன் பணமாகப் போடுவதற்கு எங்கே போவார்கள்? சிறு சேமிப்புத் திட்டம், தேசியத் திட்டம் என்று ஒவ்வொன்றுக்கும் மக்களிடம் சொல்லும்பொழுது அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இந்த நேரத்தில் அவர்களிடம் இதற்குப் பணம் எப்படி எதிர்பார்க்க முடியும்?

இத்தனை ஆயிரம் குழந்தைகளுக்கு இலவச உணவு அளிக்கப்படுகிறது என்று சட்டசபை



யில் சண்டப்பிரசண்டமாகப் பிரசங்கம் செய்யும் அன்பர்கள், ஏற்படுத்தப்பட்ட இட்ட ரூபாயையாவது முன் கூட்டியே அனுப்ப ஏற்பாடு செய்ய வேண்டாமா?

திருப்பரங்குன்றம் 18—4—'58 டி. ராமசுப்பு

## ஆழ்ந்த கருத்துக்கள்

புத்தாண்டு மலரில் ஆரம்பமாகியிருக்கும் 'பொங்கி வரும் பெரு நில'வைப் படித்து வருகிறேன். தெளிவான ஆழ்ந்த கருத்துக்கள் பொதிந்த அழகான தமிழில் திரு கி. ராஜேந்திரன் அவர்கள் எழுதி வருகிறார். இயற்கைக் காட்சிகளின் வர்ணனைகளும், கதாபாத்திரங்களின் சம்பாஷணைகளும் இயற்கையாக அமைந்திருக்கின்றன. அவருடைய கலைத்திறன் வாழ இறைவனை வேண்டுகிறேன்.

ஆதம்பாக்கம் 18—4—58 ஸரோஜா—ராமமூர்த்தி

## பிரச்னை நிரந்தரமாகத் தீர வழி

கல்கி 20-4-58 இதழில் 'கைத்தறியும் கண் துடைப்பு உதவியும்' என்ற தலையங்கத்தைப் படித்தேன். நமது பாரத நாட்டில் அல்லலுறும் ஏழை நெசவாளர்களின் நிலையைப் பற்றியும் அரசாங்கம் என்ன செய்ய வேண்டுமென்பதையும் மில் துணிகளுக்கும் கைத்தறித் துணிகளுக்கும் போட்டியில்லாமல் இருக்க வேண்டுமென்பது பற்றியும் கூறியிருப்பது மிகத் தெளிவாகவும் அழகாகவும் இருந்தது. ஆனால் ரிபேட் வழங்கும் முறை கூட்டுறவுச் சங்கத்துக்கு மட்டுந்தானே. கூட்டுறவில் இடம் பெறாத நெசவாளர்களுக்கு இந்த உதவி கிடைக்காது என்பது குறிப்பிடப்பட்டிருந்தது.

கூட்டுறவுச் சங்கத்தில் சேராத நெசவாளர்கள் அனைவரும் மாஸ்டர்வீவர்களிடம் சேர்ந்து வேலை செய்து வருகிறார்கள். மாஸ்டர் வீவர்கள் அவர்களுக்குத் தயக்கமில்லாமல் வேலை கொடுத்து வருகிறார்கள். ஏனெனில் அவர்களிடம் உற்பத்தியாகும் சரக்குகள் தேங்குவதில்லை. உடனுக்குடன் வாடிக்கையாக இருக்கும் பெரிய வியாபாரிகளுக்கு மார்க்கட் நிலவரத்தை அனுசரித்துக் கடனுகக் கொடுத்து, தவணையாகத் தொகையை வசூல் செய்து கொள்வது வழக்கம். கூட்டுறவுச் சங்கத்தில் உற்பத்தியாகும் துணிகள் என்ன அடக்கம் ஆகிறதோ, அதில் குறிப்பிட்ட லாபம் வைத்து ரொக்கமாகத்தான் விற்க வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும் விலை கூடுதலாகவோ குறைவாகவோ விற்க முடியாது. முக்கியமாக நூல், ஜரிகை, பட்டு முதலிய தளவாடச் சாமான்களும் ரொக்கமாகத்தான் கொள்முதல் செய்ய வேண்டும். வியாபாரிகளைப் போல் கடனுக்குக் கொடுத்து வாங்கும் வசதி கூட்டுறவுச் சங்கங்களுக்கும் இருந்தால் சங்கம் நீண்டகாலம் நிலைக்க முடியாதென்பது தெளிவு. ஆனால் ஜவுளி அடிக்கடி தேக்கம் ஏற்படுவது கொஞ்சம் குறையலாம். எனினும் பின்னர் பண நெருக்கடி ஏற்படும். ஆகவே இப்படிப்பட்ட சூழ்நிலையில் சங்கம் நடத்தி வரவேண்டியிருப்பதால் அரசாங்கம் கூட்டுறவுச் சங்கத்துக்கு ரிபேட் என்ற முறையை வைத்துத் துரித விற்பனைக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

கடந்த நான்கு மாதங்களாக ரிபேட் 6 நயாபைசா இருந்து வந்ததில் வியாபாரம் நடைபெறாமல் ஜவுளிகள் தேக்கம் ஏற்பட்டு மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. தற்சமயம் 11-4-58 முதல் 12 நயாபைசா கொடுத்து வருவதால் ஓரளவு தேக்கம் குறைந்துவிட்டது என்று சொல்லலாம். ஆனால் எத்தனை நாட்களுக்கு என்று பார்த்தால் இரண்டு மாதங்களுக்குத்தானே. பிறகு என்ன செய்வது? தாங்கள் சொல்வது போல, ''பழைய குருடி கதவைத்திறடி'' என்பது போல இல்லாமல் ரிபேட் 12 நயா பைசாவாக நீடித்து வந்தால் தான் நெசவாளர்களுக்குத் தாமதமில்லாமல் வேலை கொடுத்துச் சங்கமும் நன்றாக நடக்க முடியும். அல்லது நமது அரும்பெரும் தலைவர் ராஜாஜி அவர்கள் சொல்லிவந்தது போல் மில்களுக்கும், கைத்தறிக்கும் போட்டியில்லாமல் உற்பத்தி ரகங்களைப் பிரித்துப் பாகுபாடு செய்ய வேண்டும்.

திருநாகேஸ்வரம் 19—4—58 வீ. சுவாமிநாதன்

## சாலை வசதி தேவை!

சிதம்பரம் தாலுக்கா ஸ்ரீ ஆதிவராக நல்லூரிலிருந்து சுமார் ஒரு மைல் தூரத்துக்கு மண் ரஸ்தா மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது; நீண்ட நாட்களாகவே இப்பாதை கவனிக்கப்படாமல் இருந்து வருகிறது. கிராமத்து மக்கள் வண்டிகளை ஓட்டிக் கொண்டு செல்வது மிகவும் கஷ்டம். ஏராளமான மாட்டு வண்டிகள் போய்வர வேண்டியிருக்கிறது.

ஆகையால் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் தக்க நடவடிக்கைகள் எடுத்து இவ்வூருக்கு நல்ல சாலை வசதியை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

ஸ்ரீ ஆதிவராகநல்லூர் 29—4—58 எஸ். சேதுமாதவன்

## கல்வி நிலை

சர்க்காரின் புதிய உத்தரவுப்படி 1—7—58 முதல் புதிய ஆசிரியர்களை நியமிக்க முடியாத நிலை ஏற்படுகிறது. இதன்படி வரும் ஜூலை மாதம் முதல் ஒரு ஆசிரியர் விலகினால் அந்த இடத்தில் மற்றொரு ஆசிரியரை நியமித்தால் ஒவ்வொரு வகுப்புக்கும் 35 மாணவர்களுக்குக் குறையாமல் இருக்க வேண்டும். எனவே ஒரு வகுப்புக்கு 25 மாணவர்கள் என்பது 35 மாணவர்கள் ஆகவேண்டி இருக்கிறது. ஆரம்பக் கல்வி கற்போரின் எண்ணிக்கை தொண்ணூறு சத விகிதம் ஆக்க வேண்டும்

மனைவி: வீட்டில் இனிமேல் டெலிபோன் வைக்காதீர்கள். நம்ம ஜிம்மி



அதை எலும்புத் துண்டு என்று நினைத்து அடிக்கடி கௌவிக் கொண்டு விடுகிறது!

என்ற திட்டப்படி இந்தப் புதிய உத்தரவு வெளியிடப்பட்டிருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் புதிதாகப் பயிற்சிபெற்று வந்திருக்கும் ஆயிரக்கணக்கான ஆசிரியர்கள் இந்தப் புதிய உத்தரவால் வேலை கிடைக்காத நிலை ஏற்படுகிறது.

எனவே சர்க்கார், இந்தப் புதிய உத்தரவை நீக்கி, கட்டாயக் கல்வியை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்.

கோவை
24—4—58 ஆர். எஸ். மல்லையன்

## தனிப்பெரும் தலைவர்

தமிழ் நாட்டின் தனிப்பெரும் தலைவர் ராஜாஜி அவர்கள் கூறுவதை ஆட்சேபிப்பதையே வடநாட்டுத் தலைவர்கள் இப்பொழுது வழக்கமாகக் கொண்டுள்ளார்கள். வடநாட்டில் நவகாளி, திப்ருரா முதலிய இடங்களில் வகுப்புவாதக் கலவரம் தலைதூக்கி நின்றபொழுது மேற்கு வங்க கவர்னராகப் பதவி ஏற்று, திறம்பட நிர்வாகம் நடத்தினர். 1937-ல் சென்னை மாகாணப் பிரதமராகப் பதவி ஏற்று, ஆலயப் பிரவேசச் சட்டம், கடன் மசோதா சட்டம் முதலியன கொண்டு வந்து, மக்களுக்கு நன்மைகள் செய்தார். 1952 ல் சென்னை ராஜ்யப் பிரதமராகப் பதவியேற்று உணவு கண்ட்ரோலை எடுத்து மக்களுக்கு நன்மை செய்தார்.

அத்தகைய அரசியல் சாணக்கியரின் புத்திமதியைக் காங்கிரஸ் தலைவர்கள் கேட்டு, அதன்படி நடக்க ஆண்டவன் நல்ல புத்தியைக் கொடுப்பாராக.

திருச்சிராப்பள்ளி
1—5—58 அருணா நமசிவாயம்

## சம்பளம் கொடுக்கத் தாமதம்

திருச்சி மாவட்ட மன்றத்தின் கீழ் பணிபுரியும் ஆசிரியர்கள் பலர். அவர்களுக்கு அனுப்ப வேண்டிய முதல் மாதச் சம்பளம் மறுமாதம் 30 தேதி ஆகியும் (மார்ச்சு ஏப்ரல்) இரண்டு மாதங்களாகத் தாமதப் படுத்தப்பட்டு அனுப்பப்படுகிறது. ஆங்காங்கே அவதியுறும் ஆசிரியர்களின் அவல நிலையை அரசாங்கத்தார் அறிந்து ஆவன செய்யக் கூடாதா? மாதச் சம்பளம் 20, 18 தேதிகளில் கிடைத்து வந்தது. இப்போது மார்ச்சு, ஏப்ரல் இரண்டு மாதங்களாக மறுமாதம் 30 தேதி ஆகியும் முதல் மாத ஊதியம் கிடைத்தபாடில்லை. இதன் காரணம் யாதோ? அவதியுறும் ஆசிரியர்கள் அல்லல்பட்டுக் கொண்டிருக்க வேண்டியதுதானா? ஜனநாயக நாட்டில் ஆசிரியப் பணி உயர்ந்ததெனக் கருதப்பட்டும், ஆசிரியர்களின் சம்பளத்தைக் காலம் தவறாமல் அனுப்பி அவர்களின் தொல்லையைத் தீர்த்து வைக்கக் கூடாதா?

திருச்சி
29-4-58 ஒரு தனி ஆசிரியர்.

## இலங்கைத் தமிழர் நிலை

இலங்கையை வளம் பெறவும் செல்வம் கொழிக்கும் நாடாகவும் செய்தவர் தமிழர். தேயிலை, காப்பி, ரப்பர்த் தோட்டங்களைச் செப்பனிட்டுத் தமது உயிரை ஈந்தவர் தமிழர். ஆனால் இன்று இலங்கையில் தமிழர் படும் அல்லல் சொல்லி முடியாது. தமிழரை இலங்கையை விட்டு விரட்டுவதற்குத் தினம் ஒரு சட்டமும் கிளர்ச்சியும் நடந்து வருகிறது. இலங்கையிலிருந்து இந்தியா வந்த தமிழர்களுக்கு இவ்விடமும் விமோசனம் கிடைக்க வழியில்லை. நமது சர்க்கார் இலங்கையிலிருந்து இங்கு வந்தவர்களுக்கு வேலையும் தொழிலும் கொடுக்கப்படும் என்று அறிக்கை விட்டிருந்தார்கள். இன்று வரையும் ஒரு வித நடவடிக்கையும் எடுத்ததாகத் தெரியவில்லை. நமது சர்க்கார் உடனடியாக இலங்கையிலிருந்து இந்தியா வந்தவர்களுக்கு வேலையும் தொழிலும் கொடுத்து அவர்களுடைய கஷ்ட நஷ்டங்களை ஓரளவு தீர்க்க முன்வர வேண்டும்;

அம்பலசேரி
28—4—58 முத்தையா

## தோல் பதனிடும் தொழில்

நமது பாரத நாட்டின் செல்வங்களில் பதனிடப்படும் தோலும் ஒன்று. ஆண்டு தோறும் ஏறத்தாழ முப்பது கோடி ரூபாய் பெறுமானமுள்ள பதம் செய்யப்பட்ட தோல்கள் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. இன்று வரையிலும் உலக நாடுகளுக்குப் பதம் செய்யப்பட்ட தோல்கள் ஏராளமாகத் தேவை இருந்தும், மேற்கத்திய நாடுகளில் பற்றாக்குறை இருந்தும், நாம் ஏற்றுமதி செய்யும் தோல்கள் இங்கிலாந்து மார்க்கட்டில் நல்ல விலைக்குப் போகவில்லை.

ஏனெனில் லண்டன் தோல் மார்க்கட்டில் ஆங்கிலேயர்கள் தங்கள் மனப்படி மார்க்கட் நிலவரத்தை இயக்குவதால், நியாயமான விலை பெற முடிவதில்லை. இன்று விலை வீழ்ச்சி ஏற்பட்டு விட்டதால் நமது தோல் பதனிடும் தொழில் மோசமான நிலையில் உள்ளது.

எங்கள் வாணியம்பாடி நகரில் சுமார் அறுபது தோல் பதனிடும் தொழிற்சாலைகள் இருந்தன. இதில் சுமார் ஆறாயிரம் பேர்கள் தொழில் புரிந்து வாழ்ந்து வந்தனர். தோல் விலைவீழ்ச்சியால் எல்லாத் தொழிற்சாலைகளும்—இன்றோ நாளையோ மூடுவது என்ற நிலையில் உள்ளன. நமது தேசத்தின் பொருளாதாரமும் இதனால் பாதிக்கப்படுகிறது. உலகமே நமது தோலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது, நாம் ஏன் இங்கிலாந்து மார்க்கட்டுக்கு அனுப்பி விற்க வேண்டும்? நமது பாரத நாட்டின் பகுதிகளான—

சென்னையிலாவது — டெல்லியிலாவது தோல் மார்க்கட்டை வைத்துச் சர்வ தேசத்தாருக்கும் நாமே தோல்களை விற்றால் என்ன?

வாணியம்பாடி
1—5—58

வி. என். தத்தப்பன்

## கணக்கர்கள் படும் அவதி

மாகாண சர்க்கார் கிராம ரெவின்யூ கணக்குகளை நயா பைசாவில் எழுத வேண்டும் என்று போட்ட உத்தரவால் கிராம கர்ணங்கள் வெகுவாகக் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. கஷ்டப்படுவதற்குக் காரணம், சென்னை சர்க்கார் தங்கள் உத்தரவை அடிக்கடி மாற்றுவதுதான். உதாரணமாக, குளித்தலை தாலூகாவில் மணப்பாரை பிர்க்காவில் உள்ள கிராமகர்ணீகர்கள் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ''செப்டம்பர் மாதத்தில் உங்கள் கணக்குகளில் உள்ள ரூபாய் அணாவை அடித்து விட்டு அதற்குச் சமமான ரூ. நயா பைசாவைப் போடுங்கள்'' என்று முதல் உத்தரவு. அந்த வேலையைக் கர்ணீகர்கள் பூர்த்திசெய்தபின் மற்றொரு அதிகாரி, ''ரூபாய் அணாவை, ரூபாய் ந. பையில் அடித்துப்போட்டால் செட்டில்மெண்டு கணக்குக்குச்சரிவராது, 'கால்குலேஷன்' முறைப்படி அதாவது ஒரு ஏக்கருக்கு ரூ. 1-4-0 என்று தீர்வை விகிதம் இருப்பதை 125 நயாபையாக வைத்துக் கொண்டு 100 செண்டுக்கு 125 நயா பைசா என்றால் 2 செண்டுக்கு எவ்வளவு, 10 செண்டுக்கு எவ்வளவு, 58 செண்டுக்கு எவ்வளவு என்று கண்டுபிடித்துப் போட வேண்டும்'' என்று உத்தரவிட்டுள்ளார்.

எனவே, ஏற்கெனவே எழுதப்பட்ட கணக்குகள் அடிக்கப்பட்டு இந்த முறையில் கணக்கு தயாராகி, ஏப்ரல் மாதம் நடக்க விருக்கும் ஜமாபந்திக்குக் கணக்குகளைப் பூர்த்தி செய்து விட்டார்கள். ரூபாய் அணா இருந்த காலத்தில் குறைந்த பட்சத் தீர்வை ஒரு அணா என்று ஏற்படுத்தப் பட்டிருந்தது. 30-3-'58 தேதியில் கர்ணீகர்களுக்கு மற்றுமொரு மாறுதல் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதாவது நயா பைசா முறையிலும் குறைந்த பட்சத் தீர்வை 6 நயா பைசா என்று போடவேண்டுமென்று, கால்குலேஷன் முறையில் எழுதப் பட்ட கணக்குகளில் ஒரு செண்டுக்கு ஒரு பை, இரண்டு செண்டுக்கு 3 பை என்று போட்டிருக்கிறார்கள். இவை 6 பையாக மாறும். மறுபடியும் கணக்கு அடிக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. வேறு சில காரணங்களால் ஜமாபந்தி ஏப்ரல் மாதம் நடக்க விருந்தது ஜூன் மாதத்துக்கு மாற்றப் பட்டிருக்கிறது.

ஏப்ரல்மாத ஜமாபந்திக்கு எழுதிய கணக்கு தயாராக இருக்கையில் மற்றுமொரு உத்தரவு 20—4—58ல் வெளியாகியிருக்கிறது. அதாவது, ''நீங்கள் உங்கள் கணக்குகளை நயா பையில் எழுத வேண்டாம். முந்திய வருஷங்களில் எழுதியது போல் ரூபாய் அணாவில் எழுதுங்கள்'' என்பதுதான் அந்த உத்தரவு. எழுதிய கணக்குகளை என்ன செய்வது என்று கேட்டால், 'கிழித்துவிட்டு வேறு எழுதுங்கள்' என்று கூசாமல் பதில் சொல்லுகிறார்கள். கதை எப்படி இருக்கிறது?

மணப்பாரை
25—4—58

ஒரு கர்ணீகர்




ஒரு பெண்மணியின் பாதிவ்ருத்தியத்தை அக்னிப் பரீட்சை செய்து அதன் ஒப்பற்ற மகிமையை உலகோருக்குக் காட்டுவது தான் இத்திரைக் கதையின் நோக்கம். மூலக்கதை மிக மிகப் பழையது. நாடக மேடைகளிலும் சினிமாப் படங்களிலும் பல மொழிகளில் காட்டப்பட்ட கதை.

பானு பிலிம்ஸாரின் ''சதி அனுசூயா'' தெலுங்கில் தயாரிக்கப் பட்டு, தமிழில் 'டப்' செய்யப் பட்டிருக்கிறது.

புராண இதிகாசக் கதைகள் படமெடுக்கப் படுவதை நான் விரும்புவதில்லையென்று கூறினால், நீங்கள் மேற்படி கதைகளில் எனக்கு பக்தியோ, நம்பிக்கையோ இல்லையென்று நினைத்து விடக் கூடாது. அக்கதைகள் படமாக்கப்படுவதை நான் விரும்பாததற்குக் காரணம், எனக்கு மேற்படி கதைகளிடமுள்ள உண்மையான பக்திதான்.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளையும், உலகுயிரனைத்தையும் உவந்து படைத்தருளிய பிரம்ம தேவனையும், கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்போல் முக காந்தி கொண்ட திருமாலையும், தித்திக்கும் தமிழ்க் கவிதைகளின் வாயிலாகவும், நல்ல ஓவியங்களின் மூலமாகவும் கண்டு உள்ளம் உருகி, பக்தி செலுத்தி வந்திருக்கிறோம். அதே மும்மூர்த்திகளின் பாத்திரங்களை, நடிகர்களின் பொருத்தம் இல்லாத வேஷங்களின் மூலம் காணும்பொழுது உள்ளம் விண்டு போய் விடுகிறது. நம் உள்ளத்தில் உன்னத பீடத்தில் அட்சி செலுத்தும் தெய்விக உருவங்கள் மீதுள்ள பக்தியும் குறைந்து விடுமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

சமூகக் கதைகளில் வரும் பாத்திரங்கள், கற்பனைப் பாத்திரங்கள்; அவர்களிடம் நாம் எத்தனை குறைபாடுகளைக் கண்டாலும், மனசுக்கு வேதனை உண்டாவதற்கு இடமில்லை.

உத்தியோகஸ்தர்கள் ஒன்றுசேர்ந்து நடத்தும் பல நாடகங்களுக்கு நான் போயிருக்கிறேன். நீலவண்ணக் கண்ணனின் உருவத்தை ஒரு கனம் பொருந்திய அதிகாரி தாங்கி நடிப்பார். அவர் உயர்தர அதிகாரியாகையால், வேஷப் பொருத்தம் பற்றி வாய் திறக்க யாரும் துணியமாட்டார்கள். இன்னொரு அதிகாரி நாரதராக நடிப்பார். இன்னொரு பொருத்தமற்ற ஆசாமி அர்ஜுனனாக வருவார். இத்தகைய கொடுமைகளையெல்லாம் பார்த்து, ''எல்லாம் வல்ல இறைவனே! புராணக் கதைகள் படமெடுக்கப் படாமல் இருக்கும்படி கிருபை செய்ய வேண்டும்!'' என்று எத்தனையோ தடவைகள் இறைஞ்சியிருக்கிறேன்.

''சதி அனுசூயா'' கதையில் மாவிடர்களுக்குச் சரியாக அன்னை பராசக்தியும், கலைமகளும், திருமகளும் அனுசூயாவுடன் பொறாமைப்பட்டுக்கொண்டு, படம் முடிகிறவரையில் போட்டி போட்டுக் கொண்டு அவளுக்கு இடைஞ்சல்களைத் தொடர்ச்சியாகச் செய்கின்றனர். அனுசூயா அத்தனை இடைஞ்சல்களையும், பதி சேவையின் மகிமையினால் கடந்து மாசற்ற மணியாகச் சுடர்விட்டு ஒளிர்கிறாள். கடைசியில் மும்மூர்த்திகளையும் குழந்தைகளாக்கித் தொட்டில் இட்டுத் தாலாட்டுகிறாள்.

இடையில், ''சதி அனுசூயா''வுடன் இன்னொரு சின்னக் கதை, பதிவிரதையின் கதை ஒட்டுப் போட்டுச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அந்தக் கதையில் வரும் கதாநாயகி நர்மதாவுக்கு மாங்கல்ய பலம் இல்லையென்று சோதிடர்கள் சொல்லி விட்ட காரணத்தால், விவாகம் நடக்காமல் இருக்கிறது. அனுசூயாவின் பதிசேவையின் மகிமையினால் உடலுடன் சொர்க்கம் செல்கிறாள் அவள். அங்கே தேவராஜனின் கோபத்தி

னால் சொர்க்கம் அவன் கண்ணுக்குத் தெரியாமற் போகிறது. மீண்டும் நர்மதா அனுசூயாவிடம் வருகிறாள். அவள் உபதேசப் படி பொழுது புலர்ந்ததும் கண்ணில் பட்ட புருஷனை மணக்கிறாள். ஆனால் அவன் ஒரு அழகில்லாத அந்தகன். நர்மதா அவனைத் தெய்வமாகப் பாவித்து முகம் கோணாமல் சேவை செய்கிறாள். திரைக்கதையின் முடிவில் அவன் வனப்பு மிகுந்த வாலிபனாகிறான். அந்தப் பாகத்தில் என். டி. ராமராவ் தோன்றுகிறார். படத்தில் அவரும் வந்ததாகப் பேர் பண்ணியிருக்கிறார், அவ்வளவுதான்!

**பா**சி படிந்த குளத்தில் தாமரை மலர்ந்திருப்பதைப்போல், இந்தப் படத்தில் பல நல்ல நடிகைகளும் நடிகர்களும் நடித்திருக்கின்றனர்.

அனுசூயாவாக வரும் அஞ்சலிதேவி அநுபவம் முதிர்ந்த நட்சத்திர நடிகையாதலால், தாம் ஏற்ற பாகத்தைத் திறமையோடு நடித்திருக்கிறார் என்று சொல்ல வேண்டியதில்லை.

ஜமுனா நர்மதாவின் பாகத்தை ஏற்று, கண்ணீர் விட்டு, பதி சேவையின் காரணமாகப் பலவிதக் கொடுமைகளுக்கு உள்ளாகியும் நன்றாய் நடித்திருக்கிறார்.

பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், தேவேந்திரன் ஆகியவர்களைத் திரையில் பார்த்ததும் எனக்கு அநுதாபம் பொங்கி வந்தது.

பிரசித்தி பெற்ற ஆந்திர நடிகரான மூக்காமலா இந்தப் படத்தில் சிவானந்த் என்னும் அகங்காரம் கொண்ட சிவபக்தனாக நடிக்கிறார். அடி வயிற்றிலிருந்து கத்திப் பேசிப் படம் முழுவதும் அனுசூயாவுக்கு இடைஞ்சலாக இருக்கிறார்.

சிரிப்பு வராவிட்டாலும், ரேலங்கியின் கோணங்கிக் கூத்துகள் பரிகாசத்துக்கு இடமாயிருக்கின்றன. பதிவிரதைக்கு எதிரிடையாகப் பத்தினிதாசன் என வந்து அவர் அடிக்கும் கூத்துகள் பரிதாபத்துக்குரியவை!

சிவபெருமான் அணிந்திருந்த பாம்பு, இந்தப் படத்தின் எல்லாக் குறைகளுக்கும் ஈடு செய்யும் விதத்தில் அழகாக நடித்திருக்கிறது. நன்றாய்ப் படமெடுத்து, படமெடுத்தவர்களின் குறையையும் நன்கு தீர்த்து வைத்திருக்கிறது!

அனுசூயாவின் பதிவிரதா மகிமையினால் மும்மூர்த்திகளும் மூன்று குழந்தைகளாக மாறும் காட்சியில், மூன்று குழந்தை நட்சத்திரங்கள் வருகின்றன. மூன்று குழந்தைகளின் சிரிப்பும் என் உள்ளத்தில் இடம் பெற்று விட்டது. நல்ல நடிகர்கள் வரிசையில் அக்குழந்தைகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்!

பாலைவனமும் தந்திரக் காட்சிகளும் பிரமாதமாயிருக்கின்றன.

இந்தப் படத்திலுள்ள பதினெட்டுப் பாடல்களையும் கு. சா. கிருஷ்ணமூர்த்தி இயற்றியிருக்கிறார். ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழியில் 'டப்' செய்யப்படும் படங்களுக்கு வசனம் எழுதுவது சிரமமான காரியம். அந்தப் பணியை உதயகுமார் சிறப்பாகவே செய்திருக்கிறார்.

ராகினியும் குசலகுமாரியும் ஆடும் நடனத்தைத் தவிர, இந்தப் படத்தில் வேறு நடனங்கள் இல்லாதது நமது பாக்கியந்தான்!

பக்திப் படங்கள் வரவேண்டியதுதான் என்றாலும், இத்தகைய படங்களினால் பக்தி உணர்ச்சி குன்றிவிடுமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. காவியப் பெருமை உள்ள புராணக் கதைகளையும் பண்புக் குறைவில்லாத பண்டைக்காலக் கதைகளையும் படமாக்குவதனால் நாட்டுக்கு எல்லா விதத்திலும் நன்மை ஏற்படும். அப்படியில்லாத கதைகளினால் நன்மை ஏற்படாது.

மகாசிவராத்திரி புண்ணிய காலத்தையும், வைகுண்ட ஏகாதசி தினத்தையும் மனத்தில்



வைத்துக் கொண்டு பழைய படங்களையே மீண்டும் மீண்டும் தயாரிக்கக் கூடாது. பிற மொழியாளர்களும் பிரமிக்கும் வண்ணம் தம் தமிழகத்தின் சிறந்த சரித்திர நிகழ்ச்சிகளை ஆதாரமாகக் கொண்ட பண்பு நிறைந்த படங்களைத் தயாரிக்க முற்பட வேண்டும். படத்துக்கு ஏற்ற கதைகள் தமிழில் இல்லை என்று சொல்லுவது தவறு. படாதிபதிகளுக்கு மனம்தான் இல்லை. சில நூறு அடிகள் குறைவாயிருந்தாலும் திரைக் கதையின் தரம் குறையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

# மணிக்கு 266 மைல்கள் வேக ஓட்ட சாதனை

## இந்த டயர் அபாயமின்றிச்

## செல்லக் கூடியதென நிரூபித்துள்ளது

பான்வில்லியிலுள்ள உப்பு வெளியில் நடந்த மோட்டார் பந்தயத்தில், மணிக்கு 266 மைல்கள் வேகத்தில், ஒரு புதிய அமெரிக்கன் டு-வே பிளையிங் ஸ்டார்ட் ரிகார்ட் சாத்தியமாயிற்று. மோட்டார் பந்தயத்தில் பயர்ஸ்டோன் டயர்கள் அடைந்துள்ள சாதனைக்கு இது மற்றொரு எடுத்துக்காட்டு. கனவேக மோட்டார் பந்தயத்தில் வெற்றிபெற அவசியமான உறுதியும், பாதுகாப்பும் பெற்றுள்ள இந்த டயர்களை உற்பத்தி செய்வதில் கையாளும் அதே தொழில் நுட்பமும், விசேஷக் கண்காணிப்புமே, உங்கள் காரில் பொருத்தப்பட்டுள்ள பயர்ஸ்டோன் டயர்களின் அதிகப்படியான பாதுகாப்பிற்கும், நம்பகத்தன்மைக்கும் உத்திரவாதம் அளிக்கின்றன.

**Firestone**

**பயர்ஸ்டோன்**

நியூ டிலக்ஸ் சாம்பியன்

**டியூப்லெஸ் அல்லது டியூபுள்ளது**




மன நிம்மதியுடன் பிரயாணம் செய்வதற்கென்றே தயாரித்த டயர்

N. 6

★ இந்தக் கட்டுரையையும் இதைத் தொடர்ந்து வரும் மூன்று கட்டுரைகளையும் எழுதிய டைபோர் ஸெகல்ஜ் (Tibor sekelj) யூகோஸ்லேவியா நாட்டைச் சேர்ந்தவர். சட்டப் பரீக்ஷையில் தேறியவர். பல மொழிகளில் வல்லுனர். ஓவியம், சிற்பம், சினிமா படப்பிடிப்பு, பழங்கால மக்கள் வாழ்க்கை ஆராய்ச்சி முதலிய துறைகளில் ஆர்வமுள்ளவர். உலகத்தின் பல பாகங்களைச் சுற்றிப் பல விசித்திரங்களையும் அற்புதங்களையும் பார்த்து அவர் பெற்ற அநுபவங்களை எல்லாம் புத்தகவாயிலாக வெளியிட்டிருக்கிறார். பத்திரிகை நிருபராகவும் பணியாற்றி யிருக்கிறார். 1944-ம் ஆண்டில் அமெரிக்காவில் 'அகன்காகுவா' (Aconcagua) என்னும் மலையின் உச்சிக்கு ஒரு கோஷ்டியுடன் நடந்து சென்றார். தென் அமெரிக்காவைச் சேர்ந்த பிரேஸில் நாட்டில் இதற்கு முன் ஒருவரும் போகாத காட்டுப் பிரதேசத்துக்கெல்லாம் சென்று 'சிவப்பு இந்தியர்கள்' என்று பொதுவாகக் குறிக்கப்படும் மக்களின் உட்பிரிவுகளான பல பழங்குடி மக்களின் வாழ்க்கையைப் பற்றியெல்லாம் நேரில் கண்டறிந்தவர். அவர் பெற்ற அநுபவங்களில் சுவையுள்ள சில பகுதிகள்தான் இந்தக் கட்டுரைகளில் விவரிக்கப்படுகின்றன.

— ஆசிரியர்.

# எறும்புப் பட்டாளம்

**டைபோர் ஸெகல்ஜ்** தமிழாக்கம்: **எம். எஸ். சிவஸ்வாமி**

தென் அமெரிக்காவில் மிகவும் பிரசித்தி பெற்றது ஆண்டிஸ் மலைத்தொடர். இந்தியாவில் இமயமலை எப்படியோ, ஐரோப்பாவில் ஆல்ப்ஸ் மலைத்தொடர் எப்படியோ, அது போல் தென் அமெரிக்காவில் ஆண்டிஸ் மலைத்தொடர் பிரபலமானது. இதில் பல உயர்ந்த சிகரங்கள் உள்ளன. அர்ஜென்டைன தேசத்தைச் சார்ந்த பகுதியிலுள்ள அகன்காகுவா என்னும் சிகரம் 23,000 அடி உயரம் உள்ளது.

இதன் உச்சியை அடைவதற்காகப் பல கோஷ்டிகள் பல ஆண்டுகள் முயற்சி செய்து இறுதியில் தோல்வி யடைந்தன. 1944-ம் ஆண்டில் ஒரு கோஷ்டி இதை எட்டிப்பிடிக்கப் புறப்பட்டது. அதில் நானும் இடம் பெற்றிருந்தேன். உச்சியை எட்டிப் பிடித்தோம். ஆனால் பனி வெடிப்புக்கும், உறை பனிக்கும் எங்களில் தலைவர் உட்பட மூன்றுபேர்கள் பலியாயினர். நானும் அவர்களைப் போல் உறை பனிக்குப் பலியாகும் தறுவாயில்தானிருந்தேன். ஆனால் அதிர்ஷ்டவசத்தினால்தான் நான் அதிலிருந்து உயிர் தப்ப முடிந்தது. மறுமுறை முயற்சி செய்து, முதல் தடவை முயற்சியில் உயிரிழந்த என் நண்பர்களை மீட்டு வரச் சென்றேன். அவர்களின் சடலங்களைக் கண்டு பிடித்து, எடுத்து வந்ததை நான் என்றும் மறக்க முடியாது.

என் அநுபவங்களையெல்லாம் புத்தகமாகப் பிரசுரித்த பின்னர், உற்சாக மடைந்த பலர் எனக்குப் பண உதவி அளிப்பதாக வாக்குக் கொடுத்து பிரேஸில் தேசத்தில் உள்ள 'மட்டோ க்ராஸோ' (Matto Grasso) என்னும் அடர்ந்த காட்டுப் பகுதியிலுள்ள 'பச்சை நரகம்' என்னும் இடத்துக்குச் சென்று வர ஒரு கோஷ்டியைத் தயார்ப்படுத்தி அதற்குத் தலைமை தாங்கும்படி கேட்டுக் கொண்டனர். அப்படியே நான் ஒரு கோஷ்டியின் தலைமையில் சென்றேன். அந்தக் காட்டுப் பிரதேசத்தில் ஒரு வருஷ காலம் கழித்தேன். அங்கேதான் ஒரு நதி ஓடுகிறது. அதைப் போல் பல நதிகள் அங்கே ஓடிக்கொண்டிருந்தாலும், அது தனிச் சிறப்பு வாய்ந்தது. அதைக் கடந்து மறுபுறம் சென்றவர் எவரும் உயிருடன் திரும்பி வந்தது கிடையாது. எனவே அந்த நதிக்கு 'மரண நதி' என்ற பெயர் வழங்கி வருகிறது. அந் நதியின் கரைகளில்தான் பழங்குடி மக்களில் பலர் வசிக்கின்றனர்.

இந்த மரண நதிக்கு அப்பால் இதுவரையில் எந்த வெள்ளையரும் சென்றதில்லை. ஆகவே நாங்களும், அதாவது எங்கள் கோஷ்டியினரும், இதுவரையில் ஒருவித அபாயமுமில்லாமல் அந்த இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டோம். நதிக்கு அக்கரையில் வசித்தவர்கள் 'ஷாவான்டிஸ்' (Shavantes) என்னும் குடிமக்கள். அந்தப் பிரதேசமே அவர்களுடைய ராஜ்யம். அவர்கள் எல்லையில் அடி எடுத்து வைத்த எவரும் இதுவரையில் உயிருடன் திரும்பியதில்லை.



காட்டு ஜாதிப் பெண்ணும் குழந்தையும்

காட்டுப் பகுதியில் ஏற்கெனவே பல மிருகங்களைப்பற்றி எங்களுக்குத் தெரிந்திருந்தது. சிறுத்தைப் புலி இனத்தைச் சேர்ந்த ஒருவகை



இருதாது காட்டு ஜாதியினர் வாழும் ஓரே குடிசை!

மிருகம் அங்கே அடிக்கடி காணப்பட்டது. ஆனால் நாங்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்து எங்களை அவைகளிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படவில்லை. பலவகைப் பாம்புகளை நாங்கள் அங்கே கண்டோம். சிலவற்றைக் கொன்று போட்டோம். அவற்றில் ஒன்று சுமார் நாலு கெஜ நீளமுள்ள மலைப் பாம்பு. அதனால் மனிதனுக்கு ஆபத்து அதிகம். அது மனிதனை இறுக்கி எலும்புகளைப் பொடிப் பொடியாக நொறுக்கிவிடும் சக்தி வாய்ந்தது.

ஒருநாள் மரண நதியைக் கடந்து செல்ல ஏற்பாடுகளையெல்லாம் செய்து கொண்டிருக்கையில், 'ஆர்கிட்ஸ்' என்ற புஷ்பங்கள் அங்கே அமெஜோனியாக் காட்டில் அபரிமிதமாக இருந்ததால், அவற்றைப் பறிக்க முற்பட்டோம். இப் புஷ்பங்கள் மிகவும் அழகுள்ளவை. நகரங்களில் இம்மலர்கள்தான் விலையுயர்ந்தவை. சாதாரணக் காடுகளில் கூட இவற்றை அதிகமாகக் காண முடியாது. ஆகவே கண்டவிடமெல்லாம் மலர்ந்திருந்த இம் மலரைக் கொய்ய ஆசை கொண்டோம்.

சாதாரணமாக மரத்தின் உச்சியிலிருந்த கிளைக்கு ஏறிச் சென்று, அந்தக் கிளையுடன் எங்களைக் கயிற்றினால் பிணைத்துக் கொண்டு, அங்கிருந்து எட்டி நுனியில் கொத்தாகப் பூத்திருந்த மலரைக் கொய்வோம். சில சமயங்களில் நுனியிலிருந்த மலர்களுக்காக ஒரு கிளையையே, ஏன், முழுமரத்தைக்கூட வெட்டி எறிவதுமுண்டு. சற்று அஜாக்கிரதையாக இருந்தால் கால் தவறிக் கீழே முட் புதர்களில் விழ வேண்டியதுதான். ஒவ்வோர் சமயம் இப்படி விழுந்ததுண்டு. ஒரு கிளையில் ஒரு குளவிக் கூடு இருந்தது. இதிலிருந்த அவ்வளவு குளவிகளும் ஒருதரம் என்னைக் கொட்டத் தொடங்கி மூன்று நாட்கள் வரை என் கன்னங்களிலெல்லாம் வீக்கம் குறையவில்லை.

மற்றோர் இடத்தில் நதியில் படகில் சென்றபோது கரை ஓரம் ஒரு மரத்தில் அழகாக ஒரு புஷ்பக் கொத்தைக் கண்டோம். அதைப் பறிக்கப் படகைக் கரையோரம் செலுத்தினோம். என்னுடனிருந்த மேரியும், மற்றொருவனும் தரைக்குத் தாவி அம் மரத்தைச் 'சுற்றியிருந்த புதர்களை எல்லாம் வெட்டித் தள்ளி, மரத்தின் மீது ஏற வகை செய்து கொண்டிருந்தனர். திடீரென்று எங்கிருந்தோ மேக கர்ஜனை போல் இலேசாகச் சத்தம் கேட்டது. பெருமழை பெய்வதற்கு முன்னால் கேட்கப்படும் குமுறல் போன்ற ஓசை. ஆனால் வானம் பளிச்சென்று வெய்யில் கடுமையாகக் காய்ந்து கொண்டிருந்தது. அந்தச் சப்தம் எதுவாக இருக்க முடியும்? ஒரு ஆமை எங்களை நோக்கி வந்து கொண்டிருந்ததைப் பார்த்தோம். அதைத் தொடர்ந்து ஒரு நாகப் பாம்பும் அதே திசையில் எங்களை நோக்கி வேகமாக ஊர்ந்து கொண்டிருந்தது. அதன்பின் உடும்புகள், பல்லிகள், ஓணான்கள், இன்னும் இதர ஜந்துக்கள். இவையெல்லாம் மிகுந்த பீதியடைந்தவை போன்று மறைவிடத்தைத் தேடி விரைந்து கொண்டிருந்தன. நாங்கள் அங்கு இருப்பதைக் கூட அவை பொருட்படுத்தவில்லை. வனத்தில் சஞ்சரிக்கும் பிராணிகளிடையே இம்மாதிரி பீதியை நான் இதற்கு முன்னால் கண்டதில்லை. ஏதோ பெரும் ஆபத்து நெருங்கிக் கொண்டிருக்கிறதென ஊகித்துக் கொண்டோம்.

ஆனால் நாங்கள் இதை அறிந்து கொள்ள வெகுநேரம் காத்திருக்கவில்லை. அடுத்த கணத்தில் எங்கள் கால்களிலும் தொடைகளிலும் 'கரீல் கரீல்' என்று ஏதோ கடிப்பது போலும் கொட்டுவது போலும் உணர்ந்தோம். அவைகளெல்லாம் சிறிய கறுப்பு எறும்புகள். ஆனால் எண்ணிக்கையில் கோடிக் கணக்காக இருந்தன. ஆனால் அவை வியாபித்த இடமெல்லாம் ஒரே கருமையாகவே தோற்ற மளித்தன. மரங்கள், கிளைகள், இலைகள், செடிகள், தரை கூட ஒரே கறுப்பு நிறம். இவை எங்கள் கால்களின்மேல் ஊர்ந்து தயை தாக்ஷண்யமின்றி எங்களைக் கடித்தன. அவசரம் அவசரமாக இவற்றைத் துடைத்தெறிந்து விட்டு, நாங்கள் நதியிலிருந்த படகுக்குத் தாவினோம்.

அப்படி நாங்கள் தாவிச் சென்றது நல்லதாகப் போயிற்று. ஏனெனில் இந்தச் சிப்பாய் எறும்புகள்—இதுதான் அவற்றின் பெயர்—அந்த வனத்திலேயே மிகப் பயங்கரமானவை. கொடுமை வாய்ந்தவை. நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஒரு பாம்பு அங்கிருந்து அப்பால் செல்ல முயற்சி செய்து கொண்டிருந்தது. ஆனால் முடியவில்லை. செயலற்று அப்படியே கிடந்ததை நாங்கள் கண் முன்னால் பார்த்தோம். பாம்பின் உடல்

முழுதும் கறுப்பு எறும்பின் கூட்டம் மூடி யிருந்தது. சில நிமிஷங்களுக்குப் பின் பாம் பின் எலும்புக் கூடுதான் மிஞ்சியது! இதே கதிதான் மற்றெந்தப் பிராணிக்கும்—மனித னாக இருந்தாலும் மிருகமாக இருந்தாலும்—நேர்ந்தது. அவ்விடத்தை விட்டுத் தப்பித்து ஓடத் தெரியாது விழித்தால், இவ்வெறும்பு களிடம் அகப்பட்டு மடிய வேண்டும்.

இந்தச் சிப்பாய் எறும்புகள் குறித்த திசையை நோக்கி ஒரு கூட்டமாகத்தான் செல்லும். செல்லும் வழியில் நெருப்பு இருந் தாலும், வாய்க்கால் இருந்தாலும் சிறிதும் பொருட்படுத்தாது முன்னேறிச் செல்லும். நெருப்பு எதிர்ப்பட்டால் நெருப்பில் தயங் காது விழுந்து மடியும். நெருப்பே அவிந்து ஒரே கருமையாகத் தென்படும். இறந்த எறும்புகள் மீது மற்ற எறும்புகள் ஒரு பாலத் தின் மீது செல்லுவது போல் அனுயாசமாகச் செல்லும்.

வழியில் ஒரு நதி தென்பட்டால் இவ் வெறும்புகள் தங்களை ஒரு பெரிய பந்து போலாக்கிக் கொண்டு, அப்படியே தண்ணீ ரில் குதித்து விடுகின்றன. இந்த எறும்புப் பந்து மிதந்து கொண்டே நதியின் வேகத் துடன் செல்லும். இப்படி ஒரு மைல், இரண்டு மைல் கூடச் செல்லும். இவ்வாறே உருண்டு உருண்டு எதிர்க் கரையை அடைந்து விடு கின்றன. அடைந்ததும் இந்தப் பந்து வடிவத் திலிருந்த எறும்புகள் தனித்தனியே விடுபட்டு ஒரு படை முன்னேறுவது போல் முன்னேறத் தொடங்கும். இறந்துபட்ட எறும்புகள்தான் அங்கே தரையில் கிடக்கும். தங்கள் தோழர் களைப் பாதுகாக்க, பந்தின் மேற்புறத்தி லிருந்த எறும்புகள் தங்கள் உயிரையும் தியா கம் செய்யத் தயங்குவ தில்லை. இந்த அற் புதத்தை நாங்கள் கண்ணாரக் கண்டோம்.

படகிலிருந்தபடியே வெகு நேரம் வரையில் தண்ணீரில் மிதந்து சென்ற இந்த எறும்புப் பந்தைப் பார்த்து, இயற்கையின் நியதிகள் எவ்வளவு விசித்திரமான முறைகளில் இயங்கு கின்றன என்பதை நினைத்து நினைத்து ஆச் சரியத்தில் மூழ்கினோம்.

# தமிழ் கூறும் நல்லுலகம்

கோரக்பூர் இளைஞர் கழகத்தின் மூன்றாவது ஆண்டு விழா ஸ்ரீ ஜி. ராதாகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அதற் குத் தென்னிந்தியாவில் தஞ்சையிலிருந்து வந்திருந்த போழக்குடி சகோதரர்களான ஸ்ரீ பி. வி. கணேசன், ராமையா அவர்களின் சங்கீதக் கச்சேரியும், தஞ்சை குமாரி வி. பிரேமா அவர்களின் சங்கீதக் கச்சேரியும் ஏப்ரல் 15, 16 தேதிகளில் நடைபெற்றன.

ரசிகர்கள் சார்பில் இந்தியன் இன்ஸ்டி டியூட் புரொபஸர் டாக்டர் எம். வி. எஸ். சாஸ்திரி அவர்கள் இன்னிசை வழங்கிய வர்களைப் பாராட்டினார். கழகத் தலைவர் ஸ்ரீ சுந்தரராமன் வித்வான்களுக்கும், மற்றும் எல்லோருக்கும் வந்தனோபசாரம் கூறினார்.

★

ஜபல்பூர் தென்னிந்திய பஜனை மடத் தார் போன வருடம் போல் இவ்வருடமும் ஸ்ரீராமநவமி உத்ஸவத்தை மிக விமரிசையா கக் கொண்டாடினார்கள். விழா ஸ்ரீராம ஜன னத்துடன் ஆரம்பித்து ஹனுமத் ஜயந்தி யுடன் முடிவடைந்தது. ஜபல்பூரில் வாழும் தென்னிந்தியர்கள் பலர் ஒவ்வொரு நாள் இரவும் தொடர்ந்து நடந்த கச்சேரி, கால க்ஷேபம் முதலியவைகளுக்குத் திரளாக வந் திருந்து விழா சிறப்பாக நடந்தேறுவதற்கு உதவி செய்தனர்.

★

ராய்ச்சூர் ஸ்ரீ ராதாகிருஷ்ண பஜனை மந்திரத்தைச் சேர்ந்தவர்கள் ஸ்ரீ ராமநவமி ஜயந்தி உத்ஸவத்தை வெகு சிறப்பாகக் கொண்டாடினார்கள். பூஜைகள், பஜனைகள், ஸங்கீதக் கச்சேரி, நாட்டியம் முதலியவை நிகழ்ச்சியில் இடம் பெற்றன. ஏப்ரல் 6-ந் தேதி திரு கிருஷ்ணமூர்த்தி அவர்களால் சீதா கல்யாண வைபவமும், இரவு திரு விசுவ நாதன் அவர்களால் பட்டாபிஷேகமும் வெகு விமரிசையாக நடந்தேறின. இதற்கு ரயில்வே உத்தியோகஸ்தர்களும் நகரப் பிர முகர்களும் வந்திருந்து சிறப்பித்தனர்.

★

திலகான்டபாடேயிலுள்ள தென்னிந்தியர் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு நிறைவு விழா சமீபத்தில் திரு வெங்கடகிருஷ்ணன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற் றது. திரு பொன்னுசாமி அவர்கள் "கலை யை"ப் பற்றிச் சொற்பொழிவாற்றினார். தலகான் டபாடே தென்னிந்தியர் கலைச் சங்கத்தாரால், "என் தங்கை" "அபூர்வ வேலைக்காரன்" முதலிய நாடகங்களும், குமாரி எஸ். புஷ்பவேணியின் நடனங்க ளும் நடைபெற்றன.

★

கல்கத்தா தமிழ் மாணவர் மன்றத்தினர் ஏப்ரல் 5-ந்தேதி ஒரு "போலிச் சட்டசபை" நிகழ்ச்சி நடத்தினர். நாட்டாண்மைக் குடி யரசுக் கட்சியினர் மன்றத் துணைத் தலைவர் திரு வெ. அரிகரன் தலைமையில் ஆளும் கட்சியாகவும், மக்கள் ஐக்கிய முன்னணிக் கட்சியினர் திரு கி. சி. ரா. கிருஷ்ணன் தலைமையில் எதிர்க் கட்சியாகவும் பங்கு கொண்டு பல அரிய செய்திகளை விவாதித் தனர்; போலிச் சட்டசபையில் திரு ப. ந. தியாகராஜன் அவர்கள் நாடு காவலராக இருந்து உரை நிகழ்த்தினார். திரு டி. எஸ். சீதாபதி அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு போற்றியுரை வழங்கினார்.

# சிறு சேமிப்புத்திட்டம் பெரும் வெற்றி பெற...



கோயில்களைப் போல் அரசாங்கக் காரியாலயங்களில் உண்டியல் வைக்கலாம்



நிதி திரட்டும் போதே உணவுப் பற்றாக்குறையைத் தவிர்க்கலாம்



கதா காலட்சேபம் மூலம் பிரசாரம்



பக்த கோடிகளிடம் பணம் வசூல் செய்ய இது தான் சிறந்த வழி


சிறு சேமிப்புக்கு அதிகமாகப் பணம் திரட்டியவருக்கு எம். எல். ஏ பதவி அளிக்கலாம்



பொதுமக்களின் மனதைக் கரையச் செய்வதற்கு இதை விட வேறு வழி என்ன இருக்கிறது!

துரிதமாக தயாராகிறது!

நடிகவேள் **M.R. ராதா** நடிக்கும்

கல்யாணி
பிக்சர்ஸ்

# தாமரைக்குளம்

டைரக்ஷன்
V. சீனிவாசன்



K. சாரங்கபாணி • T.K. பாலசந்திரன்
V. கோபாலகிருஷ்ணன்
சௌகார் ஜானகி • பத்மினி பிரியதர்சினி
...இந்துலேகா...

திரைக்கதை, வசனம், பாடல்கள்
முகவை இராஜமாணிக்கம்

மூலக்கதை
S.R. நடராஜன்

கேமரா
S. வீரபாது

சங்கீதம்
பத்மநாபசாஸ்திரி

ஆர்ட்
வர்ஜூர்கர்

ஸ்டூடியோ: கோல்டன்

விவரங்களுக்கு, கல்யாணி பிக்சர்ஸ், 19, லஸ் அவென்யூ, சென்னை-4.

BALU BROS.

BEEMES





1. சென்னை திருவட்டீஸ்வரன் பேட்டை இளங்கோ நூலகத்தார் சென்ற மாதம் 21ல். டைரக்டர் திரு ராமநாதன், நாட்டிய கலாகேசரி வழுவூர் திருராமையா பிள்ளை, நடிகமணி திரு எம்.கே. ராதா ஆகியவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி, விழா நடத்தினர். விழாவுக்குத் திரு டி. கே. ஷண்முகம் தலைமை தாங்கினார். திரு ம. பொ. சிவஞான கிராமணியார் அவர்கள் பொன்னாடை போர்த்தினார்.

2. குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் எட்டாவது குழந்தை புத்தகக் கண்காட்சி ஏப்ரல் 25, 26, 27 தேதி சென்னை ஹிந்து தியலாஜிகல் பள்ளியில் சிறப்பாக நடைபெற்றது. ஏ. வி. எம். ஸ்டுடியோ அதிபர் திரு ஏ. வி. மெய்யப்ப செட்டியார் அவர்கள் இந்தக் கண்காட்சியைத் திறந்து வைத்தார். திரு பகீரதன், திருமதி சௌந்தரம்கைலாசம் ஆகியோர் குழந்தை இலக்கியத்தைப் பற்றிப் பேசினார்கள். சங்கத் தலைவர் திரு அழ. வள்ளியப்பா வரவேற்புரை நிகழ்த்தினார். காரியதரிசி பூவண்ணன் நன்றி கூறினார்.

3. வேதாரண்யம் கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலத்தின் 12வது ஆண்டு விழா சபாநாயகர் டாக்டர் யு. கிருஷ்ண ராவ் அவர்கள் தலைமையில் நடைபெற்









நது. குருகுலத்தின் தலைவர் திரு வேத ரத்தினம் அவர்களையும் விழாவில் கலந்து கொண்ட திரு கருத்திருமன் எம். எல். ஏ. அவர்களையும் படத்தில் காணலாம்.

4. சென்ற மாதம் 22-ந் தேதி தேனாம்பேட்டை சத்தியமூர்த்தி கலை அரங்கத்தில் நடிகர் சிவதாணுவின் 'மனோன்மணியம் சுந்தரனார் நாடக மன்ற'த்தைக் கனம் மந்திரி சி சுப்பிரமணியம் அவர்கள் ஆரம்பித்து வைத்தார். ஸ்ரீ சுந்தரம் பிள்ளையின் படத்தைத் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் திறந்து வைத்தார்.

5. திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத்தார் புத்தாண்டு தினத்தில் கவிஞர்கள் திரிலோக சீதாராம், சக்தி சரணன், கலைவாணன், வி. துரைசாமி, துறைவன் ஆகியோர்கள் எழுதிய நூல்களை வெளியிட்டு, அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்கள்.

6. ஏப்ரல் 15உ. தில்லி ராஷ்டிரபதி பவன் ஊழியர்கள் பொழுது போக்கு சங்கத்தின் ஆண்டு விழாவில் நடனமாடிய ஸ்ரீமதி சங்கரி கணேசனையும், குமாரி விஜயலக்ஷ்மியையும் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் பாராட்டினார்.






## மூன்றாம் அத்தியாயம்

# உமா எங்கே?

"அன்புள்ள மாமா அவர்களுக்கு, தங்கள் அருமை உமா வணக்கத்துடன் எழுதுவது:

நீங்கள் எல்லோரும் குற்றாலத்துக்குப் புறப்படுவதாக என் தோழி வந்து சொன்னவுடன், நான் கட்டுப்பாட்டையும் மீறித் தங்கள் வீட்டுக்கு வந்து பார்த்தேன். அதற்குள் ரயிலுக்குக் கிளம்பி விட்டார்கள். எழும்பூருக்கு வாடகைக் காரில் ஓடி வந்தேன். திருவனந்தபுரம் எக்ஸ்பிரசுக்குப் பின்னால் உள்ள சிவப்பு விளக்கைத்தான் என்னால் காண முடிந்தது. இன்னும் ஐந்து நிமிஷங்களுக்கு முன்னால் அவன் என்னிடம் வந்து சொல்லியிருக்கக் கூடாதா?

போகட்டும். என்னிடம் நேரில் சொல்லிக்கொண்டு நீங்கள் புறப்படாத அளவுக்கு நான் அருகதையற்றவளாகி விட்டேன். இதையெல்லாம் பார்க்கும்போது நான் மாபெரும் குற்றவாளி என்று என் மனம் சொல்கிறது. இல்லாவிட்டால் அன்றைக்கு என்னைப் பிடித்து என் அப்பாவின் கையில் கொடுத்திருக்க மாட்டார்கள். இப்போது




சொல்லிக் கொள்ளாமல் குற்றாலத்துக்குக் கிளம்பியிருக்க மாட்டார்கள். அந்தக் குற்றாலத்துக்குப் போகும் ரயிலில்தானே நாம் முதன்முதலில் சந்தித்தோம்? ரயில் சந்திப்பு வெறும் ரயில் சந்திப்புத்தானா?

ரவி லண்டனிலிருந்து திரும்பி வருகிறாராம். அவர் வருவதற்குள் அப்பாவும் தில்லிக்குப் போய் என் சித்தி சந்திரலேகாவை அழைத்து வந்து விடுவார். இனி ஒருபுறம் ரவியையும், மறுபுறம் என் சித்தியையும் வைத்துக் கொண்டு என்னைக் கலக்கப் பார்ப்பார்கள். சித்தியை நான் பெற்ற தாயாகப் போற்றுகிறேன். அவர்களையே உங்களிடம் அனுப்பினாலும் அனுப்புவார்கள். இந்தக் கஷ்டத்தையெல்லாம் நாம் பொறுக்கத்தான் வேண்டுமா?

எனக்கு 'இந்த வீட்டில்' குழந்தையை நினைத்து வாய்விட்டுக் கதறி அழக்கூட உரிமையில்லை. நீங்கள் என்னைச் சாகவும் விடவில்லை. அப்பா என்னை வாழவிடவும் இல்லை. இந்த நிலையில் நான் வேலைக்குப் போவதையும் அப்பா தடுத்து நிறுத்திவிட்டார். இன்னும் இரண்டு நாட்கள் இந்த வீட்டில் நான் தங்கினால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடும்.

பைத்தியக்காரியாகி, என் உடையைக் கிழித்துக் கொண்டு அறைக்குள் நான் பூட்டப்படுவதை நீங்கள் விரும்ப மாட்டீர்களே? ரவியும் சித்தியும் வரும் வேளையில், உங்கள் அன்பால் வளர்ந்த உமா, பைத்தியமாகி அவர்கள் முன் சிரித்துக் கொண்டு நிற்பாள். பைத்தியம் பிடித்து விட்டால் அந்தக் கவலை எனக்குக் கிடையாது. உங்கள் மீது வீண்பழி சுமத்தி, உங்களுடைய நல்ல பெயருக்கு இவர்கள் களங்கம் கற்பித்து விடுவார்கள். என்னால் உங்களுக்கு அந்தப் பழிச் சொல் ஏற்பட வேண்டாம்.




நான் உங்களிடம் சொல்வதற்குத் தயங்கிய உண்மைகளையெல்லாம் அப்பாவிடம் நேரில் சொல்லி விட்டேன். விவரமாக என் எண்ணத்தை விளக்கி விட்டேன். அவர் வேண்டுமென்றே

என் பேச்சைப் புரிந்து கொள்ள மறுக்கிறார். வழக்கம்போல் என் அலுவல்களைக் கவனித்துக் கொண்டு, உங்கள் எழுத்துக்கும் பணிப் பெண்ணாக வாழ்ந்து வந்தால் இவர்களுக்கு என்ன கெட்டுப் போகும்?

நேரங்கெட்ட நேரத்தில் இப்போதே எனக்கு அடிக்கடி சிரிப்பும் அழுகையும் மாறி மாறி வருகின்றன. எனக்கே என் போக்கு பயமாக இருக்கிறது. அதனால்தான் சென்னையை விட்டுப் போய் நான் எங்காவது மன அமைதியைத் தேடிக்கொள்ள விரும்புகிறேன். இந்தக் கடிதத்தை நீங்கள் படிக்கும்போது நான் பட்டணத்தில் இருக்க மாட்டேன்.

என்னை யாரும் தேட வேண்டாம்; நான் பத்திரமான இடத்தில் என்னைப் பாதுகாத்துக் கொண்டு வாழ்வேன். அத்தை, கௌரி இருவருக்கும் என் அன்பு வணக்கத்தையும் பரமசிவத்துக்கு என் ஆசீர்வாதத்தையும் சொல்லுங்கள். எனக்கே ஒருநாள் தாங்க முடியாத நிலை வந்தால் அன்றைக்கு நானாகத் தங்களிடம் ஓடி வருவேன். அதுவரையில் யாரும் என்னைத் தேட வேண்டாம். கவலைப் படவும் வேண்டாம். நான் யாருக்கும் பாரமாக, தொல்லை கொடுப்பவளாக இருக்க விரும்பவில்லை; இருக்க மாட்டேன்.

என்னை அறவே மறந்து விட்டு நீங்கள் எழுதுங்கள். அந்த எழுத்தில் ஏதாவது ஒரு மூலையில் நான் என்றைக்கும் இருப்பேன். நீங்கள் அன்றைக்கு என்னிடம் ஒரு கேள்வி கேட்டீர்களல்லவா? அதற்கு இன்றைக்குப் பதில் சொல்கிறேன்: ஆம்; நான் உங்களைக் காதலிக்கிறேன். தங்கள் அன்புள்ள, உமா.

கடிதம் கொடுத்த அதிர்ச்சி குறைந்தவுடன், ரயிலில் கல்யாணி அம்மாளும், கௌரியும் தங்களுக்குள் உமாவின் இருப்பிடத்தைப் பற்றிப் பலவாறு பேசிக் கொண்டு வந்தார்கள். தணிகாசலம் அவர்கள் பேச்சில் தலையிட விரும்பவில்லை. 'அவள் செய்த முடிவு சரியா, தப்பா?' என்ற ஆராய்ச்சியில் சிறிது இறங்கிப் பார்த்தான். அவளுடைய நிலையில், சாகவும்-வாழவும் முடியாத ஒரு நிலையில், அவளால் வேறு என்ன செய்ய முடியும்? 'பைத்தியம் பிடித்து விடும்' என்று அவள் எழுதியிருப்பதில் சிறிது கூட அவனுக்குப் பொய்யிருப்பதாகத் தோன்றவில்லை. பைத்தியம் என்ற மன வியாதியின் அறிகுறியை ஓரளவு படிப்பறிவுள்ள யாருமே முன்னதாகக் கண்டு கொள்ளலாம். மாப்பசான் என்ற உலகப் புகழ் பெற்ற சிறுகதை எழுத்தாளர் தமக்குப் பைத்தியம் பிடிக்கப் போகிறதென்று, முன் கூட்டியே சிறுகதை ஒன்றில் சொல்லியிருந்தார். மனத்தின் அந்த எச்சரிக்கையை அறிந்து கொண்டு உமா செய்த முடிவு தப்பான முடிவாக இருக்க முடியாது.

ரயில் திருச்சியைத் தாண்டி வந்து கொண்டிருந்தது. பலவித யோசனைகளுக்குப் பின், திடீரென்று உமாவின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்து விட்டவள் போல், "உமா பம்பாய்க்குத்தான் போயிருப்பாள்" என்றாள் கௌரி.

"பம்பாய்க்கா?"

"ஆமாம்; அவள் சிநேகிதி மனோன்மணி பம்பாயில் இருக்கிறாள். அவளை வரச் சொல்லி முன்பெல்லாம் கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். மனோன்மணிக்குக் கல்யாணமாகி ஒரு ஆண் குழந்தைகூடப் பிறந்திருக்கிறதே!"

"மனோன்மணியை உனக்கு ஞாபகமில்லையா? பட்டணத்துக்கு வந்த புதிதில் நம் வீட்டுக்கு வந்திருக்கிறாள்" என்றாள் கல்யாணி அம்மாள்.

தணிகாசலத்துக்கு மனோன்மணியின் பெயர் நினைவுக்கு வந்தது. உமாவே பேச்சோடு பேச்சாகப் பல முறை அவளைப் பற்றித் தணிகாசலத்திடம் சொல்லியிருக்கிறாள். மனோன்மணி உமாவுக்கு எழுதிய கடிதங்களையும் அவன் படித்திருக்கிறான். சிறிது சிறிதாகத் தணிகாசலத்துக்கு இப்போது நம்பிக்கை ஏற்பட்டது. எப்படியாவது உமாவின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்து விடலாம் என்று தேறினான்.

பரபரப்பும் பயமும் சிறிது சிறிதாக அடங்கின. 'எனக்கே ஒரு நாள் தாங்க முடியாத நிலை வந்தால் அன்றைக்கு நானாகத் தங்களிடம் ஓடி வருவேன்' என்று அவள் எழுதிய வரிகளை அசை போட்டு விழுங்கினான். 'அந்தத் தாங்க முடியாத நிலை நாளைக்கே அவளுக்கு வந்து விடக் கூடாதா?' என்ற ஏக்கமும் அவனுக்குப் பிறக்காமல் இல்லை.

எழும்பூர் ரயிலடிதான் வந்தது. வீட்டுக்கு அவர்கள் திரும்பியவுடன் கீழ் வீட்டுக்காரர்கள் பெரிய மனக பண்ணி இரண்டு செய்திகளைத் தணிகாசலத்திடம் கூறினார்கள். உமாவின் தந்தை பேராசிரியர் அவளை முதல் நாள் மாலை வந்து தேடிவிட்டுச் சென்றாராம். அடுத்தாற்போல் எதிர்பாராத விதமாகக் குமாரசாமி அவனுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பியிருந்தார். கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போன பையன்





திரும்பவும் ஒரு முறை தணிகாசலத்தைத் தேடிக் கொண்டு வீட்டுக்கு வந்தானாம்.

குமாரசாமியின் கடிதத்தில் முக்கியமான செய்தி ஏதும் இல்லை. பல வருடங்களுக்கு முன்பு அழைத்திருந்தது போலவே, அவனிடம் கதை கேட்பதற்காக அழைத்திருந்தார். கடிதம் விரிவாக இருந்தது. பழைய சம்பவத்தை மறந்து புதிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதற்காகக் கட்டாயம் வரச் சொல்லியிருந்தார். தணிகாசலத்துக்கு அவருடைய அழைப்பில் நம்பிக்கை ஏற்படவில்லை. நேரடியாக மறுப்புக் கூறாமல் தனக்கு வெளியூர் வேலைகள் இருப்பதாகவும், திரும்பியவுடன் அவரைச் சந்திப்பதாகவும் பதில் எழுதித் தபாலில் சேர்த்தான். தொழில் சம்பந்தமான அந்தக் கடிதம் அவனுக்கு அவர் குடும்ப வாழ்வை நினைக்கச் செய்தது. செங்கமலத்தைப் பார்த்து இடையில் நான்கைந்து ஆண்டுகள் கழிந்து விட்டன. கடைசியாக அவளைப் பார்த்தது கோடம்பாக்கம் சாலையின் புளிய மரத்தடியில்தான். அதற்குப் பிறகு கடற்கரையிலோ, கடைவீதியிலோ வேறு எங்குமோ அவளைச் சந்திக்கவில்லை. குமாரசாமியாவது எப்போதாவது அவன் கண்களில் பட்டிருக்கிறார். நாற்பது மைல் வேகத்தில் அவன் அவரைக் காரில் பார்த்திருக்கிறான். ஆனால் செங்கமலம் எங்கிருந்தாளோ, தெரியவில்லை. இதற்குள் அவளுடைய பையன் வளர்ந்து படித்துக் கொண்டிருப்பான். அவனுக்குத் தம்பியோ, தங்கையோ பிறந்தாலும் பிறந்திருக்கலாம். மத்தியில் குமாரசாமிக்குத் தொழிலில் நஷ்டம் ஏற்பட்டதாகவும், இப்போது அவர் புது வாழ்வு பெற முயற்சி செய்வதாகவும் சொல்லிக் கொண்டார்கள்.

மற்றொரு நினைவும் தணிகாசலத்துக்கு வந்தது. பூர்வீகச் சொத்து தமக்குக் கிடைப்பதற்காக அவர் சொந்தத்திலேயே மற்றொரு கல்யாணம் செய்து கொண்டாலும் செய்து கொள்வார் என்று செங்கமலம் சொல்லியிருந்தாள். இதைப் பற்றிச் சிறிதுகூடச் செங்கமலம் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

இப்படித் தன் கணவனுக்காக அவள் விட்டுக் கொடுக்க முன் வந்ததையும் தனக்காகக் கௌரி உமாவை மணக்கத் தூண்டியதையும் ஒப்பிட்டுப் பார்த்தான் தணிகாசலம். கௌரியின் தியாகம் நிறைந்த மனத்துக்கு முன்னால் செங்கமலத்தைச் சரிசமமாக நிறுத்த முடியவில்லை. செங்கமலம் குமாரசாமியுடன் வாழப் புகுந்த அன்றைக்கே, மற்றொரு பெண் அவர் கரத்தைப் பற்ற முன்வரலாம் என்ற சந்தேகம் அவளுக்கு இருந்திருக்க வேண்டும். கௌரியின் நிலைமை அப்படியில்லையே?

கௌரி அவனைக் காலைச் சிற்றுண்டிக்கு அழைத்தாள். ''சாப்பிட்டவுடன் உமாவின் அப்பாவைப் போய்ப் பார்க்க வேண்டும்'' என்றான் தணிகாசலம்.

''நீங்கள் ஒன்றும் அங்கே போகவேண்டாம். போய்ச் சௌந்தரத்தம்மாளின் வாயில்விழவேண்டாம். உமா போனதற்கு நீங்களே காரணமென்று அந்த அம்மாள் உங்களைக் கரித்துக் கொட்டினாலும் கொட்டுவாள்'' என்றாள் கௌரி.



''நமக்கே இப்படி இருந்தால், பேராசிரியர் உமாவை நினைத்து என்ன பாடுபடுவார்? ஒரே குழந்தை; தாயில்லாப் பெண்; அவருக்கும் உமாவை விட்டால் வேறு பிடிப்பு ஏது?''

''அவரே இங்கு வருவார். வந்த பிறகு நம் வீட்டிலிருந்து கொண்டு அவரிடம் பேசுங்கள்'' என்றாள் கௌரி.

சிற்றுண்டி முடிந்தவுடன் கணவனும் மனைவியும் பம்பாயிலிருக்கும் மனோன்மணியின் விலாசத்தைக் கண்டு பிடிப்பதில் தீவிரமாக முனைந்தார்கள்.

உமாவுக்கு ஒன்று அவள் அப்பாவிடமிருந்து கடிதம் வரும்; அல்லது தோழிகள் எழுதுவார்கள். வரும் கடிதங்களையெல்லாம் அவள் மாடி வீட்டுக்குக் கொண்டு வந்து, தணிகாசலத்தின் கடிதங்களோடு போட்டு விடுவாள். வெகு நேரம் இருவரும் பழைய குப்பைகளைத் தேடிக் கிளறிய பிறகு மனோன்மணியின் கடிதம் ஒன்று கிடைத்தது.

''நான் 'திடுதிப்'பென்று அந்தப் பெண்ணுக்குக் கடிதம் எழுதிக் கேட்டால் நன்றாக இருக்காது. நீயே உமாவைப் பற்றி விசாரித்து எழுது'' என்று கௌரியிடம் கூறினான் தணிகாசலம்.

கடிதம் எழுதிக் கேட்பதைக் கௌரி விரும்பவில்லை. தன் மாமியாருடன் பேசிவிட்டு வந்து, ''நேரில் நீங்கள் பம்பாய்க்குப் போய் வந்தால்தான் காரியம் பலிக்கும்'' என்றாள் கௌரி. ''உமா அங்கிருந்தால் ஒரு வேளை இல்லை என்று கூட மனோன்மணியை விட்டு எழுதச் சொல்வாள். சொல்லிக் கொள்ளாமல் திடீரென்று நீங்கள் மனோன்மணியின் வீட்டில் போய் நிற்க வேண்டும்.''

தணிகாசலத்தின் மனமாறுதலுக்காகவும் அவனைப் பம்பாய்க்கு அனுப்பி வைத்தால் தேவலாம் என்று தோன்றியது அவர்களுக்கு. அவனுடைய எழுத்தாள நண்பர் ஒருவர் வெகு நாட்களாக அவனை அங்கே வரச் சொல்லி வற்புறுத்திக் கொண்டிருந்தார். ''அவரையும் போய்ப் பார்த்துவிட்டு, அந்தச் சாக்கில் உமாவையும் கையோடு அழைத்துக் கொண்டு வாருங்கள்'' என்றாள் கௌரி. ''வரும்போது அவளிடம் நான் குற்றாலத்தில் சொல்லிய விஷயங்களையும் சொல்லுங்கள்'' என்று சொன்னாள் கௌரி.

''அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறாயே? உமா அங்கு பம்பாயில் இல்லாவிட்டால்...''

''வேறு எங்கும் போக மாட்டாள்; நீங்கள் வேண்டுமானால் பாருங்கள்'' என்றாள்.

இரண்டு நாட்களில் பம்பாய்க்குப் புறப்படுவதாய் நிச்சயம் செய்து கொண்டு, தன் வருகை குறித்து எழுத்தாள நண்பருக்கு அறிவித்தான். அடுத்தாற்போல் கண்ணபுரத்துக்கும் தேவகிக்கும் ஒருகடிதம் போட்டு வைத்தான். தேவகியிடம் அவள் போகக் கூடுமென்று யாரும் நினைக்கவில்லை. இருந்தாலும் விவரமாகவே தேவகிக்கும் எழுதி வைத்தான். ''அங்கே இப்போது வந்திருந்தால் சரி; இனி எப்போது உங்கள் கண்ணில் பட்டாலும் ஒரு தந்தி கொடுங்கள்'' என்று தேவகியிடம் வேண்டிக் கொண்டான்.

பிற்பகலில் பேராசிரியர் சந்திரசேகரன் வந்து சேர்ந்தார். அவர் வருவதைக் கண்ட கௌரி, தணிகாசலத்தைத் தனியாக அழைத்து, ''பம்பாய்க்கு நீங்கள் புறப்படுகிற விஷயம் அவருக்குத் தெரிய வேண்டாம்; காரியத்தைக் கெடுத்து விடுவார்'' என்று ரகசியமாக எச்சரிக்கை செய்து வைத்தாள்.




நண்பர் ஒரு நல்ல செய்தி
யைச் சொல்கிறார். அடிக்
கடி எப்ரிலைம் உட்
கொள்வதால், அவர்
ஆஸ்த்மா உபாதையால்
தற்பொழுது பீடிக்கப்படுவதில்லை



# EPHRILIME
## எப்ரிலைம்



நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**

மதராஸ் டிப்போ :
2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

---




# வஸந்தத்தின் புத்துணர்ச்சி

## உங்களுக்கு இன்றும்..என்றும்

மிக்க சேர்த்தி வாய்ந்த காஷ்மீர் பொக்கே
உங்கள் உடலுக்கு இளவேனிற்காலத்
தின் புத்துணர்ச்சியளிக்கிறது...
அதைக் குளிர்ச்சியாகவும்
வாசனை திகழவும்
வைக்கிறது.



ஆண்கள்
விரும்பும்
நறுமணத்துடன்

# காஷ்மீர் பொக்கே
## டால்கம் பௌடர்

பேராசிரியரை வரவேற்று உட்கார வைத்த தணிகாசலத்துக்கு அவரிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பதென்றே தெரியவில்லை. "குற்றாலத்துக்குப் போய் விட்டு இன்றைக்குத்தான் திரும்பி வந்தேன். உமா இப்படிச் செய்து விடுவாளென்று நான் நினைக்கவே இல்லை. கடிதம் எழுதி விட்டுப் போயிருக்கிறாள்" என்று அவன் நிதானமாகச் சொற்களை மென்று விழுங்கினான்.

சந்திரசேகரன் வெகு நேரம் அவனை உற்றுப் பார்த்தார். பார்த்துக் கொண்டே இருந்தார். அவருடைய முகத்தில் பயங்கரமானதொரு பேர் அமைதி குடிகொண்டிருந்தது. வேண்டுமென்றே தம்முடைய உதடுகளைக்கடித்து உணர்ச்சியை அவனிடம் மறைக்கப் பார்த்தார். முடியவில்லை. முகமெங்கும் குப்பென்று சிவந்து மணி மணியாக வேர்வைத் துளிகள் கொப்பளித்தன. அவரது பரிதாப நிலையைக் கண்டு தன் கண்களைத் துடைத்துக் கொண்டான் தணிகாசலம். வாய் விட்டுக் கதறி அழ வேண்டும் போல் அவனுக்குத் தோன்றியது. கடைசியாக அவரே அதைச் செய்து விட்டார். குலுங்கிக் குலுங்கி அழுதபடியே. "நீங்கள் உங்கள் குழந்தையைப் பறி கொடுத்தது போல் நானும் என் அருமைக் குழந்தையைப் பறி கொடுத்து விட்டேன்" என்றார்.

தணிகாசலம் அவரிடம் தனக்கு உமா எழுதிய கடிதத்தைக் கொடுத்தான். அதே போல் மற்றொரு கடிதத்தைத் தம்முடைய சட்டைப் பையிலிருந்து எடுத்து அவனிடம் நீட்டினார் பேராசிரியர். அவனுக்கு வந்த கடிதம் போலவே இருந்தாலும், முக்கியமான ஒரு விஷயத்தில் உமாவின் உள்ளத்தைப் பளிச் சென்று கண்ணாடி போல் பிரதிபலித்தது அந்தக் கடிதம். தன்னுடைய விருப்பத்தை வெளிப்படையாகவே தன் அன்புத் தந்தையிடம் சொல்லியிருந்தாள்.



## நாலாம் அத்தியாயம்

# தந்தையின் தவிப்பு!

**மா**மல்லபுரத்தில் கடைசியாக உமாவைச் சந்தித்த பிறகு தணிகாசலம் அவளுடைய எண்ணங்களைப் புரிந்து கொண்டு தனது நாட்குறிப்பில் எழுதிய எழுத்துக்களுக்கும் உமாவின் கடிதத்துக்கும் நெருங்கிய ஒற்றுமை இருந்தது. படிப்படியாகத் தன் மனத்தில் தணிகாசலத்துக்காக ஏற்பட்ட அன்பு வளர்ச்சியை உமா தன் தந்தைக்கு எழுதியிருந்தாள். இவ்வளவு விவரங்களை இதுவரையில் அவள் தணிகாசலத்திடமே வெளியிடவில்லை.

கடிதத்தின் முற்பகுதி இது: தான் செய்த முடிவு தவிர்க்க முடியாத முடிவு என்பதற்கான எத்தனையோ காரணங்களைக் காட்டியிருந்தாள் :—

"எனக்குத் தாயும் தந்தையும் நீங்கள் தாம். அதனாலேயே இந்த இரண்டு வாரங்களாக என் மனத்தில் எதையும் வைத்துக் கொள்ளாமல் உங்களிடம் கூறினேன். அப்படிச் சொல்லும்போது என்னுடைய சொற்களின் ஆழத்துக்கு நீங்கள் வினயமாய்ச் செவி சாய்க்கவில்லை. எனக்கு வயதாகி விட்டது. நான் ஒன்றும் விளையாட்டுப் பெண் இல்லை.

நீங்கள் வேண்டுமென்றே என் எண்ணத்தைத் தட்டிக் கழிக்கப் பார்த்தீர்கள். என்னைப் புரிந்து கொள்ள மறுத்து விட்டு, புரிந்து கொள்ளாததுபோல் பாவனை செய்வதில் நன்மை இருந்ததால், நீங்கள் அப்படிச் செய்தீர்கள். தாயில்லாப் பெண்ணிடம் இந்தச் சமயத்தில் மட்டும் நீங்கள் தாயாக நடந்து கொள்ள வில்லை; நடக்க விரும்பவுமில்லை.

உலகத்தில் உள்ள மற்ற அப்பாக்களின் நிலைமையில் நீங்கள் இல்லை. அன்றைக்கு நீங்கள் ஆக்ராவில் தாஜ்மஹாலின் முன்பு பேசிய பேச்சுக்களையெல்லாம் நன்றாக நினைவுக்குக் கொண்டு வாருங்கள். நீங்கள் எப்படி இப்போது என் சித்தி சந்திரலேகாவுடன் வாழ்கிறீர்கள்? அதற்குப் பதில் சொல்லுங்கள். ஒரு பெண்ணுக்குத் தான் விரும்பிய படி மணவாழ்வு வாழ உரிமையில்லையா?

என் உரிமை மற்றவர்களைப் பாதிக்கக் கூடாது. அந்தக் குடும்பத்தில் உள்ள யாருடைய உரிமையையும் நான் பாதிக்கவில்லை. கௌரி என்னை வற்புறுத்தி வரவேற்கிறாள். அவள் செய்வது தியாகம் என்று அவள் நினைக்கவில்லை. அது தன் கடமை என்று கருதுகிறாள். உங்களையும் மாமாவையும்விட என்னை நன்றாக உணர்ந்து கொண்டவர்கள் கல்யாணி அத்தையும் கௌரியுமே.

பத்து வருஷங்கள் நான் அவருடன் பழகி விட்டேன். மிகவும் அருகில் இருந்து அவருடைய விருப்பு வெறுப்புக்களில் ஒன்றி விட்டேன். அவர் என்னைச் சிறிதுகூடச் சட்டை செய்திருப்பார் என்று நினைக்கிறீர்களா? அதற்காக நான் வருந்தவில்லை. தம்மையே பொருட்படுத்தாமல் தம்முடைய கற்பனைக் கனவுகளில் மூழ்குபவர் அவர்.

வெளியில் கருங்கல் பாறைபோல் முரட்டுத்தனம் நிறைந்த அவர் மனத்தின் அடித்தளத்தில், தெள்ளிய நீஞ்சுனையாக அன்பென்னும் அருவி ஓடுகிறது. சுற்றுப்புற உலகத்தின் துன்பத்தையும் துயரத்தையும் தம்முடையதாக இழுத்துப் போட்டுக் கொண்டு எந்த நேரமும் அவர் அல்லற்படுகிறார். இடீரென்று சிலர் தம் வாழ்க்கையில் மிகப் பெரியதொரு செய

லைச் செய்து தியாகிகளாகி விடுகிறார்கள். குறிப்பிட்ட நல்ல நோக்கத்துக்காகப் பிடிவாதமாக எந்த நேரமும் உழைப்பதைவிட அது உயர்ந்த தியாகமாகி விடுமா?

அவரிடம் உள்ள கலைத்திறன் வளரவேண்டுமானால், அவரைப் போற்றிப் பாதுகாத்து யாராவது வளர்க்க வேண்டும். கௌரிக்கு அவரைத் தன் கணவன் என்ற அளவில் தெரியுமே தவிர, கலைஞர் என்ற முறையில் தெரியாது. தமிழ் நாட்டில் எழுத்துக் கலைஞர்களையும் சிந்தனைச் செல்வர்களையும் ஊக்குவிக்கும் பண்பு இன்னும் வளரவில்லை. மன்னர்களும் சிற்றரசர்களும் அன்று தமிழ் வளர்த்தார்கள். மக்கள் இன்றைக்குத் தமிழ் உணர்ச்சி என்ற பெயரால் கட்சிச் சண்டைகளும், சாதிச் சண்டைகளும் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நடு நிலைமை இலக்கியவாதிகளை இந்த நாடு புரிந்து கொள்ளவில்லை; புரிந்துகொள்ள முயலவுமில்லை.

முதல் நாள் அவர் கதையைப் படித்துவிட்டு ரயிலில் நான், அழுதேனல்லவா?—



வெறும் ஏமாற்று வித்தைகள் செய்கிறவரல்ல அவர். மேல் நாட்டில் யாரோ ஒரு ஓவியன் ரத்தச் சிவப்பைத் தன் படத்தில் தீட்ட வேண்டுமென்பதற்காகத் தன் விரல்களின் ரத்தத்தாலேயே தீட்டினானாம். இவர்களை நீங்கள் பைத்தியக்காரர்கள் என்று சொல்லலாம். நான் வேறுவிதமாக நினைப்பவள். மாமாவுடன் ஒரு மாதம் நீங்கள் ஒன்றிப் பழகியிருந்தால் அவருடைய தன்மை, உயர்ந்த பண்பு தெரியும் உங்களுக்கு.

மனிதத் தன்மைக்கு அழகு செய்யத் தூக்கும் ஒரு மனிதருக்கு நான் அடிமையாக உழைப்பதில் உங்களுக்கு என்ன கஷ்டம்? வீட்டுக்குள் அதிகமாக முடங்கிக் கிடக்காமல் வெளி உலகத்தில் கைவீசி நடந்தவள் நான். பட்டணத்தில் பிற ஆண்களைப் பார்க்காமலோ, அவர்களுடன் பேசாமலோ யாரும் இருக்க முடியாது. கலகலப்பாகப் பேசுவதைக் காதல் பேச்சு என்று முட்டாள்தனமாக முடிவு கட்டுகிறவர்களும் சிலர் உண்டு. இனி என்னை மன்மதனின் அழகும் சரி, குபேரனின் செல்வமும் சரி, மயக்கி அழிக்க முடியாது. ரவியின் மதிப்பு எனக்குத் தூசிக்குச் சமம்.

கல்யாணப் பேச்சை நீங்கள் எடுத்திருக்காவிட்டால் எந்தத் தொல்லையும் எனக்கு வந்திருக்காது. கன்னியாகவே வாழ்ந்து மகிழ்ச்சியுடன் காலம் கழித்திருப்பேன். உலகத்தின் பழிச் சொல்லை நானோ அவரோ சிறிதும் பொருட்படுத்தி யிருக்கமாட்டோம்.

அத்தைக்கு என்னைத் தம் வீட்டில் வைத்துக் கொள்வது மதிப்புக் குறைவாக இருந்தால், அவர்கள் வீட்டுக்குத் தாராளமாக அனுப்பி விடலாமே? அவர்கள் எப்போதும் என்னை அங்கு வரவேற்பார்கள். நீங்கள் எதற்காகக் குறுக்கிடுகிறீர்கள்? என்னுடைய நன்மை தீமை எது என்று எனக்குத் தெரியாத சிறுமியா நான்? வயது எனக்கு இருபத்தைந்துக்கு மேலாகி விட்டது. கன்னி என்ற பெயர் எனக்குத் தீமையைத் தருமென்றால், அவருக்குச் சம்மதமென்றால் நான் கழுத்தில் தாலியுடன் மனைவியாக வாழ்வேன். அவர் ஒருவரைத் தவிர, கௌரிக்கும் அத்தைக்கும் இதில் முழுச் சம்மதம்தான்.

அவர் உலகத்துக்காகப் பார்க்கவில்லை. உங்களைப் போலவே, என்னைப் போலவே, கௌரியை உத்தேசித்து என்னை மனதார வெறுப்பதுபோல் பாவனை செய்கிறார். நான் மனவாழ்வு வாழ விரும்புகிறேன் என்று அவருக்குத் தெரியும். கௌரிக்காக நான் இப்படி என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை. இயற்கையிலேயே என் மனம் இப்படிப் பழகி விட்டது. நீங்களும் சித்தியும் குடும்பம் நடத்தும் முறை என் ஆசைக்கு நீர் வார்த்தது. உலகத்தில் உள்ள எல்லாப் பெண்களும் முக வேறுபாடு கொண்டிருப்பது போல், ஏன் அகவேறுபாடு கொண்டிருக்கக் கூடாது? நீங்களும் மனோதத்துவ சாஸ்திரத்தில் இதையெல்லாம் படித்ததில்லையா?''

மற்றப்படி தணிகாசலத்தின் கடிதத்தில் எழுதிய அதே விஷயங்களைத் தன் அப்பாவுக்கும் தெரிவித்துக் கடிதத்தை முடித்திருந்தாள் உமா. இதற்குள் தணிகாசலத்துக்கு வந்த கடிதத்தையும் பேராசிரியர் படித்து விட்டார். இருவரும் மறுபடியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு மௌனம் சாதித்தார்கள். தணிகாசலம் பேசவேண்டுமென்று அவர் எதிர்பார்த்தார். பேராசிரியர் முதலில் பேச வேண்டுமென்று தணிகாசலம் எதிர்பார்த்தான்.

கடைசியில் தணிகாசலமே வாயைத் திறந்தான்: ''உங்களிடம் நான் தனிமையில் பேசவேண்டுமென்று முன்பே இரு முறை அழைத்திருக்கிறேன். வீடு மாற்றிக் கொள்வதற்கு முதல் நாள் இரவும், குழந்தை கல்யாணி பிறந்த நாளன்றும் உங்களிடம் நான் பேச வேண்டுமென்ற விருப்பத்தைப்பலமுறை வற்புறுத்திச் சொன்னேன். நீங்கள் அலட்சியமாக இருந்து விட்டீர்கள்.''

"எல்லாம் அந்தச் சௌந்தரத்தால் வந்த வினை! அவள்தான் என்னை உங்களிடம் நெருங்க விடவில்லை. நம்முடைய பெண்ணை நாமே கவனித்துக் கொள்ளலாம் என்றாள். நீங்களும் அன்றைக்கு என்னோடு வந்து உமாவுக்குப் புத்திமதி சொல்ல மறுத்து விட்டீர்கள்."

"ஏன் நான் மறுத்தேன்? -- காரணத்தை என்னிடம் நீங்கள் மறுநாளாவது வந்து கேட்டிருக்கக் கூடாதா? அவ்வளவு கிராதகனா நான்? பழகுகிற காலத்தில் நாமெல்லோரும் மேலே விழுந்து கொண்டு நெருங்கிப் பழகினோம். துண்டித்துக் கொள்ள வேண்டுமென்று தோன்றினால் அவ்வளவு கண்டிப்பாகவா துண்டித்துக் கொள்வது?"

அவர் பதிலளிக்கவில்லை.

"நூலைக் கத்திரிக்கோல் போட்டு நறுக்கி விடுவதுபோல், ஒன்றிப் பழகிய உள்ளங்களுக்கு ஒரே நாளில் கத்திரிக்கோல் போட்டுவிட முடியாது. பத்து வருஷப் பழக்கத்தை மிகவும் சாதாரணமாக நீங்கள் மதித்து விட்டீர்கள்." தணிகாசலம் பழங் கதை முழுவதையும் அவரிடம் கூறினான். தன்னால் விலக்கவும் முடியாத, சேர்த்துக் கொள்ளவும் முடியாத நிலையில் தங்களுடைய பற்றுதல் வளர்ந்து வந்ததைத் தெரிவித்தான். "துன்பம் வந்த காலங்களில் நான் தூள் தூளாகச் சிதறி விடாமல், என்னைத் தாங்கி வளர்த்தவள் உமா. போட்டி, பொறாமை, வறுமை, ஏமாற்றம், எதிர்ப்பு இவ்வளவு சங்கடங்களுடன் நான் என் கலையை வளர்த்து வருகிறேன். எனக்கு உங்கள் பெண்தான் அருமருந்து.— என்னை வேறு என்ன செய்யச் சொல்கிறீர்கள்? என்னுடைய நிலையில் இருந்து கொண்டு நீங்கள் சொல்லுங்கள்."

இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, "உமா செத்துப் போயிருப்பாள்! உமா செத்துப் போயிருப்பாள்!" என்று தலை தலையாக அடித்துக் கொண்டார் சந்திரசேகரன். அவள் உயிருடன் இருப்பதாக எழுதிய எழுத்துக்களை அவர் நம்பவே யில்லை. தணிகாசலத்தின் தோள்களைப் பிடித்துக் குலுக்கி, "உமா செத்துத்தானே போயிருப்பாள்?" என்று கேட்டார்.

"'சீரழிந்து வாழ்வதைவிடச் செத்துப் போவதே மேல்' என்று அன்றைக்குக் கூறிய அதே வாயால் அவர் இப்படிக் கதறியது தணிகாசலத்துக்கு என்னவோ போலிருந்தது. பேராசிரியர் மிகவும் பயங்கரமாக விழித்துக்கொண்டு பதறினார். பெண்ணுக்குப் பெண்ணாக, ஆணுக்கு ஆணாக, கண்ணுக்குக் கண்ணாக வளர்த்த ஒரே ஒரு அருஞ் செல்வமல்லவா? அவளுடைய படிப்புக்கும் பாதுகாப்புக்கும் அவர் செய்த செலவுகள் மிகப் பெருஞ் செலவுகள். சௌந்தரத்தம்மாளின் குடும்பம் விரைவில் முன்னேறியதற்குக் காரணமே உமாவுக்காக அவர் செலவழித்த பணத்தினால் தான் என்றால் மிகையில்லை.

"அவள் கட்டாயம் உயிருடன் இருப்பாள். எனக்காக அவள் எங்கேயாவது தன்னுடைய உயிரை வைத்துக்கொண்டு உலவுவாளே தவிர, ஒரு போதும் சாக மாட்டாள். அதனால் ஏற்படும் கஷ்டத்தில் எனக்குத்தான் அதிகப் பங்கு" என்றான் தணிகாசலம்.

பம்பாய்ச் செய்தியை அவன் சொல்லவில்லை. நிச்சயமாய்த் தெரியாத ஒன்றைச் சொல்லி விட்டு, அங்கு இல்லாவிட்டால் அதிர்ச்சி ஏற்படுவதை அவன் தவிர்க்க விரும்பினான். கௌரியும் எச்சரிக்கை செய்திருந்தாளல்லவா?



"நீங்கள் கவலைப்பட வேண்டாம். நாம் இருவருமே அவளைத் தேடிப் பார்ப்போம். உமாவால்கூட வெகு நாட்கள் எங்களைப் பிரிந்து இருக்க முடியாது" என்றான் தணிகாசலம்.

"அவள் திரும்பி வந்தால் போதும்; எப்படியாவது எனக்கு இந்த விஷயத்தில் நீங்கள் உதவி செய்யுங்கள்."

"உங்கள் கவலை என் கவலை. அதை எனக்கே விட்டு விடுங்கள். இரண்டு நாட்களில் பம்பாய்க்குப் புறப்பட்டு ஒரு வாரம் தங்கித் திரிகிறேன். திரும்பியவுடன் உங்களைச் சந்திக்கிறேன்."

"பம்பாய்க்கா? அங்கு உமா போயிருப்பாள் என்று நீங்கள் நம்புகிறீர்களா? அவள் ஏன் அங்கு போக வேண்டும்? யார் இருக்கிறார்கள் அங்கே?" என்று

கேள்விமேல் கேள்வியாக அடுக்கிக் கொண்டே போனார் பேராசிரியர்.

தணிகாசலம் என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் திகைத்தான். பிறகு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு சொன்னான்: "பம்பாய்க்குப் போயிருக்கலாம் என்று ஏதோ என் மனத்துக்குள் சொல்கிறது. அங்கு அவள் தோழி இருக்கிறாள். அவளைப்பற்றி என்னிடம் பலமுறை சொல்லியிருக்கிறாள். அதனால் அவள் பம்பாய்க்குப் போய் இருக்கலாமோ என்று நினைக்கிறேன்."

"அவள் அங்கு இல்லாமல் போய் விட்டால், என் அருமைக் கண்மணி உமா அங்கு இல்லாமல் போய் விட்டால், நான் என்னசெய்வேன்!" என்று சொல்லி மீண்டும் கண்ணீர் விட்டார் பேராசிரியர் சந்திரசேகரன்.

"இந்த உலகில் அவள் எங்கிருந்தாலும் அவளைத் தேடிக் கண்டு பிடித்து



விடுவேன். அதைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள். முதலில் பம்பாய் போய் விட்டு வருகிறேன்" என்றான் தணிகாசலம்.

"நானும் அதற்குள் தில்லிக்குப் போய்ச் சந்திரலேகாவுடன் திரும்பி வருகிறேன். தில்லியில் நான் வேலை பார்த்தது போதும்; பட்டணத்துக்கே வந்து விடுகிறேன்" என்றார் பேராசிரியர்.

பேராசிரியர் சந்திரசேகரனும் தணிகாசலமும் சற்று நேரம் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு மௌனமாக அமர்ந்திருந்தனர். அவர்கள் இருவர் முகங்களிலும் அவர்கள் உள்ளத்து வேதனை நன்றாகத் தெரிந்தது. பேராசிரியர் தணிகாசலத்தைக் கையெடுத்துக் கும்பிட்டார். மிகுந்த சோர்வுடன் அவனிடம் விடைபெற்றுக் கொண்டார்.

பம்பாய்க்குத் தணிகாசலம் புறப்படுகிற நாளன்று கண்ணபுரத்திலிருந்து தேவகியின் பதில் வந்தது. தேவகியின் முகத்திலும் சரி, பேச்சிலும் சரி, எழுத்திலும் சரி, தணிகாசலம் ஏதோ ஒரு உறுதியான ஆறுதலைக் கண்டான். கடிதத்தின் முடிவில் அவள் சொல்லியிருந்தது அவன் பரபரப்பைத் தணித்தது. "உமா இங்கு வரவில்லை. ஆனால் அவளைப் பற்றி நீங்கள் யாருமே கவலைப் படவேண்டாம். அவளுடைய நிலையில் அவள் சௌந்தரத்தம்மாளுடனும் தங்க முடியாது. உங்களுடன் இருப்பதையும் அவர்கள் விரும்பவில்லை. எத்தனையோ பெண்கள் பாதுகாப்பான இடத்தில் இருந்து கொண்டு உழைத்துப் பிழைக்கவில்லையா? அவள் இப்போதைக்குத் தனியாக இருப்பதுதான் சரி. சென்னைக்குத் திரும்பி வராமல் வேறு எங்கே போகப் போகிறாள்? தயவுசெய்து வீண் பரபரப்பு அடைய வேண்டாம்."

பம்பாயில் அவனுடைய நண்பர் வந்து அவனை வரவேற்றார். அவருடைய வீட்டிலேயே அவன் தங்கினான். அவன் நடந்து கொண்ட விதம்தான் வீட்டில் எல்லோருக்கும் விநோதமாய்த் தோன்றியது. எதற்காக இப்படிப் பொறி கலங்கிய மனிதனைப் போல் அவன் தவித்துக் கொண்டிருக்கிறான்? 'குழந்தையின் பிரிவினால் ஏற்பட்ட துயரம் இன்னும் தீரவில்லை என்று அவனுடைய நண்பரும் அவர் மனைவியும் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

மனோன்மணியின் வீட்டை இருப்பிடம் கண்டு பிடித்து, விஷயத்தைத் தன் நண்பரிடம் கூடச் சொல்லாமல், அதிகாலையில் கிளம்பினான் தணிகாசலம். மனோன்மணியின் கணவர் வேலைக்குப் புறப்படுவதற்கு முன்னால் அவர்கள் இருவரையும் சந்திக்க விரும்பினான். சாதாரணமாக பம்பாய்க்கு வந்தது போலவும், வந்த இடத்தில் உமாவின் அப்பாவுக்காக அவளைப் பற்றி விசாரிப்பதுபோலவும் கேட்க நினைத்தான். மூன்றாவதுமாடியில் இருந்தது அவர்கள் வீடு. 'உமா இருக்க வேண்டுமே! கட்டாயம் இருந்தே தீர வேண்டும். வேறு எங்கும் போகமாட்டாள்' என்றுபலவாறு மனத்தைத் தேற்றிக் கொண்டு, அந்த வீட்டின் கதவை மெல்லத் தட்டினான். உமா அங்கே இல்லாவிட்டால் அந்தப் படிகளில் திரும்பிவரக் கூடிய உடல் வலிமை அவனிடம் இல்லை. மெல்லத் தட்டிப் பலனில்லை. உடனே நிதானம் இழந்து படபடவென்று வேகமாகக் கதவைத் தட்டத் தொடங்கினான்.

"யார் அது?" என்று கேட்டுக் கொண்டே மனோன்மணி கதவைத் திறந்தாள். வியப்பின் மேலீட்டால் அவளுடைய அழகிய முகம் ரத்தமின்றி வெளுத்து விட்டது. **(தொடரும்)**



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்.

பெப்ஸ் வில்லை ஒன்றை சுவைத்தால் வலியைக் குறைக்கவும், தொண்டைப்புண் பிராங்கைடிஸ், இருமல் அல்லது ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும் செய்யும். அதன் குணமளிக்கும் ஆவியை அனுபவியுங்கள். பெப்ஸ் உடனே நிவாரணம் அளித்து, விரைவில் குணமூட்டுகிறது. அபாயகரமான மருந்துகள் இதில் சேரவில்லை. குழந்தைகளுக்கும் கூட அபாயமின்றி கொடுக்கலாம்.




பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.
எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

FPY-55-TAM

சோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி
88, நைனியப்ப நாயக் தெரு, சென்னை-3



அதிகமாக
உறுதியாக
வழவழப்பாக
எழுதக் கூடியது

டிஸ்ட்ரிபியூட்டர்கள்
ராஜேந்திரகுமார் & கோ.
236, அப்துல் ரஹ்மான்
தெரு, பம்பாய்-3

**RITESHARP** *Pens*
GHORUPDEV, BOMBAY 10

# அசல் காஞ்சீபுரம் பட்டுச் சேலைகள்

★

எல்லா தினுசு பட்டுச் சேலைகள் டிஷ்யூ சேலைகள், பாவாடை ரவிக்கைத் துண்டுகள் நியாயமான விலைக்குக் கிடைக்குமிடம்

★

**காஞ்சீபுரம் முருகன் பட்டு நெசவாளர் கூட்டுறவு உற்பத்தி விற்பனைச் சங்கம் லிமிடெட்**

79, காந்தி ரோடு - காஞ்சீபுரம்

★

டாக்டர் பி. எஸ். ஸ்ரீனிவாசன்
தலைவர்

# வாழ்க மணமக்கள்



ஜி. என். சக்ரபாணி செட்டி அன்ட் சன்ஸ் கம்பெனியின் டைரக்டர் திரு ஜி. ராமசாமியின் புதல்வர் திரு ஸ்ரீதரனுக்கும் சௌ. கனிதாவுக்கும் திருமணம் நடந்தது.



சென்ட்ரல் ரயில்வேயைச் சேர்ந்த திரு வி. நாராயணசாமியின் புதல்வி சௌ. லலிதாவை ஸ்ரீ நித்யானந்தன் திருமணம் செய்து கொண்டார்.



பிலிப்ஸ் இந்தியா கம்பெனியின் பிராந்திய விளம்பர அதிகாரி பி. எஸ். அய்யர் சௌபாக்கியவதி பார்வதியை மணம் புரிந்து கொண்டார்.



பிரபல டைரக்டர் சாந்தாராமின் காரிய தரிசி திரு ஆர். வி. சகுவருக்கும் திரு கே. வி. கிருஷ்ணய்யர் புதல்வி சாரதாமணிக் கும் விவாகம் சிறப்பாக நடந்தது.



பர்மாவாழ் இளந்தமிழர் திரு மு. குமாருக்கும் செல்வி முத்தம்மாளுக்கும் ரங்கூன் நகரத்தில் திருமணம் வெகு விமரிசையாக நடந்தேறியது.



மகாராஜபுரம் விசுவநாதய்யர் பேத்தி சௌபாக்கியவதி லட்சுமிக்கும் டாக்டர் எஸ். கிருஷ்ணசுவாமி அய்யர் புதல்வன் சங்கரனுக்கும் திருமணம் நடந்தது.

# கால்கேட் குளோரோபில்* ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப்பலப்படுத்துகிறது.

**வாய்நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

வேறு சாதாரண பற்பசையை விட மிக மிகத்தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற் பசையிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை!**




* நீரில் கரையும் குளோரோ-பிலின்ஸ் சேர்ந்தது.

**இதோ!** பெரிய எக்கானமி அளவில் கிடைக்கிறது

# அவனுக்கு ஜான்ஸன்ஸ் பேபி பவுடரே ஏற்றது




இலவசபுத்தகம்: ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது தமிழ் பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிடவும்!

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப்
இந்தியா பிரைவேட் லிமிடெட்
பி. ஓ. பாக்ஸ 1976,
டிபார்ட்மெண்ட் 84-'C'
பம்பாய்

# செல்வமும் சுதந்திரமும்

கு. சந்தானம்

## 5. செல்வப் பிரிவினை

நகர வாழ்க்கையும், இயந்திரத் தொழிலும் அடிப்படையாகக் கொண்ட இயந்திர சகாப்தத்தில் வாழ்க்கை மிகவும் சிக்கலாகி விடுகிறது. குழந்தை வீட்டில் பிறக்க முடியாது. ஆஸ்பத்திரியில்தான் பிறக்கவேண்டும். பிறந்த குழந்தை தாய்ப் பாலில் வளராது. தாய்க்குப் பாலிராது. இருந்தாலும் சில வேளை அதைக் கொடுத்துத் தன் கட்டைத் தளர்த்த அவளுக்கு மனம் இராது. ஆதலால் செயற்கை உணவுகளைக் கொண்டே வளரும் பக்கத்தில் மைதானமும், கழனியுமிருக்க மாட்டா. தெருக்களில் போய் விளையாடுவது அபாயம். ஆதலால் மூன்று வயது முதல் விளையாட்டுப் பள்ளிக்கூடத்துக்கு (கிண்டர் கார்டன் ஸ்கூல்) அனுப்பப்படுகிறது. அங்கிருந்து பலவித கல்வி ஸ்தாபனங்களுக்குக் கட்டாயமாக 15 வயது வரையிலும், அதன் பின் 5-ல் இருந்து 10 ஆண்டுகளுக்கு யுவன் அல்லது யுவதியின் புத்திக்கும், பெற்றோரின் சக்திக்கும், அதிகாரிகளின் அனுமதிக்கும் ஏற்றவாறு உயர்தரக் கலாசாலைகளில் கல்வி பெற வேண்டும். அதன் பின்னரே ஏதாவது தொழில் செய்து சம்பாதிக்க முடியும். அதுவரையில் பெற்றோர்களோ, சமூகமோ செலவுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

குடும்ப வாழ்க்கையின் இதர அம்சங்களும் அப்படியே. குடிப்பதற்கு ஜலம்; மலஜலம் கழிப்பதற்குச் சாக்கடை வசதிகள்; உணவு வைப்பதற்கு வசதிகளும், பொருள்களும், உடைகளும் அவற்றைச் சலவைசெய்யும் வசதிகளும்: தொழிலுக்குப் போக வேண்டிய போக்குவரத்து சாதனங்கள்; ஓய்வு காலங்களிலும், விடுமுறை நாட்களிலும், விநோத வசதிகள்: இவையனைத்தும் சர்க்கார் அல்லது பொதுஸ்தாபனங்கள் மூலமாகவும், முதலாளி ஸ்தாபனங்கள் மூலமாகவும் ஏற்பாடு செய்யப்படுகின்றன.

இவற்றுக்கு வேண்டிய செலவுகளை விவசாயமும், இதர உற்பத்தித் தொழில்களும் வகிக்க வேண்டும் அல்லவா? மேலும் வயது வந்தவர்களைத் தங்கள் குடும்பங்கள் போஷிக்கும் என்று விட்டுவிட முடியாது. உதவிச் சம்பளம் கொடுக்க வேண்டும். வியாதிகளைத் தடுக்கவும், நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்யவும் மிகவும் வளர்ந்திருக்கும் விஞ்ஞான முறைகளில் ஏற்பாடு செய்ய ஏராளமான பணம் வேண்டும். இயந்திரம் பெருகிய நாடுகளில் அதிகச் செல்வம் இருப்பதால் பாதுகாப்புகளின் அவசியம் அதிகரித்து, சைனியச் செலவும் அதிகமாகிறது.

இவ்விதம் இயந்திர சமூகத்தின் செல்வம்,

1. தொழிற்சாலையிலும், விவசாயப் பண்ணைகளிலும் வேலை செய்யும் தொழிலாளிகளின் ஊதியம்.

2. போக்குவரத்துச் சாதனங்கள், வியாபாரம், விநோத விடுதிகள் முதலிய உப தொழில்களில் பணியாற்றுவோரின் கூலியும், சம்பளமும்.

3. பாதுகாப்பு, சுகாதாரம், கல்வி முதலிய பொதுநலங்களை நாடும் அரசாங்க, பொது ஸ்தாபனங்களின் உத்தியோகஸ்தர்களின் சம்பளங்கள்.

4. முதலாளிகளின் லாபம், வட்டி.

5. வருங்காலத்தில் தொழிற்சாலைகளையும் இதர வசதிகளையும் விருத்தி செய்வதற்கு வேண்டிய சேமிப்பு.

என்று ஐந்து வகைகளாக விநியோகப்படுகின்றன. இதில் மூன்று முக்கிய பிரச்னைகள் எழும்புகின்றன.

முதலாளிகளுக்கு ஏன் பங்கு கொடுக்க வேண்டுமென்பது முதல் கேள்வி. அவர்கள் தங்கள் புத்தியாலும், சாமர்த்தியத்தாலும் தொழிலைத் திறமையுடன் நடத்துகிறார்கள், தங்களுக்குக் கிடைக்கும் லாபத்தைவிடச் சமூகத்துக்கு அவர்கள் மூலம் அதிக லாபம் கிடைக்கிறது. தொழில்களைச் சர்க்கார் மயமாக்கிவிட்டால் அரசாங்கம் எதேச்சாதிகாரமாகி மக்களின் சுதந்திரங்கள் பறிமுதலாகி விடுமென்பது முதலாளித்துவவாதிகளின் கட்சி. இதற்கு எதிராக, பொது உடைமை வாதிகள் கூறுவதாவது: இக்காலத்தில் முதலாளிகள் எக்காரியமும் செய்வதில்லை. அதிக சம்பளம் கொடுத்து வைத்திருக்கும் மானேஜர்களை தொழிற்சாலைகளை நடத்தி வருகிறார்கள். மக்கள் சுதந்திரங்களைப் பற்றி முதலாளிகள் பேசுவது ஓநாய் ஆடுகளுக்காகக் கண்ணீர் விடுவது போலாகும். முதலாளித்துவத்தில் எல்லா உரிமைகளும், முதலாளிகளுக்கே கிடைக்கின்றன. அவர்களுடைய தயவில் கிடைக்கும் கூலியைத் தவிர, பொது மக்களுக்கு எவ்வித சுதந்திரங்களும் இல்லை என்கிறார்கள்.

முதலாளிகளிடம் இருக்கும் தொழிற்சாலைகளின்மீது நிபந்தனைகள் ஏற்படுத்தி, அவற்றில் முக்கியமானவற்றைச் சமூக ஸ்தாபனங்களாக்கி அவற்றிற்கும், கூட்டுறவுச் சங்கங்கள், சர்வகலாசாலைகள் முதலிய ஸ்தாபனங்களுக்கும் சட்ட வரம்புக்குட்பட்டுச் சுதந்திரமளித்து நிர்வாகம் செய்வதால்

முதலாளித்துவத்தின் நிலைமைகளையும், பொது உடைமையின் எதேச்சாதிகார அக்கிரமங்களையும் தவிர்த்து நியாயமான சமூக வாழ்க்கையை நிலைநிறுத்தக்கூடும் என்பது பொது நலவாதிகளின் வழக்கு.

* * *

இரண்டாவது பிரச்னை ஊதியங்களுக்குள் ஏற்றத் தாழ்வுகள் எவ்வளவு தூரம் அனுமதிக்கப்படலாம் என்பது. ஒவ்வொருவருக்கும் வேண்டிய அளவு வழங்கி அவரிடமிருந்து சாத்தியமான சேவையைப் பெறுவதே பொது உடைமையின் லட்சியம் என்று மார்க்ஸ் போதித்தார்.

இதை ருஷ்யப் புரட்சியின் ஆரம்பத்தில் சிறிதளவு பரிட்சை செய்தனர். ஆனால் சாத்தியப்படவில்லை. தொழிலுக்கு வேண்டிய தேர்ச்சிக்கும், சாமர்த்தியத்துக்கும் உழைப்புக்கும் தக்கவாறு ஊதியம் கொடுத்தாலொழியத் தொழிற்சாலைகளும், விவசாயப் பண்ணைகளும் சரிவர நடைபெறாது என்று கண்டு கொண்டனர்.

தற்சமயம் ருஷ்யாவில் அமெரிக்காவைக் காட்டிலும் ஏற்றத் தாழ்வுகள் இருப்பது வியக்கத்தக்கதாகும். பாரதத்திலும் அம்மாதிரி தாரதம்மியம் இருக்கிறதென்று கூற வேண்டும்.

ஒரு குமாஸ்தாவுக்கும், தலைமை உத்தியோகஸ்தர் அல்லது நிர்வாகிக்கும் அமெரிக்காவில் 5, 6 மடங்குக்கு மேல் சம்பளமில்லை. இங்கோ 20, 30 மடங்கு இருக்கிறது. ஆனால் இந்திய உத்தியோகஸ்தர்களுக்கும், கம்பெனி மானேஜர்களுக்கும் அதே வேலை செய்யும் அமெரிக்க நிர்வாகிகளைவிடக் குறைவான ஊதியமே கிடைக்கிறது. இந்திய குமாஸ்தாவின் ஊதியம் அமெரிக்கக் குமாஸ்தாவின் ஊதியத்தில் மிகவும் சிறிய பாகமே கிடைப்பதால் தாரதம்மியம் அதிகமாக இருக்கிறது. நமது உத்தியோகஸ்தர்கள் இயந்திர சகாப்தத்திலும், குமாஸ்தாக்கள் விவசாய சகாப்தத்திலும் இருக்கிறார்கள் என்று கூறலாம்.

சமூகப் பொது நன்மைகளுக்காகச் செல்வத்தில் எத்தனை பாகம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது மூன்றாவது பிரச்னை. கல்வி, சுகாதாரம் முதலிய சேவைகளில் ஈடுபடுவோர் நேரடியில் சமூகத்தின் செல்வத்தை விருத்தி செய்வதில்லை. ஆனால் அவர்கள் இல்லாவிடில், இயந்திர சமூகம் சீர்குலைந்து விடும். அப்படியே குழந்தைகள், கிழவர்கள், நோய்வாய்ப்பட்டவர் முதலியோரின் சம்ரட்சணையைச் சமூகம் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற கொள்கை இயந்திர சகாப்தத்தின் மூலக் கொள்கைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

தொழிலாளிகளின் ஊதியங்களை மிதமாக வைத்துக் கொண்டு, சமூக நன்மைகளைப் பெருக்குவதே நலமென்று பொது உடைமை அரசாங்கங்கள் கருதுகின்றன. தொழிலாளிகளின் ஊதியங்களை உயர்நிலையில் வைத்துக் கொண்டு, சமூக வசதிகளை மிதமாக வைக்க வேண்டியது முதலாளி சமூகத்துக்கு அவசியமாக இருக்கிறது. பொதுநலவாதிகள் பொது உடைமைவாதிகளைப் போல் எண்ணினாலும், மிதமான ஊதியத்துக்குத் தொழிலாளர் சம்மதத்தைப் பெற முடியுமா என்பது சந்தேகம்.

இயந்திர சகாப்தத்தில் விவசாயத்தின் நிலை கவலைக்கிடமாகின்றது. நகர வாழ்வில் பழகிய எவரும் கிராமத்துக்குப் போக விரும்ப மாட்டார்கள். ஆனால் தானியமும் பருத்தியும், இதர விளைபொருள்களும் தொழிலாளிகளுக்கும், தொழில்களுக்கும் இன்றியமையாதவை.

இயந்திரங்களைக் கொண்டு மனித, மாடு உழைப்பைக் குறைத்து விவசாயத்தையும் ஓர் இயந்திரத் தொழிலாகச் செய்வதற்காகப் பெரும் முயற்சிகள் செய்யப்படுகின்றன. அமெரிக்காவில் விவசாயப் பண்ணைகள் தனி முதலாளிகளால் நடத்தப் படுகின்றன. அவர்களுக்கு அமெரிக்க அரசாங்கம் பல சகாயங்களைச் செய்து வருகின்றது. ருஷ்யாவில் எல்லா நிலங்களையும் பெரும் பண்ணைகளாக வகுத்து, அவைகளைத் தொழிற்சாலைகளைப் போல் நடத்தி வருகிறார்கள். ஆனால் அதில் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. அப்பண்ணைகளில் தொழிலாளர் ஒழுங்காக வேலை செய்வதில்லையென்றும், கால்நடைகளைச் சரிவரக் கவனிப்பதில்லை என்றும் புகார் செய்யப்படுகிறது.

விளையாட்டு மன்னர்கள் ௫

# டென்னிஸ் வீரர் விஷ்ணு மோகன்

பிரான்ஸ், இங்கிலாந்து தேச அரண்மனைகளில் முதன் முதலில் ஆடப்பட்ட விளையாட்டு டென்னிஸ். அதனால்தான் அதை ராஜ விளையாட்டு என்று இன்றும் கூறி வருகின்றனர்.

சென்னையில் பல டென்னிஸ் சங்கங்களுக்குள் லீக் முறையில் பந்தயப் போட்டி சமீபத்தில் நடந்தது. எந்தச் சங்கம் அதிகம் வெற்றி பெற்று, நிறைய எண்ணிக்கை எடுக்கிறதோ, அதுவே வெற்றி பெற்றதாகக் கருதப்படும். சென்னை ஜிம்கானா கிளப் இந்த வருஷம் அந்த வெற்றியைச் சம்பாதித்துக் கொண்டது. அந்தச் சங்கத்துக்கு வெற்றியைத் தேடித் தந்தவர்களுள் திரு விஷ்ணுமோகன் முதன்மையானவர்.

அவருக்கு வயது 32. ஆள் நல்ல உயரம். விளையாடுவதற்கேற்ற நல்ல உடற்கட்டு. சென்னையில் பிறந்து வளர்ந்த அவர், தந்தை காக்கிநாடாவில் சப்ஜட்ஜாகப் பணியாற்றி வந்ததால், அவர் கல்லூரிப் படிப்பு காக்கிநாடாவில் தொடர்ந்தது. பள்ளியில் படிக்கையிலேயே அவர் டென்னிஸ் விளையாடக் கற்றுக் கொண்டார். கல்வி வளர வளர விளையாட்டுக் கலையும் வளர்பிறைச் சந்திரனைப் போல் வளர்ந்து வந்தது. சென்னை லயோலா கல்லூரியில் சேர்ந்து அவர் பி. ஏ. பட்டதாரி ஆனார். கல்லூரியில் படிக்கும்பொழுது அவர் விளையாட்டு உச்சநிலையில் இருந்தது. சட்டக் கல்லூரியில் சேர்ந்து வழககறிஞர் பட்டமும் பெற்றார். இப்பொழுது கார்டன் ஷட்ராப் கம்பெனியில் பணியாற்றி வருகிறார். அவருக்கு மணமாகி விட்டது. இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பனாராகி விட்டார்.

வழக்கறிஞர் திரு விஷ்ணுமோகன் 1950, 51, 52-ம் வருஷத்தில் சென்னையின் முதல்தர ஆட்டக்காரராக விளங்கியிருக்கிறார். அவருக்கு இந்தியாவில் நான்காவது ஸ்தானமும் கிடைத்தது. 1953-ம் வருஷம் அகில இந்திய டென்னிஸ் பந்தயத்தில் பாபுஜியோடு சேர்ந்து ஆடி வெற்றி பெற்றிருக்கிறார். 1955-ம் வருஷம் ஹைதராபாத்தில் நிகழ்ந்த சகல ராஜ்ய டென்னிஸ் போட்டியில் வெற்றிமாலை சூடிக் கொண்டார். 1957-ம் வருஷம் டிராப்னியோடு சேர்ந்து ஆடி, தென்னிந்திய வெற்றி வீரர் என்ற பட்டத்தையும் பெற்றிருக்கிறார். சமீபத்தில் கோயமுத்தூரில் நடந்த திரு வரதராஜுலு ஞாபகார்த்த டென்னிஸ் பந்தயத்தில் திரு சுமந்த் மிஸ்ராவோடு சேர்ந்தாடி வெற்றிக் கோப்பை பெற்றார். 1952-ம் வருஷத்தில் லண்டனுக்குச் சென்று விம்பிள்டன் போட்டியில் கலந்து கொண்டிருக்கிறார்.



சிலருக்கு ஆட்டத்திறமை இருக்கலாம். ஆனால் பிறர் வெற்றியைக் கண்டு எரிச்சலும் பொறாமையும் படுவார்கள். ஆனால் திரு விஷ்ணு மோகனிடம் அந்தக் குணம் சிறிதும் படியவில்லை. இந்தியாவின் முதல் தர ஆட்டக்காரர் திரு கிருஷ்ணனைப் பற்றிக் குறிப்பிடுகையில், "திரு கிருஷ்ணனுக்கு வெற்றிக்கு மேல் வெற்றி அவரது சலியா உழைப்பினாலும், பயிற்சியினாலுமே கிடைத்து வருகின்றது. இடைவிடாத உழைப்புக்கு வெற்றி நிச்சயம் உண்டு என்பதற்குத் திரு கிருஷ்ணனின் வெற்றியே அத்தாட்சி" என்று மகிழ்ச்சியோடு கூறினார்.

நல்ல திறமை மிக்க ஆட்டக்காரர் திரு விஷ்ணுமோகன். ஆனால் உத்தியோகம் பெற்றதும் அவரது பயிற்சிக்கு அவ்வளவு நேரமில்லை. அதனால் அவரது ஆட்டத் திறமையெல்லாம் வீணாகிறது. அயல் நாடுகளிலெல்லாம் இம்மாதிரி தலை சிறந்த ஆட்டக்காரர்களுக்கெல்லாம் ஆட்டத்திலேயே கவனம் செலுத்துவதற்கு வேண்டிய வசதிகள் செய்து தரப்படுகின்றன. ஆனால் நம் நாட்டில் அத்தகைய நிலை இல்லை. திறமை மிக்க விளையாட்டு நிபுணர்கள் வேலையில் புகுந்துவிட்டால் அவர்கள் விளையாட்டுக் கலை பெட்டியில் பூட்டப்பட்ட பொக்கிஷம் போல் ஆகி விடுகிறது. அயல் நாடுகளில் விளையாட்டுத் திறமை பெருகியிருப்பதற்கும் நம் நாட்டில் குறைந்திருப்பதற்கும் இதுவே காரணம்.

ஆஸ்திரேலியாவில் வாலிபர்கள் சண்டையைக் கண்டோ, ஏழ்மையைக் கண்டோ, வேலையில்லாக் கஷ்டத்தைக் கண்டோ சிறிதும் பயப்பட மாட்டார்கள். ஆனால் வாரந்தோறும் சனி, ஞாயிறு தினங்களில் டென்னிஸ் ஆட்டம் இடையூறுபட்டுக்குட்டிச் சுவராகிவிட்டால் அவர்கள் படும் பாடு சொல்லும் தரமன்று. அத்தகைய விளையாட்டு மோகம் அவர்களுக்குப் பெருகி இருப்பதால்தான் ஆஸ்திரேலியா இன்று டென்னிஸ், கிரிக்கெட் விளையாட்டுக்களில் முன்னணியில் நிற்கிறது. அந்த நாள் இந்தியாவுக்கு என்று வருமோ?

— குண்டுமணி

# தெய்வ சித்தம்

இரண்டு மாதங்களுக்கு முன், மைசூர் ராஜ்யத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தோம், நானும்—எனது நண்பர் நாகேசுவர ராவும்...அவர் என்னைவிட மிகவும் அனுபவசாலி; வயது முதிர்ந்தவரும்கூட. ஆனால் அவர் பேச்சிலும், நடப்பிலும் இளமை தாண்டவமாடியவாறு இருக்கும். கேலியாகப் பேசுவதிலோ, தம் அனுபவங்களைக் கதை மாதிரி சொல்லுவதிலோ அவருக்கு இணை அவரே தான்.

இரவு எட்டுமணி இருக்கும். காட்டுப்பாதையில் ஒரு சிறிய காரில் காப்பித் தோட்டங்களுக்குப் பெயர் போன சிக்கமகளூரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தோம். நான்தான் காரை ஓட்டிக் கொண்டிருந்தேன். எங்களிருவரைத் தவிர வேறு ஒருவரும் இல்லை...

''ராமு, பெரிய வேதாந்தி போல் எப்போதும் பேசித் தள்ளுகிறாயே! நான் ஒரு சிறிய அனுபவத்தைச் சொல்லுகிறேன். ஆனால் அதன் பிறகு நீ உனக்குள் உண்டாகும் உண்மையான மன நிலையை என்னிடம் ஒளிக்க மாட்டாயென்று சத்தியம் செய்தால்தான் எனக்கு அதைப்பற்றிச் சொல்வதற்கு விறுவிறுப்பும், உற்சாகமும் இருக்கும்'' என்று பீடிகை போட்டார். நிச்சயமாக நல்ல கதை இருக்கிறது, நல்ல சந்தர்ப்பத்தை விடக்கூடாது என்று என் உள் மனத்தில் எழும்பிய ஆவல், 'சரி, சத்தியம் எப்படி வேண்டுமானாலும் செய்து கொடுக்கிறேன்' என்று சொல்லத் தூண்டியது.

''சரி, சார்! ஆரம்பியுங்கள்'' என்றேன் ஆவலுடன். ''நான்கு மாதங்களுக்கு முன்னால் நடந்தது. இருந்தாலும் இன்று போல் என் மனக் கண்முன் தெரிகிறது'' என்று ஆரம்பித்தார். என்றும் இல்லாத பெருமூச்சுடன் துவங்கினார்.

......நாம் இன்றிரவு தங்கப் போகும் சிக்கமகளூரிலிருந்து கொப்பா என்னும் ஊர் சுமார் எழுபது மைல் இருக்கும். அங்கு போக வேண்டிய அவசியம் அச்சமயம் ஏற்பட்டது. பெரிய காப்பித்தோட்டச் சொந்தக்காரரிடம் ஒரு லக்ஷ ரூபாய்க்கு இன்ஷூர் செய்யக்கூடிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்தி அப்பக்கத்தில் வேலை செய்யும் எங்கள் இன்ஸ்பெக்டர் எழுதியிருந்தார்.

காலை ஒன்பது மணிக்கெல்லாம் காரில் கொப்பா நோக்கிப் புறப்பட்டேன்.

மணி பகல் பன்னிரண்டுக்கு மேலிருக்கும். ஒரு சிறிய ஊர் தென்பட்டது என்ன ஊர் என்று விசாரிக்க அவசியமேயில்லை. இருந்தாலும் சாலை நெடுகிலும் ஒன்றன் பின் ஒன்றாக நிறுத்தப்பட்டிருந்த லாரிகள், பஸ்கள், இரண்டு மூன்று கார்கள் கூட— என்னை ஆச்சரியப்படுத்தின. இந்த வேளையில் இந்தக் காட்டுப்பாதையில் இவ்வளவு வண்டிகள் நிற்க ஏதாவது காரணம் இருக்கத்தான் வேண்டும் என்று உள் மனம் உடனேயே சுட்டிக் காட்டியது. நானும் ஒரு ஓரமாகப் பார்த்து என் காரை நிறுத்திவிட்டு, அதனின்றும் இறங்கி விசாரிக்கத் தொடங்கினேன். கொச்சைக் கன்னடம் எனக்குத் தெரியும். அருகில் இருந்த திண்ணையில் படுத்திருந்த பெரியவர் ஒருவரைத் திக்கித் திக்கிக் கேட்டு வைத்தேன். ''பாளே ஹன்னூர் எனி கேளுதாரே; சன்னாகிஊட்டா சிக்கத்ததே.'' (பாளேஹன்னூர் என்னும் ஊர். இங்கு நல்ல சாப்பாடு கிடைக்கும்.)

அதுவரையில் சாப்பாட்டை நினைக்காமலிருந்த எனக்கு, பசி எங்கிருந்தோ விறுவிறுப்புடன் வந்து சேர்ந்தது.

ஒரு மாதிரியாக விசாரித்துக் கொண்டு அங்கிருந்த ஒரே 'ஹோட்டலுக்கு'ப் போய்ச் சேர்ந்தேன். நல்ல கூட்டம். பார்ப்பதற்கு மிகச் சாதாரண இடம். பந்தல் போட்டு, சில பழுதடைந்த மேஜை நாற்காலிகள் போட்டிருந்தன. பந்தலுக்கு வெளியே வெய்யில் காய்ந்து கொண்டு பலரும் அமர்ந்திருந்தனர்.

என் வயதையும் உடையையும் பார்த்துவிட்டோ என்னவோ, எனக்குத் தனி உபசாரம் கிடைக்கத் தாமதமே ஆகவில்லை. ஓட்டுப் போட்ட கோட்டைப் போட்டுக் கொண்டு, தலையில் சிறிய உச்சிக் குடுமியுடன் கூடிய ஒருவர் வந்து, சுத்தமான தமிழ் பாஷையில் ''ஸார் நம்ம ஊர் போலிருக்கே. எங்கே இவ்வளவு தூரம்! வியாபார விஷயமோ...இல்லாவிட்டால் காப்பித் தோட்டம் ஏதாவது வாங்கும் உத்தேசமோ?'' என்று மேன்மேலும் கேட்டவாறே உள்ளே அழைத்துப் போனார். பலகை போட்டு உட்காரச்சொன்னார். அவரே இலையும் போட்டார். ''லக்ஷ்மி! பெரியவருக்குச் சாப்பாடு போடு'' என்று உத்தரவு இட்டு, ''ஸார்! மற்றவர்களைக் கவனிக்க வேண்டும். என்னை மன்னியுங்கள்!'' என்று சொல்லியவாறே வெளியே போய் விட்டார்.

அந்த 'லக்ஷ்மி'யைப் போன்ற ஒரு அழகியை இவ்வுலகில் இதுவரை நான் கண்டதில்லை!

சுமார் பதினேழு, அல்லது பதினெட்டு வயது இருக்குமோ, என்னவோ! அவள் அழகை வர்ணிக்க ஆண்டவனால்தான் முடியும்.

சாப்பாடு முடிவதற்குள் பத்துத் தடவைகளாவது அவள் பரிமாற வந்திருப்பாள். அந்தக் களங்கமற்ற முகம், தெய்வத் திருமேனி. அவளிடம் ஒரு கவர்ச்சி இருக்கத்தான் செய்தது ...

'விலங்குகள் வாழும் காட்டுக்கு நட்ட நடுவே ஒரு ஊர். அதற்குள் ஒரு சாப்பாடு ஹோட்டல். தேன் கூண்டில் இருக்கும் தேனீக் கூட்டம் போல் ஒரே கூட்டம். அதன் நடுவே ஒரு ராணித் தேனீ போன்று கண்டவர் பிரமிக்கும் ஒரு கட்டழகி'—இது ஒரு புதிராகவே என் மனத்தில் நிலைத்தது.

சாப்பாடு விடுதிச் சொந்தக்காரரிடம் அவளைப்பற்றி ஒன்றும் கேட்கத் தோன்றவில்லை.

கொப்பா போய்ச் சேரும்போது மாலை மணி ஐந்து இருக்கும். பாவம் ஏஜண்ட் அனந்தன் எனக்காகக் காத்து அலுப்படைந்தவராகக் காணப்பட்டார்.

கே. எஸ். ராமானுஜம்



அவர் தயார் செய்து வைத்திருந்த 'கேஸ்' நான் எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாகவே முடிந்தது. அன்று அதிர்ஷ்டவசமாக, அவ்லூர் டாக்டரும் தயாராக இருந்து தம்முடைய பங்கை முடித்துக் கொடுத்தார்.

மாலை ஏழு மணிக்கெல்லாம் நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்த விடுதிக்குப் போய்ச் சேர்ந்தோம். நான் பாளைஹன்னூரைப் பற்றிய நினைவிலேயே லயித்திருந்தேன். இரவு வெகு நேரம் தூக்கம் வரவில்லை. போகும்போது அந்த ஹோட்டல் சொந்தக்காரரைச் சந்தித்து எப்படியும் அவரைப்பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டேன்.

பொழுது புலர்ந்து வெகு நேரம் கழித்துத்தான் நான் தூங்கி எழுந்தேன்.

நீராடிப் புத்தாடை உடுத்திக் கொண்டு மறுபடியும் பாளை ஹன்னூர் புறப்பட்டேன். நான் அங்கு வரும்போது தான் பஜனை ஆரம்பமாகி யிருந்தது. சத்தம் ஏதும் உண்டாக்காதவாறு தொலைவிலேயே வண்டியை நிறுத்திவிட்டு அக் கூட்டத்தின் ஒரு மூலையில் நின்று கொண்டேன். அப்பப்பா! அது தேவகானம். காதுக்கு எவ்வளவு இனிமையாக இருந்தது.

அது முடிந்த பிறகு சாப்பாட்டுச் சீட்டை வாங்கி அதற்காகப் பந்தலுக்குள் போனவாறே இருந்தனர் அங்கு கூடியிருந்தோர்.

மெதுவாகப் பெரியவரிடம் போனேன். "சுவாமி, தேவகானம் கேட்கும் பாக்கியம் அடைந்தேன்" என்று ஆரம்பித்தேன். அதுவரை என்னைப் பார்க்காமலிருந்ததால் வியந்தவராய், "ஸார், வாருங்கள், வாருங்கள். உங்கள் போன்ற பெரியவர்களின் வருகையே இந்த ஏழையின் குடும்பத்துக்குப் பெருமை. ஏது, இவ்வளவு சீக்கிரம்? நேற்றுத்தானே இவ்வழியே சென்றீர்கள்?" என்றார்.

"போன காரியம் உடனுக்குடனே முடிந்து விட்டது. இரவைக் கொப்பாவில் கழித்து விட்டு

கான்ஸ்டபிள்: நான் போய் ஒரு அரைப் பைத்தியத்தைப் பிடித்து வந்திருக்கிறேன் சார்!



இன்ஸ்பெக்டர்: நீ போய் எப்பொழுது முழுசாக ஒரு காரியத்தைப் பண்ணி இருக்கிறாய்?

எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் கிளம்பி வந்து விட்டேன். ஆமாம், உங்களுடைய புத்திரியின் பெயர் சொன்னால் விலங்குகள் ஒன்றும் செய்யாதாமே?'' என்று அடக்கமாகக் கேட்டு வைத்தேன். ''சுவாமி! அது ஒரு பெரிய கதை. சாப்பாடு முடிந்த பிறகு லக்ஷ்மியின் தோட்டத்தைப் பார்க்க உங்களை அழைத்துப் போகிறேன். அப்போது எங்களைப் பற்றிய விவரமெல்லாம் சொல்லுகிறேன்'' என்றார்.

லக்ஷ்மியின் தோட்டத்துக்குச் சென்று அவர் சொன்ன வரலாறு இதுதான்:

''நான் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்து படிப்பு வாசனையற்றுத் திரிந்து கொண்டிருந்தேன். இப்போதும் நினைவிருக்கிறது. அப்போதெல்லாம் பாதி நாட்கள் பட்டினிதான். அப்படிப் பட்டினியிருந்த நான் வாழ்நாளில் பெரும் பாகத்தை மற்றவர்கள் பசியைப் போக்கும் பணியில் கழிக்க நேரிட்டது வியப்புத்தானே?

எனக்குப் பதினைந்து பதினாறு வயதிருக்கும். எங்கள் ஊருக்குப் பக்கத்தில் இருந்த ஒரு மிராசுதார் இந்தப் பக்கத்தில் காப்பித் தோட்டம் வாங்கியுள்ளதாகவும், சிக்கமகளூரில் குடியேறுவதாகவும், உதவிக்கு ஆள் வேண்டுமெனவும் கேள்விப்பட்டு என் உறவினர்கள் என்னை அவரிடம் அனுப்பினார்கள். என் தந்தையும் தாயாரும் எனக்கு நினைவு தெரியு முன்பே காலமாகி யிருந்தனர்.

இவ்வாறு சிக்க மகளூர் வந்த அந்த மிராசுதாருடன் நானும் வந்து சேர்ந்தேன். அப்போதிலிருந்து ஊர் போகவில்லை. சில வருஷங்களுக்குப் பிறகு என் எஜமானரும், எஜமானியுமாகப் பார்த்து எனக்கு இவ்வூர்ப் பெண் ஒருத்தியை மணம் செய்வித்துத் தனிக் குடித்தனம் ஏற்பாடு செய்து கொடுத்தனர். எஜமானிக்குக் குழந்தையேயில்லை. வெகு காலத்துக்குப் பிறகு ஒரு மகன் பிறந்தான். அவன் பிறந்த வேளை, அவனுக்கு இரண்டு வயது இருக்கும் போது இப்பக்கத்தையே சூறையாடிய பிளேக் நோய் அவன் தகப்பனையும், தாயையும் கொண்டு போயிற்று. இறக்கும் தறுவாயில் அவர்கள் எனக்கு அளித்த செல்வம்தான் அவர்களுடைய ஒரே மகன்...அவர் நிறையக் கடன் வாங்கியிருந்ததால், கோர்ட் ஆர்டர் வந்து அவர்கள் காப்பித் தோட்டம் ஏலம் போடப்பட்டது. அவருக்கு ஒரு வக்கீல் நண்பர். அவர் தம் நண்பராகிய ஒரு ரோட் கண்டிராக்டரிடம் சொல்லித்தான் நான் என் எஜமானரின் அஸ்திக் கலசத்துடன் பாலனை ஹன்னூருக்குக் குடி வந்தேன்.

காலச் சக்கரத்தின் மாறுதல்களையும் விந்தைகளையும் என்னவென்று சொல்வது? நானும் என் மனைவியும் கொஞ்சம் பலகாரம் செய்து விற்று வயிறு வளர்த்து வந்தோம். காட்டுப் பிரதேசம். குளிர் காலத்திலோ கடும் குளிர். எல்லாக் கஷ்டங்களிலும் ஒளியாக இருந்தது அந்தச் சிறிய பாலகன் தான்.

இப்படிக் காலத்தைப் போக்கி வரும்போது என் மனைவி கர்ப்பவதியானாள். இவ்வூரில் வசதியில்லாததால் என் மனைவியை, பெங்களூரில் அவள் பிறந்தகத்துக்கு அனுப்பினேன். மாதங்கள் பல கடந்தன. எனக்கு ஒரு முறையும் அவளைப் பார்த்து வர இயலவே யில்லை... ஒரு நாள் அவளிடமிருந்து எனக்கு வந்த கடிதமொன்று திடுக்கிட வைத்தது. ''இது கண்டவுடன் அஸ்திக் கலசத்துடன் வரவும்'' என்பதே அதன் சாராம்சம். ஒன்றும் புரியாவிட்டாலும் என் சிறிய வியாபாரத்தைப் பக்கத்து வீட்டாரிடம் ஒப்படைத்து விட்டு என் மனைவியைப் பார்க்க விரைந்தேன்... ஒரு மாதத்துக்கு முன்பே பிரசவமானதாகவும், உயிரில்லாத பெண் மகவைப் பெற்றதாகவும் அறிந்து மிகவும் வேதனையடைந்தேன். இருந்தாலும் நல்ல வேளையாக அவளை நல்ல மாதிரியாகவே பார்க்க முடிந்தது. ஆனால் ஒரு விஷயத்தில் அவள் பிடிவாதம் பிடித்தாள். உடனே அஸ்திக் கலசத்துடன் காசிக்குப் போகவேண்டுமென்றாள், எங்கள் எஜமானியம்மாள் இறக்கும் தறுவாயில் காசி சென்று கங்கையில் தங்கள் அஸ்தியைக் கரைக்க வேண்டுமென்று கேட்டிருந்தாளாம். அது செய்யாததாலேயே பிறந்த குழந்தைக்கு உயிர் இருக்கவில்லை என்ற முடிவுக்கு வந்திருந்தாள். நான் பல வருஷங்களாக உண்டியலில் சேகரித்து வைத்திருந்த ரூபாய் இருநூறை என்னிடம் கொடுத்துத் தாமதமின்றிக் கிளம்ப வேண்டுமென்றாள். எல்லாம் ஈசன் ஆக்ஞை போலும் என்று மறுநாளே எங்களுக்கு எஜமானர்கள் விட்டுப் போன பாலகன் விஜயனுடன் காசியை நோக்கிப் புறப்பட்டோம்.

ரயில்களில் கூட்டம் சொல்லி முடியாது. ஒரு மாதிரியாகக் காசி சென்று கங்கையில் நீராடி அஸ்தியையும் கரைத்துவிட்டுக் கல்கத்தா வழியாகச் சென்னை திரும்பிக் கொண்டிருந்தோம். நவம்பர் மாதம் முதல் வாரம் என்று ஞாபகம். கல்கத்தாவில் ஒரே நாள் தங்க நேரிட்டதென்றாலும் அங்கு நாங்கள் பார்த்த பயங்கரக் காட்சிகள் இன்றும் என்னை நடுங்க வைக்கின்றன. ரயிலடிக்கு நடந்து வந்துகொண்டிருந்தோம். எங்கு பார்த்தாலும் ஒரே பிணம், பட்டினியால் இறந்தவர்கள் எண்ணிக்கையை ஆண்டவனே அறிவார்.

# சௌகரியமும் திறமையும் தருமாறு அமைக்கப்பட்டுள்ளது.

பிரபாத் பிரஷர் சமையல் ஸ்டவ்கள், புளோ லாம்ப்ஸ், காஸ் லைட் லேம்ப்ஸ், காஸ் மாண்டில்ஸ் ஆகியவை முதன் முதலாக இந்தியாவில், 1928-ல் இந்த ரகங்களில் தயாரிக்கப்பட்டன.

அன்று முதல் வருடந்தோறும் செய்யப்பட்டுள்ள அபிவிருத்திகளால் இவை இன்றும் முதல் தரமானவையாக விளங்குகின்றன.



## பிரபாத் பிராடக்ஸ்

"இந்தியாவில் முதன்மையானவை, இன்றும் முதல்தரமானவை."








பிரபாத் (ஸ்டவ் & லாம்ப்) பிராடெக்ட்ஸ் கம்பெனி, பிரைவேட் லிட்.
லோமின் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் தெரு, கோட்டை, பம்பாய்-1.

ரயிலடிக்கு இரண்டு பர்லாங்கு தூரம்கூட இருக்காது. விஜயன் பிணமாக இருந்த ஒரு இளம் தம்பதிகளின் சவத்தினருகே நின்று உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான். 'அதை யெல்லாம் பார்க்காதே, விஜயா!' என்று அதட்டியவாறே அவனைப் பிடித்து வர என் மனைவி போனாள். ஆனால் அவளும் அங்கேயே நின்று விட்டாள். இருவரையும் கடந்தவாறே நானும் அங்கு போனேன். பார்த்த காட்சி என் வாழ்நாளிலேயே பார்த்திராதது. இளமை மாறாத இரு அன்பு முகங்கள், ஒரு புவனும் ஒரு இளம் பெண்ணும். பட்டினிக் கொடுமையால் சவமாகியிருந்தனர் என்பது அங்கு நி லவியிருந்த நிலையிலிருந்து எனக்குப் புரியாமல் இல்லை. ஆனால் என்னையும் அங்கேயே உன்னிப்பாக நிற்க வைத்தது அவர்கள் நடுவே உறங்கிக் கொண்டிருந்த ஒருவயதுகூட நிரம்பியிராத சிசுதான்..

''அப்பா, இந்தப் பாப்பாவை நாமே எடுத்துக்கொண்டு போகலாம்'' என்று மூன்றுமுறை விஜயனும் சொல்லிவிட்டான். என் மனைவியும் அக் குழந்தையை அநாதையாக விட்டுக் கிளம்பத் தயாராக இருப்பவளாகத் தெரியவில்லை. கடவுள் பேரில் பாரத்தைப் போட்டுவிட்டுக் குழந்தையைத் தூக்கிக்கொண்டேன்.

ரயிலடிக்கு வந்து சேர்ந்தோம். ஹௌரா ஸ்டேஷனில் ஒரே கூட்டம். இருந்தாலும் ஒரு மாதிரியாகச் சமாளித்துச் சென்னைக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டேன்.

ஒருமாதிரியாக, சென்னை வழியாக பங்களூர் வந்து சேர்ந்தோம். ஏனோ, மிகவும் கண்டிப்பாக அந்தச் சமயத்தில் தன் உறவினர்களிடமோ, தாய் தந்தையரிடமோ போகக் கூடாதென்று கூறி விட்டாள் என் மனைவி. பானே ஹன்னூர் திரும்பிய பிறகே அவள் எண்ணம் எனக்குப் புலப்பட்டது. கேட்பவர்களிடம் கொஞ்சமும் கூசாமல் தான் பெற்ற குழந்தையென அப்புதிய குழந்தையை அறிவித்தாள். முதலிலேயே என்னையும் தயார் செய்து வைத்திருந்தாள். விஜயனோ ஐந்து வயது நிரம்பாத பாலகன். அவனும் பானே ஹன்னூர் சேருவதற்குள் தன் தங்கைப் பாப்பாவோடு பூரண ஐக்கியமடைந்து விட்டிருந்தான். 'லக்ஷ்மி' என்று என் மனைவி அக்குழந்தைக்குப் பெயர் கொடுத்தாள். கண்ணும் கருத்துமாக இரு குழந்தைகளையும் நாங்கள் வளர்க்கலானோம்.

லக்ஷ்மி வந்த வேளையோ என்னவோ என் சிறிய சாப்பாட்டு வியாபாரம் பெருகத் தொடங்கியது. சண்டை காரணமாகக் காப்பித் தோட்டங்களுக்கும், காடுகளில் உள்ள மரங்களுக்கும் கிராக்கி அதிகம் ஏற்பட்டது. அதனால் அதிக ஜன நடமாட்டம் பஸ் - லாரி போக்குவரத்து இங்கு பெருகியது.

எங்கள் செலவு மிகவும் சொற்பம். வருமானத்தில் மிச்சமேற்பட்டது. நான்கு வருஷங்களில் நானே ஒரு சிறிய காப்பித் தோட்டம் வாங்கி விட்டேன். இங்கிருந்து மூன்று மைலில் கிறிஸ்துவப்பாதிரிகள் நடத்தி வரும் பள்ளிக்கூடமொன்றில் படித்து விஜயன் நன்றாகப் பாஸ் செய்து அவனைப் பாதிரிமார்களின் புத்திமதியின் பேரில் டேராடூனுக்கு அனுப்பியிருக்கிறேன். லக்ஷ்மியும் இப்போது தான் பள்ளிக்கூடப் படிப்பை முடித்தாள்.

என் மனைவியையும் என்னையும் தவிர லக்ஷ்மிக்கோ, விஜயனுக்கோ தங்கள் பிறப்பு விவரம் தெரியாது. அண்ணன் தங்கை போலவே அவர்கள் பழகி வந்திருக்கிறார்கள். இன்னும் சில மாதங்களில் விஜயனுக்குப் படிப்பு முடிந்து விடும். இவர்கள் இருவருக்கும் மணம் முடித்து விடுவதுதான் சரி என்று என் மனைவி என்னிடம் அடிக்கடி சொல்வதுண்டு. ஆனால் அவள் விருப்பத்தை நடத்தி வைக்கக் கொடுத்து வைக்காதவளாய்த் திடீரென்று இரண்டு வருஷங்களுக்கு முன்பு இறந்து விட்டாள். அதிலிருந்து லக்ஷ்மிதான் பொறுப்புடன் வீட்டுக் காரியங்களை யெல்லாம் செய்து வருகிறாள்.

என் மனைவி இறந்ததிலிருந்து உணவு படைப்பதற்கு முன்னால் பகவத் பஜனை வேறு நடத்துகிறாள் லக்ஷ்மி. பத்து மணிக்கே இங்கு வந்து சேரும் வாரிக்காரர்கள்கூட இந்த பகவத் பஜனைக்கும் இருந்து விட்டு, சாப்பாடு முடிந்த பிறகே போகிறார்கள். நாளுக்கு நாள் வியாபாரம் பெருகி வருகிறது. கூடிய சீக்கிரத்திலேயே இவர்கள் விவாகத்தை முடித்து விட்டால் பிறகு கவலை ஒன்றும் இல்லை. ஆனால் இவர்களிடம் எப்படி இப்பிரச்னையை எழுப்புவது என்பது என் சிறிய மூளைக்கு எட்டுவதாக இல்லை. 'அண்ணா, அண்ணா!' என்று இவள் விஜயனைத் தன் அண்ணாவாகவே கருதி வருகிறாள். அவனும் இவளைத் தன் சொந்த உடன் பிறந்த தங்கையாகவே நினைத்து வருகிறான். நீங்கள் புத்தி சொன்னால், நான் மிகவும் கடமைப்பட்டவனாக இருப்பேன்'' என்று கூறி முடித்தார்.

''யோசித்துக் கடிதம் எழுதுகிறேன், சுவாமி!'' என்று சொன்னவாறே மெதுவாக அவரிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து கிளம்பினேன். கார் திருப்பினேனே தவிர மனத்தை அங்கேயே விட்டு விட்டேன் என்று கூறுவது மிகையாகாது.

நீ இந்தப் பக்கம் போகிறதாகச் சொன்னபோது நான் உன்னுடன் கிளம்பியதற்கும் பாளேஹன்னூர் ஞாபகம்தான் காரணம். ராமு! உன் • பிரயாணத் திட்டத்தில் பாளேஹன்னூரோ, கொப்பாலோ இல்லவே இல்லையே. சிக்கமகளூரிலிருந்து சித்தலதுர்க்கம் போவதாக அல்லவோ திட்டமிட்டிருக்கிறாய்'' என்று கேட்டார் நாகேசுவரராவ், தமக்கே உரித்தான குறும்புப் புன்னகையுடன்! ''திட்டத்தைப் பற்றி இப்போது என்ன தர்க்கம், ஸார். காலையில் பார்த்துக் கொள்ளலாம்'' என்று சொல்லியவாறே சித்தலதுர்க்கம் முசாபரி பங்களாவின் முன்பு காரை நிறுத்தினேன்.

காலை இருவரும் எழுந்து ஸ்நான பானங்களை முடித்துக் கொண்டு பிரயாணத்தைத் துவங்குவதற்குத் தயாரானோம்.

''ஸார், கொப்பால் போகும் வழி என்ன?'' என்று கேட்டு விட்டேன். கொஞ்சமும் தாமதியாமல், ''டேய், ராமு! பாளேஹன்னூரில் சாப்பிட்டு விட்டுத்தான் போகவேண்டுமென்று எண்ணமோ?'' என்றார் குறும்புப் புன்னகையுடன்.

''இல்லை, ஸார்! இந்தப் பக்கத்தைச் சரிவரப் பார்த்து வரவேண்டுமென்பதே என்

எண்ணம். என் பிரயாணத் திட்டங்களை நானேதானே போட்டுக் கொள்கிறேன்" என்று மழுப்பினேன். "ராமு, உன்னை நீயே ஏமாற்றிக் கொள்வதிலோ, என்னை ஏமாற்றப் பார்ப்பதிலோ பிரயோசனமில்லை. கட்டாயமாகப் போவோம். எனக்கும் அந்த மனிதரைப் பார்த்து ஒரு யோசனை சொல்லவேண்டுமென்று தோன்றுகிறது" என்றார் நாகேசுவரராவ். இருவருமாகப் பானே ஹன்னூரை நோக்கிப் புறப்பட்டோம்.

அங்கு போய்ச் சேரும்போது பதினொரு மணியிருக்கும். காரை ரோட்டில் விட்டுவிட்டு நேராக அந்த மனிதரின் வீட்டுக்குப் போனோம். அப்பப்பா, பெரும் ஏமாற்றமே எங்களுக்குக் காத்திருந்தது. வீடு பூட்டிக் கிடந்தது. ஜனசந்தடி இல்லவே இல்லை. எனக்குப் பெரிய ஏமாற்றம்தான். அதை விடப் பெருத்த ஏமாற்றம் நாகேசுவரராவுக்குத்தான் என்பதில் சந்தேகமே யில்லை!

"ராவ் ஸார்! தபாலாபீசுக்குப் போய்க் கேட்டால் விவரம் தெரியலாம்" என்றேன். ஊரின் ஒரு கோடியில் இருந்த அந்த ஊர்ச் சிறிய தபாலாபீஸை அடைந்தோம். பெரியவர் ஒருவர் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். நாகேசுவரராவ் மெதுவாகப் பேச்சை எடுத்தார். தெரிந்து கொள்ள ஆவலாக இருந்த விஷயத்திற்கு வர அதிக நேரமாகவில்லை. பெரியவர் சொன்னதெல்லாம் இதுதான்: "ஸார், இந்த அதிசயத்தைக் கேட்டதுண்டோ? நம் ஊர் ஹோட்டல்காரர் பெண்ணுக்கு அடித்த அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். அவள் அண்ணா படித்து வந்த டேராடூன் கல்லூரியில் அவனுடன் வடக்கேயுள்ள ரீவா சமஸ்தானத்து ராஜகுமாரனும் படித்து வந்தானாம். அவர்கள் இருவரும் ஆப்த நண்பர்களாம். படிப்பு முடிந்து திடீரென்று ஒரு நாள் தன் நண்பனுடனும் அவன் தங்கையுடனும் ஒரு பெரிய காரில் இங்கு வந்தான். தன் தங்கைக்கு அந்த ரீவா ராஜகுமாரன் கணவனாகப் போவதாகவும் அவன் தங்கையைத் தான் மணம் புரிந்து கொள்ளப் போவதாகவும் கடைசியாகப் போன மாதம் அவர்கள் நடத்திய பகவத் பஜனையில் தெரிவித்தான். லக்ஷ்மி அன்று ஒரு மணி நேரத்துக்கு மேல் மனமுருகிப் பாடினாள். இப்போதும் எங்கள் காதில் அவள் பாட்டு ஒலித்தவாறே இருக்கிறது. அன்று மாலையிலேயே நம் ஹோட்டல்காரரையும் லக்ஷ்மியையும் தாங்கள் வந்த காரிலேயே அழைத்துப் போய் விட்டார்கள். போவதற்குமுன் எனக்குக் கடிதம் எழுதுவதாகச் சொல்லிப் போனார்கள் அவரும், விஜயனும். நேற்றுதான் விஜயனிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. அதைப் படிக்கிறேன், கேளுங்கள் :

"அன்புள்ள மாமாவுக்கு, நானும் அப்பாவும் லக்ஷ்மியும் போட்ட திட்டப்படியே அங்கிருந்து கிளம்பிய ஐந்தாவது நாள் இவ்வூர் வந்து சேர்ந்தோம். லக்ஷ்மிக்கு நான் ஏற்பாடு செய்திருந்த கணவனை என் நண்பனை மிகவும் பிடித்துப் போய் விட்டது. அந்த ஒரு விஷயத்தில்தான் கொஞ்சம் கவலையாக இருந்தேன். நாங்கள் இங்கு வந்து சேர்ந்த பத்தாவது நாள் வெகு விமரிசையாக எங்கள் திருமணம் நிறைவேறியது. இக்காலத்துக் கேற்றவாறு ஆடம்பரத்தை முடிந்த அளவு குறைவாகவே அனுமதித்தோம். எங்கள் மணமான நாலாவது நாள் அப்பா இங்கிருந்து எண்பது மைலில் உள்ள திரிவேணி சங்கமத்துக்குப் போய் அம்மாவின் அஸ்தியைக் கலக்க வேண்டுமென்ற விருப்பத்தைத் தெரிவித்தார். அதன்படியே நாங்கள் ஐவரும் அங்கு போனோம். நல்ல புரோகிதர்களை யெல்லாம் ஏற்பாடு செய்து என் நண்பன் செல்வாக்குக்கும் அந்தஸ்துக்கும் ஏற்றபடியே சாஸ்திரோக்தமாக பூஜைகள் நடத்தி அஸ்தியைச் சங்கமத்தில் கரைத்தோம். நாங்கள் எதிர்பாராத மிகவும் துக்ககரமான சம்பவம் அப்போதே நேரிட்டது. காலையிலிருந்தே அம்மாவை நினைந்து நினைந்து உருகிக் கொண்டிருந்த அப்பா மூன்றாவது முழுக்குக்குப் பிறகு எழவேயில்லை... நடுநடுங்கிப் போய் அவரைத் தண்ணீரிலிருந்து எடுத்து வந்து முடிந்த சிகிச்சையெல்லாம் செய்து பார்த்தோம். மூன்றாவது முழுக்கின் போதே உயிர் போயிருக்க வேண்டுமென்று டாக்டர் அபிப்பிராயம் தெரிவித்தார். லக்ஷ்மியும் நானும் அநாதைகளாகி விட்டோம். எங்களுக்கு மணமானதிலிருந்தே வேதாந்தி போன்ற ஒருவிதத் தனி ஒளி அவர் முகத்தில் குடிகொண்டு விட்டதென்று சொல்லுவேன்.

நானும்-லக்ஷ்மியும் நன்றாக யோசித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டோம். எங்கள் சொத்துக்களைப் பொதுச் சொத்தாக்கிப் பொது உபயோகத்துக்குக் கொடுக்கத் தீர்மானித்து விட்டோம். இத்துடன் என்னுடைய அதிகாரத்தை உங்களுக்கு மாற்றியிருக்கிறேன். காப்பித் தோட்டம், பூந்தோட்டம், வீடு முதலியவைகளை விற்று ஒரு நல்ல வித்தியாசாலையை அவ்வூரில் ஏற்பாடு செய்ய வேண்டுகிறோம். மேற்படிப்பை உத்தேசித்து நானும் எனது நண்பனும், லக்ஷ்மியுடனும் என் மனைவியுடனும் அமெரிக்கா தேசம் போகிறோம். இன்னும் நான்கு நாட்களில் கிளம்புவதாக ஏற்பாடு... படிப்பு முடிந்து ஊர் திரும்பிய பிறகு ஒரு முறை கட்டாயமாக அங்கு வந்து உங்களையெல்லாம் பார்த்துப் போகிறோம். உங்களெல்லோருடைய அன்பையும் என்றும் மறவோம்......லக்ஷ்மி உங்களை யெல்லாம் நினைக்காத நாளே இல்லை...

விஜயன்."

"ஸார், அந்த மனிதர் மிக எளிய ஏழை உருவத்தில் இங்கு வந்தது இன்றும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது......அவர் உண்மை உழைப்பே அவர் குழந்தைகளுடைய அதிர்ஷ்டத்திற்கெல்லாம் காரணம்......அவர் பத்தினியும் பார்வைக்கு மிகச் சுமாராகவே யிருப்பாள். அவரைத்தான் நீங்களே பார்த்திருக்கிறீர்கள். அந்தத் தம்பதிகளுக்கு ராஜகுமாரனாகவும், ராஜகுமாரியாகவும் தோற்றமும் உருவும் படைத்த குழந்தைகள் பிறந்தது மிகவும் ஆச்சரியமேயல்லவா......? எல்லாம் அந்தத் தெய்வ சித்தந்தான்" என்று கூறி முடித்தார்.

பெருமூச்சுடன் நானும், ராவும் கொட்டாலை நோக்கிப் புறப்பட்டோம்.

## நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

### 56. விட்டுப்போன விஷயம்

நேயர்களின் கடிதங்களைப் பரிசீலனை செய்தபோது - முடி விஷயமாகக் கேட்டிருந்த கேள்விகளில் ஒரு சிலவற்றுக்குப் பதில் சொல்லாமல் விட்டுப்போனது தெரிய வந்தது.

''என் கேள்விக்கு மட்டும் ஏன் பதில் எழுதவில்லை? பிடி இந்த சாபத்தை'' என்று நேயர்கள் சீற்றமுறுவதற்கு முன் அந்த ஒரு சில கேள்விகளுக்கும் பதில் எழுதி விடுவதுதானே விரும்பத் தக்கது?

குறிப்பிட்ட ஓரிடத்தில் அல்லது ஒரு சில இடங்களில் மட்டும் முடிகொழிந்து விடும். அல்லது தாடியிலோ மீசையிலோ ஒரு சிறிய பாகத்தில் மட்டும் சொட்டை ஏற்படும். பிறகு இங்கும் அங்குமாக இவ்வித இடைவெளிகள் தோன்றும். இவ்விடைவெளிகளின் எல்லைப்புறம் [வரம்பு] விஸ்தரித்துக் கொண்டே போகும். சில சமயம் இவ்விடங்களில் ஒருவித அரிப்பும் ஏற்படும். சொறிந்தால் போதும்—இந்த எல்லைப்புற ஆக்கிரமிப்பும் அதிகரிக்கும். காலக்கிரமத்தில் ஒவ்வொன்றாக இந்த இடைவெளிகளெல்லாம் ஒன்றாக ஐக்கியப்பட்டு ஒரே பொட்டலாகப் போகும்.

வேறு சிலருக்கு இயற்கையாகவே தாடி மீசைகள் சிக்கன முறையில் வளரும். மற்றும் சிலருக்குத் தினம் இரண்டு முறை மழுப்பினாலும் போதாதென்ற வகையில் தாடி மீசைகள் வளரும். இருவருமே இதைப்பற்றிக் குறை கூறுவார்கள்.

குப்பன் முதல் இனத்தைச் சேர்ந்தவன். இந்தக் கோடியில் ஒரு மயிர், அந்தக் கோடியில் ஒரு மயிர். இடையில் மூக்கின் கீழே ஒன்று. இப்படி மூன்றே மயிர்தான் குப்பனின் மீசை. இவ்விஷயமாகக் குப்பனுக்கு மிகுந்த மனக்குறை.

எதிர் வீட்டுக்காரச் சுப்பன் இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவன். கறுகறுவென்று அடர்த்தியாகக் கரும்பனையின் சிலாம்புபோல் வளர்ந்த பயங்கரமான மீசை. குப்பனைக் காணும்போதெல்லாம் சுப்பன் தன் மீசையை முறுக்கி, ''முறுக்கித் திருத்தாத மீசையும், சுருக்கிச் சொல்லாத கதையும் ரஸிக்க முடியாத விஷயம்'' என்று சொல்வான்.

இதைக் கேட்டும் பார்த்தும் குப்பனின் மனம் மிகவும் வெதும்பும். கடைசியாகக் குப்பன் ஒரு முடிவுக்கு வந்தான். தினந்தோறும் உள்ளூர்ப் பிடாரி கோயிலுக்குப் போய், எதிர் வீட்டுக்காரன் மீசைபோலத் தனக்கும் மீசை வளர அருள் புரியும்படி அம்மனை வேண்டினான்.

இந்த ரகஸியம் எப்படியோ சுப்பனுக்கும் எட்டிவிட்டது. அவன் மேலுக்கு ஒருவிதமாக நடித்தானானாலும், சுப்பனுக்கு உள்ளூறத் தன் மீசை குப்பன் மீசையைப்போல் உபத்திரவமில்லாமல் இருக்கலாகாதா என்ற குறை இருந்தது. ஆகவே அம்மனிடம் குப்பன் வேண்டிக் கொள்வது மடத்தனமென்று சுப்பனுக்குத் தோன்றியது. இந்தப் பைத்தியக்காரத்தனத்திலிருந்து குப்பனை மீட்க எண்ணி, அவன் அம்மனைத் தொழ வந்தபோது, அம்மனின் சிலைக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு, ''அடே குப்பா!'' என்று கூவி,

'' முன்னோர் செய்த தவத்தாலே
மூன்று மீசை கொடுத்தோமே!
இன்னும் மீசை கேட்பாயாகில்
இருக்கும் மீசை போய்விடுமே!''

என்றான்.

இப்படி முடி வளரவில்லையே என்று சிலரும்—அதிகம் வளருகிறதே என்று வேறு சிலரும் விசாரப்படுகின்றனர். முக்கியமாகச் சில சகோதரிகள் வேண்டாத வகையில் முகத்தில் வளரும் மயிரைப் பற்றிக் கேட்டு மனம் கரையும்படி எழுதுகின்றனர்.

குறிப்பிட்ட இடங்களில் மட்டும் ஏற்படும் மயிர் கொழிதலில் செய்யக் கூடிய சில அனுபவசித்தமான எளிய உபாயங்கள்......

யானையின் தந்தத்தை அரப்பொடியாக்கி மண்கலத்தில் இட்டுக் கரிக் கும் மட்டியில் சூடாக்கினால் தந்தம் மசியாக மாறிக் கிடைக்கும். இதைச் சொட்டை விழுந்த பிரதேசங்களில் தடவி அமர்த்தித் தேய்க்கவும். ஆரம்ப நிலையிலுள்ள வழுக்கை மாறும்.

சீந்தில் கொடியை இடித்துப் பிழிந்த ரஸத்துடன் சம பாகம் நல்லெண்ணெயும் கூட்டிக் கொள்ளவும். ஓரிலைத் தாமரையின் வேரைப் பசுவின் பால் விட்டு வெண்ணெய் போல் அரைத்துக் கொள்ளவும். ஆலின் விழுதின் மெல்லிய நுனிகளை உலர்த்தி இடித்துச் சலித்த தூள் மேற்சொன்ன அரைப்பு மருந்தளவு எடுத்துக் கொள்ளவும். ரஸம், எண்ணெய் விழுது, தூள் இவை யாவற்றையும் ஒன்றாய்க் கூட்டிக் குழைக்கவும். இக்குழைப்பு மருந்தை ஏறத்தாழச் சந்தனக் குழம்பு கணக்கில் வரும்படி செய்து கொண்டு தலைக்குத் தேய்த்து ஊறிக் குளிப்பதால் வழுக்கை போகும்.

கறுப்பு ஊமத்தையின் இலையைப் பிழிந்த சாறு நாலு பாகம், ஒருபாகம் நல்லெண்ணெய், ஒருபாகம் தேங்காய்ப் பால் : [தலைக்குத் தேங்காய் எண்ணெய் தேய்த்துப் பழகியவரானால் நல்லெண்ணெய் அரை பாகமும் தேங்காயெண்ணெய் கால் பாகமும் கூட்டிக் கொள்ளவும்] இத்துடன் எண்ணெய்க்குச் சம அளவு எருமைப் பாலைக் கூட்டிக் கொள்ளவும். பிறகு அதிமதுரம், கறுப்பு ஊமத்தையின் விதை இவ்விரண்டையும் [மொத்தம் எண்ணெய் ஒரு வீசையானால் வகைக்கு இரண்டரை தோலா வீதம்] எருமைப்பால் விட்டு அரைத்துக் கல்கமாகக் கூட்டிக்கொள்ளவும். யாவற்றையும் ஒன்றாக அடுப்பில் ஏற்றிக் காய்ச்சி, கல்கம் மணல் பாகத்தில் வரும்போது இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும். தினசரி முடி சீவிக் கொள்ள மட்டும் உபயோகித்து வர, பொட்டு பொடுகுகள் தீரும் ; தலை வழுக்கை மாறும் ; முடி வளரும்.

கருந்தும்பைச் சாறு, கரிசிலாங் கண்ணிச்சாறு இவற்றுடன் நல்லெண்ணெய் கூட்டி எட்டிப்பழத்தைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தையும் மேற்சொன்ன விதம் உபயோகிக்க, முடி வளரும் ; நரையும் மாறும்.

இனி, வேண்டாத வகையில் முகத்தில் வளரும் மயிரைப் போக்க என்ன செய்யலா மென்பதையும் யோசிப்போம்.

சரீரத்தில் சில ஸநாள — நிர்நாளக் கிரந்திகள் இருக்கின்றன. இவற்றுள் சுரக்கும் திரவங்கள் ஆண்களுக்குப் பிரத்தியேகமான சில அங்க லக்ஷணங்களையும், பெண்களுக்குப் பிரத்தியேகமான சில அங்க லக்ஷணங்களையும் தோற்றுவிக்கின்றன. குறிப்பிட்ட வயசும் வளர்ச்சியும் பெறும்போதுதான் இக்கிரந்திகளும் இவ்வகை திரவங்களைச் சுரக்குமளவுக்கு வளர்ச்சி பெறுகின்றன.

மனத்தில் எழும் உற்சாகம், உத்வேகம் [எக்ஸைட்மெண்ட்]அதிர்ச்சி, பயம், சோகம் முதலியவைகளாலும், விருப்பு, வெறுப்பு, ஆசை, ஆவல் போன்ற உணர்ச்சிகளின் காரணமாகவும் இந்தக் கிரந்திகளின் சுரப்புத் திரவம் பாதிக்கப் படுகிறது.சில சமயம் சுரக்கும் திரவம் அதிகமாகலாம், அல்லது குறைவுபடலாம். சில சமயம் இவ்விதத் திரவங்கள் சரீரத்தில் பரிணமமாகி லயிக்கும் முறையும் தரமும் மாறிவிடலாம். அதனால் சரீரத்தில் பல்வேறு குறிகள் தாற்காலிகமாக ஏற்படலாம். அல்லது நிரந்தரமாகவும் சில மாற்றங்கள் ஏற்படலாம்.

கையுங்களவுமாக ஒருவன் பிடிபடுகிறான். உடனே அவனுக்கு மனத்தில் ஒரு பயமோ — லஜ்ஜையோ ஏற்படுகிறது. இதனால் மேற்சொன்ன கிரந்திகளின் சுரப்புத் திரவம் திடீரென்று அதிகரித்து அத்திரவம் ரத்தத்துடன் கலந்து தேகத்தில் வியாபிக்கிறது. அதனால் அவனுக்குக் குபீரென்று குளித்ததுபோல் வியர்வை உண்டாகிறது. உடம்பில் ஒரு நடுக்கம் ஏற்படுகிறது. வாயும் நாக்கும் உலர்ந்து போகின்றன. நாக்கு குளறுகிறது. பேச வருவதில்லை. பேசினால் பேச்சில் நடுக்கம். எழுந்து நடக்க முடியாது. நடந்தால் கால்கள் பின்னவிடும்: தடுமாறும். ஏன் ? முகத்தின் களையே மாறி விடும். இவ்விதமாகத் தாற்காலிக மாற்றங்கள் ஏற்படுகின்றன. அடிக்கடி இவ்வித அனுபவங்கள் ஏற்படுமானால், அடிக்கடி நரம்புகளுக்கு அதிர்ச்சியும் — அதைத் தொடர்ந்து ஒரு தளர்ச்சியும் — இவற்றின் காரணமாகச் சில நிரந்தரமான குறைபாடுகளின் குறிகளும் தோற்றம் பெறலாம். இதிலிருந்தெல்லாம் ஒரு விஷயம் தெளிவாகிறது. மனத்தின் நிலை—மனப் போக்கின் தன்மை இவைகளால் 'எண்டோக்ரேன்ஸ்' என்னும் நிர்நாளக் கிரந்திகள் சுரக்கும் திரவம் பாதிக்கப்படுகிறது.

பெண்கள் எக்காரணத்தினாலேனும், தமக்கு இயல்பான மனோபாவத்தை விட்டு, ஆண்களுக்கு இயல்பான மனோபாவம், மனப்போக்கு ஆகார விஹாரங்கள்—முதலியவற்றை ஏற்க நேரிட்டால், பெண்களுக்கு இயற்கையான முறையில் இந்த நிர்நாளக் கிரந்திகள் சுரக்கும் திரவம் கிடைக்காது. இதனால் பெண்களுக்கு மட்டும் உரியதான அங்கலக்ஷணங்கள் முதலியவற்றைத் தோற்றம் பெறச் செய்யவல்ல சில பிரத்தியேக திரவங்களின் சுரப்பு குறைந்து போகலாம், அல்லது அவற்றின் தரம் குறையலாம். அல்லது அவற்றின் இயல்பு மாறிப் போகலாம். இதனாலேயே, இவற்றுக்கு எதிர்மறையான குணமுள்ள திரவங்களின் சக்தி சிறிது அதிகரித்த நிலையும் ஏற்படலாம். இவ்வித காரணங்களால் — பெண்களுக்கு இயற்கை யல்லாத சில குறிகள் தோற்றம் பெறலாம். பெண்களுக்கு இயல்பான சில அங்கலக்ஷணங்கள் தோற்றம் பெறாமலும் இருந்து விடலாம். அவ்விதமே ஆண்களிலும் ஏற்படலாம். இவ்வித நிலைமைக்கு என்ன செய்யலாம்? இக் கிரந்திகள் இயங்கும் வகையில் இவ்விதக் கோளாறு ஏற்படுமானால் சிகிச்சை செய்வது மிகவும் சிரமம். மேலும் அவ்வித சிகிச்சைக் கிரமத்தைப் பத்திரிகையில் பிரகரிப்பதும் அலௌகிகம். தனிப்பட எழுதிய நேயர்களுக்குத் தனித்தனி பதில் எழுதியதுதான் தற்போது செய்யச் சாத்தியமானது.

# ஏன் நம்பிக்கையை விடுகிறீர்கள்!

அது இயற்கை, நரை மயிர் உங்களுடைய தோற்றத்தைக்கெடுக்கிறது. ஆனால் நீங்கள் நம்பிக்கையை விட வேண்டாம். ஆயிரக்கணக்கான ஜனங்களைப் போல் நீங்களும் லோமா உபயோகித்து அமைதியுடனும் தகுதிவாய்ந்த தோற்றத்துடனும் இருங்கள்.

## லோமா

கருமையையும்
வனப்பையும் தருபவை



ஸோல் ஏஜெண்டுகள்:
எம். எம். கம்பாட்வாலா, அஹமதாபாத் 1
ஏஜெண்டுகள்:
வி. நரோத்தம் அண்டு கோ பம்பாய் 2 Tel : 30575

...-TAM.

சென்னை ஏஜண்டுகள்: ஜே பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1 ● இலங்கை ஏஜண்டுகள்: மிர்சுக் கதீர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

## அத்தியாயம் 9

## நழுவிய இதயம்

# பொங்கிவரும் பெருநிலவு

தான் அறைக் கதவைத் திறந்த நடராஜன் டயானாவைப் பார்த்ததும், ''தயவுசெய்து உள்ளே வாருங்கள்!'' என்று வரவேற்றான்.

டயானாவின் முகத்தில் வழக்கமாகக் குடிகொண்டிருக்கும் உற்சாகத்தைக் காணவில்லை. அவள் சோர்ந்த முகத்துடன் அறையினுள் நுழைந்தாள்.

''ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்? உடம்பு ஏதாவது சரியில்லையா என்ன?'' என்றான் நடராஜன்.

''டாக்டர் என்பதைக் காண்பித்து விட்டீர்களே?'' என்றாள் டயானா.

''பின் எதற்காகத்தான் டாக்டருக்குப் படித்துப் பட்டம் பெற்றிருக்கிறேன்?'' என்று கேட்டான் நடராஜன். பின்னர், ''உங்கள் உடம்புக்கு என்ன? அதைச் சொல்லுங்கள்'' என்று கேட்டான்.

''நான் சொன்னால் நீங்கள் சிரிப்பீர்கள்'' என்றாள் டயானா.

''நிச்சயமாகச் சிரிக்க மாட்டேன். தயவு செய்து சொல்லுங்கள்'' என்று கேட்டான் நடராஜன்.

''என்னுடைய இருதயம் மார்பிலிருந்து நழுவி வயிற்றுக்குள்ளேயே விழுந்து விட்டது!'' என்றாள் டயானா.

நடராஜனுக்கு நிஜமாகவே சிரிப்பு வந்தது. சிரிக்கவில்லை என்று டயானாவிடம் வாக்குறுதி கொடுத்திருந்ததால் கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்

டான். ''இது என்ன வேடிக்கை? இருதயம் மார்பிலிருந்து எப்படி நழுவ முடியும்? வயிற்றுக்குள் எப்படி வர முடியும்?'' என்று கேட்டான்.

''அதுதான் எனக்கும் புரியவில்லை'' என்றான் டயானு.

இப்படி டயானு சொல்லிக் கொண்டு வருகையிலேயே நடராஜனுக்குத் தான் படித்த ஒரு கட்டுரை நினைவுக்கு வந்தது. ஸ்டீவன் எம். ஸ்பென்னர் என்பவர் எழுதிய அந்தக் கட்டுரையைத் தன் புத்தக அலமாரியிலிருந்து தேடி எடுத்து வந்தான். மேலெழுந்தவாரியாக அதனை ஒருதரம் படித்துப் பார்த்ததுமே தான் சந்தேகித்தது சரிதான் என்று அவனுக்குத் தெளிவாகத் தெரிந்து போயிற்று.

அதனை மேலும் சந்தேகமற நிச்சயப் படுத்திக் கொள்ள விரும்பி டயானுவையும் அழைத்துக் கொண்டு டாக்டர் ஜாக்ஸனிடம் சென்றான். போகும் வழியில் அப்பாவுக்கும் விமலாவுக்கும் எழுதிய கடிதங்களை மறந்து விடாமல் தபாலில் சேர்த்து விட்டுப் போனான்.

டாக்டர் ஜாக்ஸன் நடராஜன் பயிற்சி பெற்று வந்த ஆஸ்பத்திரியில் சஸ்திர சிகிச்சை நிபுணர். அவரிடம் தன் சந்தேகத்தைத் தெரியப்படுத்தியதும் உடனே டயானுவை 'எக்ஸ்ரே' படம் எடுக்க ஏற்பாடு செய்தார் ஜாக்ஸன்.

எக்ஸ்ரே படம் அவர்களுடைய சந்தேகத்தை அகற்றி விட்டது. நடராஜன் முதலில் எண்ணியது சரிதான் என்பதை ஊர்ஜிதப்படுத்தியது.

எக்ஸ்ரே படத்தை வெளிச்சத்தில் பார்த்துக் கொண்டே, ''இதயத்திலிருந்து கீழே இறங்கும் பெரிய ரத்தக் குழாய் (Abdominal aorta) வயிற்றில் ஓர் இடத்தில் மெலிந்து போய்ச் சிறிய பலூனைப்போல் உப்பிக் கொண்டிருக்கிறது'' என்றான் நடராஜன்.

''உண்மைதான். அப்படிச் சிறிதளவு உப்பிக் கொண்டிருக்கும் இடம் ஒவ்வொரு முறையும் இருதயம் அடித்துக் கொள்ளும் போதும் துடிக்கிறது. அந்தத் துடிப்பையும் இருதயத் துடிப்பு என்றே டயானு நினைத்துக் கொண்டதில் ஆச்சரியமில்லை! எந்த நிமிஷத்திலும் அந்த இடத்தில் ரத்தக் குழாய் வெடித்து விடலாம். அதனால் ரத்தத்தை வெல்லாம் இழந்து அடுத்தகணமே டயானு இறந்து போகும்படிகூட நேரிடலாம்'' என்றார் ஜாக்ஸன்.

''இப்போது என்ன செய்யப் போகிறோம்?'' என்று அளவுகடந்த கவலையுடன் கேட்டான் நடராஜன்.

''ரத்தக் குழாயில் மெலிந்து போய் வீங்கியிருக்கும் பகுதியை வெட்டி எடுத்து விட வேண்டியதுதான்.''

''அதற்குப் பதிலாக இறந்துபோனவரின் ரத்தக் குழாய் ஒன்றினை அந்த இடத்தில் வைத்துத் தைத்துவிடலாம்.''

''முன்பெல்லாம் நீ சொல்வதுபோல்தான் செய்து வந்தார்கள். ஆனால் இப்போது இறந்து போனவர்களின் ரத்தக் குழாய்கள் கிடைப்பது அரிதாக இருக்கிறது.

கி. ராஜேந்திரன்

இறந்து போனவர்களின் உறவினர்களிடம் அதனை எடுத்துப் பத்திரப்படுத்த அனுமதி கிடைப்பது சிரமமாக இருக்கிறது. அந்த சிகிச்சை அவ்வளவு திருப்திகரமாகவும் அமையவில்லை. ஆகவே இப்போதெல்லாம் செயற்கை ரத்தக் குழாய்களை உபயோகிக்கிறோம்.''

''செயற்கை ரத்தக் குழாய்களா? அப்படியென்றால்.....?''

''நைலான் என்று கேள்விப் பட்டிருப்பாயே? அதனால் இந்தச் செயற்கை ரத்தக் குழாய்களைத் தயாரிக்கிறார்கள். ஆனால் இங்கு பெண்கள் ஆடையாக அணியும் நைலானுக்கும் இதற்கும் வித்தியாசம் இருக்கிறது. அந்த நைலானை இதற்கெனப் பிரத்தியேகமாகப் பண்படுத்திப் பின்னர் ரத்தக் குழாய்களைத் தயாரிக்கிறார்கள்'' என்றார் ஜாக்ஸன். நடராஜன் புரிந்து கொண்டதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினான்.

''நீ சீக்கிரமாகப் போய் ஆப்பரேஷன் தியேட்டரில் டயானாவுக்குச் சஸ்திர சிகிச்சை செய்வதற்கு வேண்டிய ஏற்



பாடுகளையெல்லாம் செய். இதோ நானும் வந்து விடுகிறேன்'' என்று சொன்னார் ஜாக்ஸன்.

நடராஜன் விரைந்தான்.

• • •

மேலே கண்ணைப் பறிக்கும் பிரகாசத்துடன் பெரிய மின்சார விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது.

நிழலே உண்டாகாதபடி அமைக்கப்பட்ட அந்த விளக்கு விஞ்ஞானத்தின் அற்புத சிருஷ்டி. சஸ்திர சிகிச்சைகளில் உபயோகிப்பதற்காகவே தயாரிக்கப்பட்டது. சுற்றிலும் வழுவழுப்பான சுவர்கள். கீழே பளபளப்பான, அப்பழுக்கில்லாத தரை. விளக்குக்கு அடியில் ஒரு கட்டில். இஷ்டப்பட்டபடி மேலும் கீழும் பக்கவாட்டிலும் எந்தக் கோணத்திலும் எப்படி வேண்டுமானாலும் திருப்பிக் கொள்ளக்கூடிய வகையில் சௌகரியமாக அமைந்திருக்கிறது.

கட்டிலில் டயானா படுத்துக் கிடக்கிறாள். அவள் உடலில் வயிற்றுப் பாகத்தைத் தவிர மற்றப் பாகங்களெல்லாம் வெண்மையான துணியினால் மூடப்பட்டிருக்கின்றன. அவள் பயந்து போகக் கூடாது, மன அமைதியுடன் இருக்க வேண்டும் என்பதற்காகத் தூக்க மருந்தை ஊசி மூலம் அவளுக்குச் செலுத்தியிருக்கிறார்கள். அவள் அரைத் தூக்கத்தில் படுத்திருக்கிறாள்.

அவளது தலைக்கருகில் ஐந்தாறு புட்டிகள் இருக்கின்றன. சிலவற்றில் ரத்தமும் வேறு சிலவற்றில் உப்பு ஜலமும் இருக்கின்றன. அதற்கு அருகே மயக்கம் அளிக்கக் கூடிய மருந்துப் பொருள்களும் பிராணவாயுவும் இருக்கின்றன. இன்னொரு பக்கத்தில் ஒரு சிறிய மேஜையின் மீது ஒரு தட்டில் சஸ்திர சிகிச்சைக்கான ஆயுதங்கள் பளபளக்கின்றன.

கட்டிலைச் சுற்றி நான்கு டாக்டர்கள் தூய வெண்மையான ஆடை அணிந்து நிற்கிறார்கள். அவர்களுடைய தலையும் முகமும் கூட மூடப்பட்டிருக்கின்றன. கண்கள் மட்டுமே தெரிகின்றன. கைகளில் ரப்பரினாலான உறைகளை அணிந்திருக்கிறார்கள். இவர்களைத் தவிர அறையில் நான்கு நர்ஸ்கள் இருக்கிறார்கள். அந்த நர்ஸ்களும் டாக்டர்களைப் போலவே முகத்தை வெண்மையான துணியினால் மூடியிருக்கிறார்கள். கைகளில் சுத்தமான ரப்பர் உறைகளும் அணிந்திருக்கிறார்கள்.

டயானாவின் தலைக்கு அருகில் இருக்கும் டாக்டர் ஒரு முகமூடியை அவள் முகத்தின் மீது கண்களுக்குக் கீழே நன்கு பொருந்துமாறு வைக்கிறார். அவளுடைய மூச்சுக் காற்றோடு மயக்க மருந்து வாயு ரூபத்தில் உள்ளே செல்கிறது. டயானாவை ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணச் சொல்கிறார் டாக்டர். டயானா எண்ணுகிறாள். பத்து வரை எண்ணிய பின் அவள் வாய் பேசவில்லை. அவள் மயக்கம் அடைந்து விட்டாள்.

மயக்கம் கொடுத்தவர், டாக்டர் ஜாக்ஸனைப் பார்க்கிறார். ஆப்பரேஷன் ஆரம்பிக்கலாம் என்பதற்கு அடையாளமாகத் தம் தலையை அசைக்கிறார். ஜாக்ஸன் நடராஜனைப் பார்த்து ஒரு முறை தலையை ஆட்டுகிறார். அருகில் இருந்த நர்ஸ் நடராஜனிடம் ஒரு ஆயுதத்தை எடுத்துக் கொடுக்கிறாள். டயானாவின் வயிற்றில் நீளமான ஒரு கீறலைப் போடுகிறான் நடராஜன். அப்போது சரி

யாக இரவு 9 மணி. கீறிய ஆயுதத்தை அருகே இருந்த பக்கெட்டில் போடுகிறான். 'டங்' என்ற சத்தத்துடன் திசப்தத்தைக் கிழித்துக் கொண்டு விழுகிறது அந்த ஆயுதம். அடுத்து தனக்குத் தேவையான ஆயுதத்தைக் கேட்கிறான் நடராஜன். உடனே நர்ஸின் கைகளிலிருந்து அது அவன் கரங்களுக்கு வருகிறது. அதன் உபயோகம் முடிந்ததும் முன்போலவே அதைப் பக்கெட்டில் எறிகிறான். மேலே மேலே அவன் கேட்கக் கேட்க ஆயுதங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டே இருக்கின்றன. அவற்றின் உபயோகங்கள் முடிந்ததும் பக்கெட்டில் எறியப்படுகின்றன.

நடராஜன் வயிற்றில் இருந்த சிறுகுடல் வளையங்களை மிக மிக ஜாக்கிரதையாக நிதானமாக எடுத்து நகர்த்தி, ஈரமான துணிகளுக்கு மேல் வைக்கிறான். அதற்குப் பின்னால் இருக்கும் ஜவ்வு போன்ற உறுப்பை வெட்டுகிறான்.

இப்போது இதயத்திலிருந்து கீழே இறங்கி வரும் ரத்தக் குழாய் முதுகெலும்புக்கு அருகே மிகத் தெளிவாகத் தெரிகிறது. ரத்தக் குழாயின் ஒரு பாகம், நியாயமாக இருக்க வேண்டிய அளவை விட இரண்டு மடங்கு பெரிதாக வீங்கிக் கொண்டு இருக்கிறது. மார்பில் ஒவ்வொரு முறை இதயம் அடித்துக் கொள்ளும்போதும் இந்த இடமும் துடிக்கிறது!

நடராஜன் அந்த இடத்தைச் சிறிது நேரம் பார்க்கிறான். பின்னர் நிமிர்ந்து டாக்டர் ஜாக்ஸனை நோக்குகிறான். ஜாக்ஸன் தலையை மேலும் கீழும் ஆட்டுகிறார். அவர் கண்களில் சந்தோஷமும் பெருமிதமும் பிரதிபலிக்கின்றன. நடராஜன் மரியாதையாகச் சற்று விலகிக் கொள்கிறான். அடுத்த கணம் ஜாக்ஸன் சிகிச்சையைத் தொடருகிறார்.

**வீ**ங்கி இருக்கும் இடத்துக்குச் சற்று மேலே ரத்தக் குழாயின் அடியில் ஒரு நாடாவைச் செலுத்தி அதனை முதுகெலும்பின் அருகிலிருந்து நகர்த்துகிறார். ரத்த ஓட்டத்தைத் தடை செய்ய இங்கு ஒரு இடுக்கியைப் பொருத்துகிறார். இடுக்கி பொருத்தப்பட்டிருக்கும் இடத்துக்கு அருகாமையில் ரத்தம் கட்டிப் போகாமல் இருக்க ஒரு மருந்தை ஊசி மூலம் செலுத்துகிறார். வீங்கி இருக்கும் பாகத்துக்குக் கீழே முன்போலவே இன்னொரு இடுக்கியைப் பொருத்துகிறார்.

இரத்த அழுத்தம் எவ்வளவு இருக்கிறது என்று கேட்கிறார். சரியாகத்தான் இருக்கிறது என்று தெரிந்து கொண்டு, இரத்தக் குழாயில் பழுதடைந்து போன பகுதியை வெட்டி எடுக்கிறார். இப்போது மணி 9-45.

செயற்கை ரத்தக் குழாயை நர்ஸ் எடுத்து ஜாக்ஸனிடம் கொடுக்கிறாள். ரத்தக் குழாயை வெட்டி எடுத்த இடத்தில் அதனை வைத்துப் பார்த்துச் சரியான அளவுக்குக் கத்திரிக்கோலால் வெட்டிக் கொள்கிறார். பின்னர் சின்னஞ்சிறிய வளைந்த ஊசியாலும் பட்டு நூலினாலும் செயற்கை ரத்தக் குழாயை இயற்கையான ரத்தக் குழாயுடன் சேர்த்து வைத்துத் தைக்கிறார்.

மேல் பக்கம் தைத்து முடிந்ததும் அந்தப் பக்கத்தில் இருக்கும் இடுக்கியைச் சிறிது திறந்து விடுகிறார். ரத்தம்



பாய்ந்து செல்கிறது. இடுக்கியை முன்போலவே மறுபடியும் பொருத்தி விட்டு, கீழ்ப் பக்கத்திலும் இயற்கை ரத்தக் குழாயையும் செயற்கை ரத்தக் குழாயையும் சேர்த்து வைத்துத் தைக்கிறார். இடுக்கிகளை எடுத்துவிட்டு உஷ்ணமானதும் ஈரமானதுமான துணியை இணைந்த ரத்தக் குழாயின்மீது வைத்து மெதுவாக அழுத்துகிறார். சிகிச்சையின் முக்கியமான கட்டம் முடிந்து விட்டது. இப்போது மணி 10-30.

நடராஜன் சிறுகுடலை முன்பிருந்ததைப் போலவே நகர்த்தி வைக்கிறான். வயிற்றில் முதலில் போட்ட கீறலை இப்போது தைக்கிறான். 11 மணிக்கு ஜாக்ஸனும், நடராஜனும் ஆப்பரேஷன் தியேட்டரை விட்டு வெளியே வருகி

றார்கள். ஒருவர் கையை ஒருவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு குலுக்குகிறார்கள்.

* * *

தங்களுடன் கல்லூரியில் படிக்கும் ஒரு சக மாணவிக்கு உடம்பு நலமில்லை; அபாயகரமான நிலையில் இருக்கிறாள் என்னும் செய்தி மாணவ மாணவிகளிடையே விரைவாகப் பரவி விட்டது. ஆப்பரேஷன் நடக்கப் போகிறது என்றும் தெரிந்து போயிற்று. எல்லோரும் மிகுந்த கவலையுடன் இருந்தார்கள். அந்த அகால வேளையிலும் பல மாணவர்கள் ஆப்பரேஷனை முடித்து விட்டு வெளியே வந்த ஜாக்ஸனையும், நடராஜனையும் சூழ்ந்து கொண்டார்



கள். அவர்கள் கை குலுக்குவதையும், அவர்கள் முகத்தில் இருந்த மலர்ச்சியையும் பார்த்த பின்னர்தான் மாணவர்களுக்கு நிம்மதி ஏற்பட்டது. அவர்கள் எல்லோரும் ஜாக்ஸனின் கையைக் குலுக்கி நன்றி தெரிவித்தார்கள். நட

ராஜனை முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்துப் பாராட்டினார்கள்.

டயாளுவின் பெற்றோர்கள் விஷயத்தை அறிந்து கொண்டதும் ஓடோடியும் வந்து தனியே காத்திருந்தார்கள். அதை அறிந்து கொண்டதும் ஜாக்ஸன் அங்கு விரைந்தார். "உங்கள் பெண்ணுக்கு இனி ஆபத்து 'ஒன்றுமில்லை. நீங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம்" என்று கூறினார்.

"உங்களுக்கு எப்படி எங்களது நன்றியைத் தெரிவிப்பது என்றே புரியவில்லை. எனக்கு விவரம் தெரியாது. ஆனால் மிகப் பெரிய அபாயத்திலிருந்து அவளைக் காப்பாற்றினீர்கள் என்பதாக எல்லாரும் சொல்கிறார்கள்" என்றார் டயாளுவின் தகப்பனார்.

"உண்மைதான். இன்னும் கொஞ்சம் காலதாமதமாகி யிருந்தால் விபரீதமாகப் போய் விட்டிருக்கும். அவள் டாக்டர் நடராஜனிடமாவது தன் நிலையைச்சொன்னது நல்லதாகப் போயிற்று. அவனும் அதனை அலட்சியப்படுத்தாமல் சமயோசிதமாக! நடந்து கொண்டிருக்கிறான். உங்கள் நன்றியை அவனுக்கு முதலில் தெரியப்படுத்துங்கள்" என்றார் ஜாக்ஸன்.

டயாளுவின் தகப்பனாரும், தாயாரும் நடராஜனை அன்போடு ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். "என்னுடைய ஒரே மகள்..." என்று மேலே சொல்ல முடியாமல் அழுது விட்டாள் டயாளுவின் தாய்.

ஒரு தனி அறையில் கட்டிலில் படுத்திருந்தான் டயாளு. மயக்கம் [illegible] சிறிதாகத் தெளிந்து கொண்டிருந்தான். அவன் கண் இமை[illegible] படபட வென்று அ[illegible]க்கொண்டு திறந்தன. அவை முதன் முதலாகப் பார்த்தது நடராஜனைத்தான்.

"நழுவிய உன் இருதயத்தை மறுபடியும் சரியான நிலைக்குக் கொண்டு வந்து வைத்து விட்டோம்! கவலைப்படாதே" என்றான் நடராஜன் சிரித்துக்கொண்டே.

டயாளுவின் அதரங்களில் நன்றியுடன் கூடிய ஒரு புன்னகை அரும்பியது. அவன் மீண்டும் தன் கண்களை மூடிக்கொண்டு அமைதியான நித்திரையில் ஆழ்ந்தான்.

* * *

நடராஜன் உள்ளத்தில் அளவு கடந்த உற்சாகத்துடனும் உடலில் சோர்வுடனும் அறைக்குத் திரும்பினான். சிகிச்சை வெற்றிகரமாக முடிந்ததில் உள்ளத்தில் உற்சாகம், களைப்பு மிகுதியால் உடலில் சோர்வு.

அறையில் அவனுக்கு ஒரு தந்தி காத்துக் கொண்டிருந்தது. அதனைப் பிரித்துப் படித்தான் நடராஜன். அவனுடைய இதயம் மார்பிலிருந்து நழுவி வயிற்றில் விழுந்ததுபோல் இருந்தது! நடராஜன் பிரமித்துப்போய் நின்றான்!

## அத்தியாயம் 10

# காதலின் முடிவு

மிகப் பெரிய நகரத்திலே சின்னஞ் சிறிய குருவி ஒன்று வசித்து வந்தது. ஒரு மரத்தின்மீது கூடு கட்டி வாழ்ந்தது. கவலையற்று இன்பமாகக் காலத்தைக் கழித்தது. ஒரு நாள் அது இரை தேடப் போனபோது அதற்கு ஒரு காசு கிடைத்தது. பளபளவென்று மின்னிய 'அந்தப் புத்தம் புதிய செப்புக் காசு குருவியின் கவனத்தைக் கவர்ந்தது. அதைக் கொத்தி எடுத்துக் கொண்டு கூட்டுக்குப் போயிற்று. ஆனால் அதை உண்ண முடியாது. வயிற்றை நிரப்பிக் கொள்ள முடியாது என்று அறிந்து கொள்ள அந்தக் குருவிக்கு அதிக நேரம் ஆகவில்லை. "காசை என்ன செய்வது?" என்று யோசித்தது. பாட ஆரம்பித்தது:

"எங்கிட்டொரு காசிருக்கு
யாருக்கு வேணும்?
அது யாருக்கு வேணும்?
வேணுங்கிறபேர்கள் வந்து
வாங்கிக் கொள்ளுங்கோ!"

குருவியின் பாட்டைப் பலர் கேட்டார்கள். செப்புக் காசு யாருக்கும் தேவைப்படவில்லை. சிலர் காதில் வாங்கிக் கொள்ளாமலே போனார்கள். சிலர் நின்று கேட்டார்கள். கேட்டபின் "பூ! செப்புக் காசுதானா?" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்கள். வேறு சிலர் "அடடா! முழு ரூபாயாக இருக்கக் கூடாதா?" என்று எண்ணியபடியே

சென்றார்கள். ஆனால் ஒருவராவது குருவியிடமிருந்து அதனை வாங்கிக் கொள்ள முன்வரவில்லை.

குருவி விடாமுயற்சி உள்ள குருவி. விடாமல் பாடியது:

"செப்புக்காசு ஒண்ணிருக்கு
யாருக்கு வேணும்?
அது யாருக்கு வேணும்?
எடுத்துக்கொள்ள ஆளிருந்தால்
கொடுத்திடுவேன் நான்!"

ஊர்வலம் வந்து கொண்டிருந்த அந்த நாட்டின் அரசன் குருவி இப்படி விடாமல் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்டான். அவனுக்குக் குருவியிடம் அனுதாபம் ஏற்பட்டது. மந்திரியைக் கூப்பிட்டான். "மந்திரி! இந்தக் குருவி விடாமல் பாடிப் பாடியே செத்துவிடும் போலிருக்கிறது! அதனிட மிருந்து அந்தச் செப்புக் காசை நாம்தான் வாங்கிக் கொள்வோமே?" என்றான்.

மந்திரிக்கும் அரசன் சொல்வது சரியென்றே பட்டது. குருவியிடம் சென்றான். "குருவியே! அரசனுக்குச் செப்புக் காசைக் கொடுத்து விட்டு நிம்மதியாக இரு" என்றான் மந்திரி.

குருவி உடனே செப்புக் காசைக் கீழே போட்டது. அரசன் அதனை பெற்றுக் கொண்டு குதிரையை மேலே செலுத்தினான். அங்கிருந்து அவன் நகர ஆரம்பித்ததுமே குருவி மறுபடியும் பாட ஆரம்பித்து விட்டது:

"ஒரு காசுக்கு வழியில்லாமே
எங்கிட்டே வந்து வாங்கிட்டுப் போறான்!
செப்புக் காசுக்கு வழியில்லாமே
தேசத்து ராஜா வாங்கிட்டுப் போறான்!"

இதைக் கேட்ட அரசனுக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது. 'நாம் குருவி உயிரை விட்டு விடப் போகிறதே என்ற அனுதாபத்துடன் காசை வாங்கிக் கொண்டால் நம்மை அவமானப்படுத்து கிறதே' என்று எண்ணி மந்திரியிடம் காசைக் கொடுத்து, "'நமக்கு வேண்டாம்' என்று சொல்லி, குருவியிடமே விட்டு எறிந்து விடு" என்றான். அரசன் சொல்படியே செய்தான் மந்திரி. அவர்கள் மறுபடியும் நகர ஆரம்பித்தார்கள். உடனே குருவி பாடியது:

"எனக்கு பயந்துகிட்டு
காசைக் கொடுத்திட்டுப் போறானே!
ஒரு குருவிக்குப் பயந்துகிட்டு
ராஜா கொடுத்திட்டுப் போறானே!"

மகாத்மா காந்தி நமது நாட்டில் சுதந்திரப் போராட்டத்தை நடத்தி வந்த காலத்தில் பிரிட்டிஷார் கையாண்ட ராஜதந்திரம் இதுதான். அந்தக் குருவியைப் போலவே மிஞ்சினால் கெஞ்சுவார்கள்; கெஞ்சினால் மிஞ்சுவார்கள்.

செண்பகபுரம் கிராமத்திலே வில்லுப் பாட்டுக்கதை நடந்துகொண்டிருந்தது. சுதந்திரப் போராட்டத்தின் சரித்திரத்தை வில்லுப் பாட்டாக அமைத்துப் பாடிக் கொண்டிருந்தார் கர்ணம் சச்சிதானந்தம். அவரைக் கிராமத்தார் "கணக்கைய்யா" என்று மரியாதையாகக் கூப்பிடுவார்கள். கிராம மக்களிடையே நன்மதிப்பும் செல்வாக்கும் பெற்றவர். கிராமத்தாருக்கு என்ன குறைகள் இருந்தாலும் அவரிடம்தான் வந்து தெரியப்படுத்துவார்கள். என்ன சண்டை சச்சரவுகள் இருந்தாலும் தீர்ப்புக்கு அவரிடம்தான் வருவார்கள். அவர் சொற்படி கேட்டு நடப்பார்கள்.

சச்சிதானந்தம் பழம் பெரும் தேச பக்தர். சுதந்திரப் போராட்டத்தின் போது முன்னணியிலிருந்து மும்முறை சிறை சென்றவர். உப்பு சத்தியாக்கிரஹத்தின்போது போலீஸாரிடம் அடி வாங்கியவர். அவர் உடலில் இன்னும் தடிஅடித் தழும்புகள் ஐந்து இருப்பதைக் காணலாம். இப்போதும் தம்முடைய கையினாலேயே நூற்ற நூலினால் நெய்யப்பட்ட தூய சுதராடையைத்தான் அணிந்திருந்தார்.

ஆனால் அவர் மந்திரி பதவியை நாடவில்லை. எம். எல். ஏ.வாகவோ அல்லது எம். எல். சி. யாகவோ வரவில்லை. கேவலம், சுதந்திர பாரத சர்க்கார் இனாமாக மனமுவந்து அளித்த நிலத்தைக் கூட அவர் பெற்றுக் கொள்ளவில்லை. காரணம் அவர் உண்மைத் தியாகி. தியாகத்துக்குக் கூலி வாங்கிக் கொண்டால் அது தியாகமாகாது என்பதை அவர் நன்கு உணர்ந்தவர்.

கணக்குப்பிள்ளை உத்தியோகத்தைத் தவிர அவர் செய்து வந்தது வில்லுப் பாட்டு. அதில் அவருக்கு அலாதியான ஈடுபாடு. "டங் டங்" என்று உடுக்கை தட்டினான் ஒருவன். குடத்தை ஒரு சிறிய மட்டையால் தட்டி ஒலி எழுப்பினான் வேறு ஒருவன். சச்சிதானந்தம் சதங்கை கட்டிய வில்லை இரண்டு சிறிய கழிகளால் தட்டி டங்காரத்தை எழுப்பினார். அப்படி அவர் உற்சாகமாகத் தட்டிக் கொண்டே பாடியபோது அவருடைய தொடைகள் எழும்பி எழும்பி விழுந்தன. கிராம மக்கள் அனைவரும் அங்கு ஒன்றாகத் திரண்டிருந்தார்கள். உணர்ச்சி வசப்பட்டு அவருடைய கதையைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

# அதிசயமும் அற்புதமுமான சருமப் பாதுகாப்பு

ஸ்நானத்துக்கும், தேகாலங்காரத்துக்கும் முன்பு சருமத்தை சுத்தப்படுத்துவதற்கு, பலவிதமான பயனளிக்கும் மலபார் லிம்டா சோப்பு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பிரத்தியேகமான அபிமானத்தைப் பெற்றிருக்கிறது. லிம்டாவை உபயோகித்து ஸ்நானம் செய்த பின், உங்களுக்குப் பரம சுகமளிக்கும் உணர்ச்சியைப் பெறுவீர்கள். ஏனெனில், அதில் சேர்ந்துள்ள மூலிகைத் தைலங்களும் அதன நறுமணமும் அதற்கு மேன்மையை அளித்துள்ளன.

## மலபார் லிம்டா டாய்லெட் சோப்

**தி வெஜிடபிள் சோப் வொர்க்ஸ்,**

கோழிக்கோடு-1

*இந்தியன் சோப் & டாய்லெட்ரீஸ் அஸோஸியேஷனில் அங்கத்தினர்*



## விற்பனையாகிறது!

## குறைந்த விலையில் சிறந்த பதிப்பு!

★

## நேருஜீயின்

# உலக சரித்திரம்

## (GLIMPSES OF WORLD HISTORY)

★

தமிழாக்கம் :

**ஓ. வி. அளகேசன்**

★

பல பதிப்புகள் வந்து ஆயிரக் கணக்கில் விற்றுள்ள இதன் ஆங்கில நூலின் விலை ரூ. 13-2-0. உலக முழுவதிலும் விற்கக்கூடிய வாய்ப்புள்ள ஆங்கிலப் பதிப்பின் விலையை விடக் குறைவான விலையில் இதனை வெளியிடுவது என்பது கற்பனை கூடச் செய்ய முடியாத ஒன்று! எல்லோரும் வாங்கிப் படிக்க வேண்டும் என்ற எண்ணமும் எப்படியும் இதைக் குறைந்த விலையில் தமிழர்களுக்குத் தந்து விடுவது என்ற ஆர்வமும்தான் இதனை வெளியிடத் தூண்டியது.

★

**இரண்டு தொகுதிகள் 1800 பக்கங்கள்**

**ஒவ்வொன்றும் விலை ரூ. 5/-**

★

இரண்டு தொகுதிகளும்
தபால் செலவுடன் ரூ. 12/-

★

**புக்ஸ் இந்தியா (பிரைவேட்) லிட்.**
135, டவழக்காரத் தெரு, சென்னை-1

★

சென்னையில் விற்பனையாளர் :

**நேரு நியூஸ் மார்ட்**

இலங்கையில்: பி. எஸ். சுந்தரம், கொழும்பு

---

## புளோரோஸோன் கருமையான சரீரத்தை வெண்மையாக்குகிறது



புளோரோஸோனை உபயோகமான சருமத்தை இதேபோல் வெண்மையாக்கி, முகப் பருக்கள் முதலிய சருமக் கோளாறுகளை அறவே போக்கி, மேனிக்கு மலர்போன்ற மென்மையையும், நீடிக்க அழகையும் அளிக்கும். புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4.25. சக்தி மிகுந்த புளோரோஸோன் கிரீம் ஒரு ஜாடி விலை ரூ. 5.50.

வி. பி. சார்ஜ் தனி

கெமிஸ்டுகளிடமும் ஹைஜீனிக் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட், த. பெ. 1192 பம்பாய்-1 விலாசத்திலும் பெறலாம்

**Florozone**
MIRACLE BEAUTY BLEACH

*Distributors for Madras :*
R. L. GOWUER & Co., 59, Bunder St., Madras

---

**ஜூன் 1ம் முதல் வெளிவருகிறது!**

**பாலு சகோதரர்களின்**

# கலை

*சினிமாவும் கலைகளும் கலந்த மாத இதழ்*

**தனிப்பிரதி 12 அணா**
**வருட சந்தா ரூ - 9.**
**ஆறுமாத சந்தா ரூ 4½.**



**கலை**
௫௨, தாயார்சாயபு தெரு,
மவுண்ட்ரோடு, சென்னை-2.

குருவிக் கதையை அவர் கூறி முடித்த சமயத்தில் "நிறுத்துங்கள்" என்ற ஆவேசக் குரலைக் கேட்டு ஒரு கணம் திடுக்கிட்டார் சச்சிதானந்தம். குரல் வந்த திசையில் திரும்பினார்.

அதற்குள் வீரப்பன் அவருக்குச் சமீபத்தில் வந்து விட்டான். ஓடி வந்ததால் அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. அவன் அகன்ற மார்பு எழும்பி எழும்பி விழுந்தது. "அங்கே அக்கிரமம் நடந்து கொண்டிருக்கிறது! இங்கே நீங்கள் சாவதானமாக உட்கார்ந்து கதை கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள்!" என்று கூடியிருந்த கிராம மக்களைப் பார்த்து இரைந்தான் வீரப்பன்.

"வீரப்பா!" என்று அதட்டினார் சச்சிதானந்தம். "இது என்ன கூக்குரல்? மரியாதையை இனிமேல்தான் உனக்குக் கற்றுத்தர வேண்டுமா?" என்றார்.

வீரப்பன் பெட்டிப் பாம்பாக அடங்கி விட்டான். அவருக்கு அருகே கைகளைக் கட்டியவாறு வந்து நின்று கொண்டு, "கணக்கையா! மன்னிக்கணும். நீங்கள் கதை நடத்திக் கொண்டிருந்தபோது குறுக்கே பேசியது தப்புத்தான்! ஆனால் அக்கிரமம் நடந்து போச்சுங்க. அதைச் சொல்லாமல் நான் எப்படி இருப்பேன்?" என்று கெஞ்சினான்.

"அவ்வளவு அவசரப்படும்படியாக என்ன அக்கிரமம் நடந்து விட்டது?"

"ஐயா! அதைச் சொல்லவும் நாக்கு கூசுது! கமலத்தின் பெண்ணும் சினிமா எடுக்க வந்தவர்களில் ஒருவனும்......"

"வீரப்பா, நிறுத்து!" என்றார் கணக்குப் பிள்ளை. அவன் சொல்லப் போவது தான் தனிப்படக் கேட்க வேண்டிய விஷயம். கிராமத்தார் அனைவருக்கும் எதிரே அவன் அதைச் சொன்னால் ரசாபாசமாகப் போய்விடும் என்பதை உணர்ந்தார். அப்புறம் ஒரே ரகளைதான் நடக்கும். ஒரேவிணாடியில் இதனைத் தீர்மானித்துக் கொண்டு திரும்பினார். "இன்று இத்துடன் கதைமுடிந்து விட்டது. நாளைக்குச் சாயங்காலம் மறுபடியும் சொல்கிறேன்" என்று சொல்லி விட்டு நடக்கலானார். வீரப்பனைத் தம் முடன் வரும்படி சமிக்ஞை செய்தார்.

தனியே சென்றபின், "இது என்ன வீரப்பா! இப்படியா நடந்து கொள்வது? பெண்பிள்ளையைப் பற்றி அவதூறு சொல்ல உனக்கு வெட்கமாக இல்லையா? அதுவும் கிராம ஜனங்கள் அத்தனை பேருக்கும் எதிரிலேயா சொல்வார்கள்?" என்று கேட்டார்.

"எஜமான்! நான் ஏன் அவதூறு சொல்லப் போகிறேன்? கண்ணால் பார்த்ததைப் பார்த்தேன் என்று சொல்கிறேன். அவ்வளவுதானே? என் உடம்பெல்லாம் துடிக்குது. வெளியானாச் சேன்னு சும்மா இருந்தேன். நம்ப கிராமத்து மனுசனுகவே இருந்திருந்தால் இத்தனை நேரம் அவன் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருப்பான்" என்றான் வீரப்பன் வீராவேசத்தோடு.

சச்சிதானந்தம் அவனைச் சாந்தப்படுத்தினார். "இளமைத் துடிப்பிலே உணர்ச்சி வசப்பட்டு எதையும் அவசரமாகச் செய்துவிடக் கூடாது, வீரப்பா! பின்னால் அதனால் வருத்தப்படும்படி நேரிடும். ஒரு ஆண்பிள்ளையும் பெண் பிள்ளையும் பேசிக்கொண் டிருப்பதைப் பார்த்தால் உடனே அவர்களைப் பற்றித் தவறாக முடிவு செய்து விடலாமா?" என்றார்.

"ஐயோ! அவர்கள் பேசிக்கிட்டிருந்தால் பரவாயில்லையே? அந்தப் பயல் மல்லிகாவின் கன்னங்களைத் தொட்டுக்கிட்டு இருந்தான். அந்தப் பெண்ணும்



பல்லை இளிச்சுக்கிட்டு நிக்குது. நான் என் கண்ணாலே பார்த்தேன். மாரியம்மன் முன்னால் சத்தியம் கூடச் செய்வேன்!" என்று பதறினான் வீரப்பன்.

"சத்தியமும் வேண்டாம் ஒண்ணும் வேண்டாம். அவர்களையே நேரில் பார்த்துப் பேசி முடிவு செய்வோம், வா!" என்று அழைத்தார் சச்சிதானந்தம்.

இருவரும் ஆற்றங்கரைக்கு நடந்து சென்றார்கள். "இங்கேதான் இருந்தாங்க" என்றான் வீரப்பன். "இன்னும் சற்றுத் தூரம் நடந்து சென்று பார்க்கலாம். இப்படித்தான் போயிருப்பார்கள்" என்றார் சச்சிதானந்தம். கரையோரமாகச் சற்று வேகமாகவே நடந்தார்கள். கண்ணுக் கெட்டிய தூரம் அந்தக் காதலர்களைக் காணவில்லை.

"வீட்டுக்குத் திரும்பி யிருப்பாங்க, எசமான்!" என்றான் வீரப்பன்.

"சரி, நீ வீட்டுக்குப் போ! நான் கமலத்தின் வீட்டுக்குப் போய்ப் பார்த்து

விட்டுப் பிறகு வருகிறேன்'' என்று கூறினார் கணக்குப் பிள்ளை.

வீரப்பன் நடக்க ஆரம்பித்தான். அவன் இரண்டடி எடுத்து வைத்ததும் ''வீரப்பா!'' என்று அழைத்தார் சச்சிதானந்தம். ''இது விஷயமாக யாரிடமும் எதுவும் சொல்லாதே! கண்ணால் பார்த்ததும் பொய், காதால் கேட்டதும் பொய், தீர விசாரித்து அறிவதே மெய் என்பது உனக்குத் தெரியுமோ இல்லையோ? நான் தீர விசாரித்துக் கொண்டு வருகிறேன். அப்புறம் யோசித்துக் கொள்ளலாம்'' என்றார்.

வீரப்பன் தலையை அசைத்து விட்டு நடந்தான். ''கேட்கவும் வேணும்! விசாரிக்கவும் வேணும்! பார்த்ததே போதும்! என் கண்கள் குருடா என்ன?'' என்று அவன் வாய் முணுமுணுத்தது.

சச்சிதானந்தம் கமலத்தின் வீட்டை அடைந்தபோது அவள் சுவாமி படத்துக்கு முன் விளக்கேற்றி வைத்து நமஸ்கரித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பிரார்த்தனை முடியும்வரை மௌனமாகக் காத்திருந்தார் கணக்குப் பிள்ளை. அவரைப் பார்த்ததும், ''வாருங்கள் ஐயா; வாருங்கள்! உட்காருங்கள்'' என்று உபசரித்தாள். பாயை விரித்தாள். அரிக்கன் விளக்கின் ஒளியைப் பெரிதாக்கினாள்.

''ஐயா! யாரிடமாவது சொல்லி அனுப்பியிருந்தால் நானே ஓடி வந்திருப்பேனே? நீங்கள் இவ்வளவு சிரமப்பட்டு இங்கே வந்திருக்க வேண்டாமே?'' என்றாள் கமலம்.

''இல்லை, கமலம்! நான் பேச வந்தது ரொம்ப முக்கியமான விஷயம். யார் காதிலும் விழக்கூடாது. அதற்காகத் தான் உன் வீட்டுக்கு நானே வந்தேன்'' என்றார் சச்சிதானந்தம். 'யார் காதிலும் விழக் கூடாது' என்று அவர் சொன்ன வார்த்தைகளே சமையல் அறையிலிருந்த மல்லிகாவின் காதுகளில் விழுந்து கொண்டுதான் இருந்தது. அவள் கதவோரத்தில் நின்று கொண்டு கவனிக்க ஆரம்பித்தாள்.

கமலத்தின் முகத்தில் ஆவல் படர்ந்தது. அந்த ஒரு கணத்துக்குள் அவள் உள்ளத்தில் ஆயிரமாயிரம் எண்ணங்கள் தோன்றின. அவள் மனம் அந்த ஒரு விநாடியில் ஆகாசக் கோட்டைகளைக் கட்டிவிட்டது. ''ஐயா! அப்படி என்ன முக்கியமான விஷயம்? என் கணவரைப் பற்றி ஏதாவது...''

''இல்லை கமலம் இல்லை! நான் சொல்லப்போவது உன் கணவனைப் பற்றியே அல்ல. உன் மகள் மல்லிகாவைப்பற்றி.''

உள்ளே மகள் மல்லிகா இன்னும் கவனமாகக் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினாள். கமலத்தின் முகம் சட்டென்று மாறியது. தான் நினைத்த படியே விபரீதம் உருவாகி விட்டது என்பதை உணர்ந்து கொள்ள அவளுக்கு அதிக நேரம் ஆகவில்லை.

கொஞ்சநஞ்சம் இருந்த சந்தேகமும் அடுத்துச் சச்சிதானந்தம் சொன்ன வார்த்தைகளால் தீர்ந்து விட்டது.

அவர் சொன்னதையெல்லாம் கேட்டு விட்டுக் கமலம், ''ஐயா! மல்லிகாவுக்கு வயதுதான் ஆகிவிட்டதே ஒழிய அவள் மனம் இன்னும் பக்குவம் அடையவில்லை. வாழ்க்கையைப் பற்றியும் சமூகத்தைப் பற்றியும் அவள் இன்னும் சரியாக உணர்ந்து கொள்ளவில்லை. ஏதோ கனவு உலகத்தில் இருப்பதுபோல் நடந்து கொள்கிறாள். சினிமாவில் சேரப் போகிறேன் என்றும், உல்லாசமாக வாழப் போகிறேன் என்றும், உழைத்து உழைத்து என்னத்தைக் கண்டோம் என்றும் ஏதேதோ பேசுகிறாள். காதலைப் பற்றியும் அதன் உயர்வைப் பற்றியும் பிதற்றுகிறாள். நீங்கள்தான் அவளுக்கு நல்ல வார்த்தை சொல்லித் திருத்த வேண்டும்'' என்றாள்.

மல்லிகாவினால் அதற்குமேல் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. பொறுமையை இழந்து அவள் கதவின் மறைவிலிருந்து வேகமாக வெளியே வந்தாள்.

''கணக்கையா! நான் காதலைப் பற்றித் தான் பேசுகிறேன். அதன் உயர்வைப் பற்றித்தான் சொல்லுகிறேன். அவரைக் காதலிக்கத்தான் செய்கிறேன். அதிலே என்ன தவறு?'' என்று கண்களில் தீப் பொறி பறக்கக் கேட்டாள்.

''காதல் கல்யாணத்தில் முடியும்வரை அதனால் தவறு ஒன்றுமே இல்லை'' என்றார் சச்சிதானந்தம்.

''காதல் கல்யாணத்தில் முடியாமல் பின்னே குட்டிச்சுவரிலா போய் முடியும்?'' என்று மிகுந்த ஆவேசத்துடன் கேட்டாள் மல்லிகா.

''குட்டிச் சுவரிலும் முடியலாம்; அல்லது கிணற்றிலும் முடியலாம்! ஆற்று வெள்ளத்திலும் முடியலாம்! விட்டத்திலிருந்து தொங்கும் கயிற்றிலும் முடியலாம்! நிச்சயமாகச் சொல்லமுடியாது'' என்றார் சச்சிதானந்தம் அமைதியாக.

''வில்!'' என்று அலறினாள் கமலம்.

''ஐயா! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்! என் மகளைப்பற்றி இவ்வாறெல்லாம் பேசாதீர்கள்!'' என்று விம்மலுக்கிடையே கூறினாள். அவள் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகியது.

மல்லிகா பதில் பேச முடியாமல் வாயடைத்துப் போய் நின்றாள்.

கமலம் அப்படிக் கேவிக் கேவி அழுவதைப் பார்த்ததும் சச்சிதானந்தத்துக்கு அவள்மீது இரக்கம் உண்டாயிற்று. "அம்மா, கமலம்! அழாதே அம்மா. நான் அவ்வளவு கடுமையான வார்த்தைகளை உபயோகித்திருக்கக் கூடாது தான். என்னை மன்னித்து விடு" என்று நாத் தழுதழுக்கக் கூறினார்.

கற்சிலைபோல் நின்ற மல்லிகா இப்போது அசைந்து கொடுத்தாள். "ஐயா! கணக்குப்பிள்ளையே! நீங்கள் இங்கு வந்து கண்டபடி பேசியிருக்கவும் வேண்டாம். பின்னர் மன்னிப்புக் கேட்கவும் வேண்டாம். திரும்பிப் போய் உங்கள் வேலைகளைக் கவனியுங்கள். கிஸ்தி வசூல் செய்யுங்கள். கணக்கு எழுதுங்கள். வில்லுப்பாட்டில் கதை சொல்லுங்கள். இது என் சொந்த விஷயம். இதில் தலையிட உங்களுக்கு உரிமையில்லை!" என்றாள் கோபத்தோடு.

"போய் விடுகிறேன் அம்மா! போய் விடுகிறேன். ஆனால் நான் போவதற்கு முன்னால் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டுத்தான் போவேன். கிஸ்தி வசூல் செய்வதில் எனக்கு எவ்வளவு அக்கறை உண்டோ, அவ்வளவு அக்கறை கிராம மக்களின் நலனிலும் எனக்கு உண்டு. வில்லுப் பாட்டில் எவ்வளவு ஆர்வம் காட்டுகிறேனோ, அவ்வளவு ஆர்வத்தை உங்களுடைய நல்வாழ்விலும் காட்ட வேண்டியது என்னுடைய கடமை. கிராமத்தில் பெரியவன், வயதானவன் நான். உங்கள் குடும்பத்தைப் போன்ற ஆதரவற்ற குடும்பத்தில் எனது பொறுப்பு இன்னும் அதிகமாகிறது. தயவு செய்து நான் சொல்வதைக் கொஞ்சம் கேளம்மா!" என்று இறைஞ்சிக் கேட்டுக் கொண்டார் சச்சிதானந்தம்.

மல்லிகா பதில் பேசாமல் மௌனமாக இருந்தாள். "குழந்தை! நீயும் அந்தச் சேகரும் ஆற்றங்கரையோரமாகப் பேசிக் கொண்டிருந்ததை வீரப்பன் பார்த்தான். சேகர் தன் விரல்களால் உன் கன்னத்தைத் தீண்டியதாகச் சத்தியம் செய்கிறான். அவன் வாயை அடக்கி வைத்திருக்கிறேன். எவ்வளவு நேரம் அடங்கி இருப்பானோ, தெரியாது. நாளைக்கு ஊரெல்லாம் தெரிந்து போனால் உன்னை எல்லாரும் கண்டபடி ஏசுவார்கள். நடத்தை கெட்டவள் என்று தூற்றுவார்கள். உங்கள் குடும்பத்தையே விலக்கி வைப்பார்கள். எச்சரிக்க வேண்டியது என் கடமை, எச்சரிக்கிறேன்" என்றார் சச்சிதானந்தம்.

இவ் வார்த்தைகளைக் கேட்ட மல்லிகாவுக்கு ஆத்திரம்தான் அதிகமாயிற்று. அந்த ஆத்திரத்தில் அவள் சிந்திக்கும் சக்தியை இழந்தாள். "கிராமத்தார் என்ன வேண்டுமானாலும் பேசட்டும். ஏசட்டும். அதைப் பற்றி எனக்கு என்ன? நாங்கள் ஒருவரை யொருவர் மனமாரக் காதலிக்கிறோம். திருமணம் செய்து கொள்வோம்!" என்றாள்.

"அம்மா! காதல் என்றும் அழியாதது, யுகம் யுகமாக நீடித்திருக்கக் கூடியது என்று புத்தகங்களில் படிக்கலாம். திரைப்படங்களில் பேசலாம். ஆனால் அதெல்லாம் ஏட்டுச் சுரைக்காய்! கறி செய்து உண்ண முடியாது!" என்றார்.



"எங்கள் தூய்மையான காதலைப் பற்றி உங்களுக்கு ஏன் அவ்வளவு சந்தேகம்?" என்று கேட்டாள் மல்லிகா.

"இருக்கிறது தாயே! சந்தேகம் இருக்கிறது. சினிமா எடுக்க இங்கு வந்தவர்கள் எல்லோரும் நாளைக்குக் கடையைக் கட்டுகிறார்கள். சென்னைக்குத் திரும்புகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். அவர்களுடன் உன்னுடைய சேகரும் சென்று விட்டால்......"

சச்சிதானந்தம் வாக்கியத்தை முடிக்கும் வரை மல்லிகா காத்திருக்கவில்லை. அவள் ஓடினாள். இருட்டில் தட்டுத் தடுமாறி ஓடினாள். தடுக்கி விழுந்து எழுந்து ஓடினாள். களைப்பினாலும் துக்கத்தினாலும் மார்பு விம்மி விம்மி அடங்க ஓடினாள். கண்ணிலிருந்து வழிந்த கண்ணீர் தூசி படிந்த கன்னங்களைக் கழுவிச் சுத்தம் செய்ய ஓடினாள். தன் காதலனைத் தேடிக்கொண்டு ஓடினாள்! ஓடினாள்! ஓடிக்கொண்டே இருந்தாள். (தொடரும்)




## 5. வெந்நீர்க் கடல்!

கிழவன் கதையைப் பாதியில் நிறுத்தியதும் வீராங்கன் மிகுந்த ஆவலுடன், "மேலே சொல்லுங்கள்!" என்றான். கிழவனும் தொண்டையைக் கனைத்துக் கொண்டு கதையை மேலே தொடர்ந்தான்.

"இந்த மாளிகையை முதலில் பார்த்த பொழுது திகைத்துத்தான் போனேன். கொஞ்ச நேரத்துக்குப் பின்பு இந்த மாளிகையைப்பற்றி ஏற்கனவே என் பாட்டனாரின் மூலம் கேள்விப்பட்டிருக்கிறேன். தென் மதுரையை ஆண்ட காய்சின வழுதி என்ற அரசன் உல்லாசப் பொழுது போக்குக்காக இதைக் கட்டினானாம். ஆண்டுக்கு ஒருமுறை இங்கு வந்து தங்கிப் போவானாம்.

"இந்த மாளிகை நம் கபாடபுரத்தில் கட்டப் பட்டிருக்கும் மாளிகைகளைப் போல் காரை களி மண் முதலியவற்றால் கட்டப் பட்டவையல்ல. இந்தத் தீவு முழுவதும் தங்கமும் மணலும் பாதிக்குப் பாதி கலந்திருக்கின்றன. அதனால்தான் இந்த மாளிகையை அவ்வளவு சுலபமாகக் கட்டி விட்டார்கள். சுவரின் மேல் பூச்சு மட்டும் சுயமான தங்கத்தால் பூசப் பட்டதாகும்.

"அன்றையிலிருந்து இங்குதான் வசித்து வருகிறேன். தேங்காயும், கிழங்கும், பழங்களும், காய்களும் தான் என் உணவு. என்னைத் தவிர இங்கு வேறு ஒருவரும் வசிக்க வில்லை. இங்கு யாரும் வருவதும் கிடையாது. ஆனால் பல ஆண்டுகளுக்கு ஒரு முறை கபாடபுரத்திலிருந்து பலர் இங்கு வந்து கப்பல் கப்பலாக இந்தத் தங்க மண்ணை எடுத்துச் செல்வார்கள். அதைக் கொண்டுதான் கபாடபுரத்தில் நகைகளும் நாணயங்களும் செய்யப்படுகின்றன."

கிழவன் கூறி நிறுத்தியதும் வீராங்கன் ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, "அதன் பிறகு குமரி முத்தை எடுக்க நீங்கள் முயற்சி செய்யவில்லையா?" என்று கேட்டான்.

"எத்தனையோ தடவைகள் முயற்சி செய்தேன். கிடைத்த பலன் தோல்விதான். ஆனால் அந்தத் தோல்விகள் அனைத்தும் வெற்றிக்குரிய மார்க்கத்தைக் காண்பித்து விட்டன. எல்லா அபாயங்களையும் கடப்பதற்குரிய ஆயத்தங்களைச் செய்து விட்டேன். ஆனால் நான் அந்தத் திரச் செயலில் ஈடுபட அருகதை யற்றவன் ஆகி விட்டேன். உன்னைப் போன்ற வீரச் சிறுவர்களால் தான் அது முடியும். ஒரு நிபந்தனையின் பேரில் உனக்குச் சில மூலிகைகளைத் தருகிறேன். அவற்றை எடுத்துக் கொண்டு நாளைக்கே நீ குமரிக் கடலை நோக்கிப் புறப்படலாம்."

"நீங்கள் சொல்கிறபடியே நாளைக்குப் புறப்படுகிறேன். என்ன நிபந்தனை என்று சொல்லுங்கள்?"

"நிபந்தனையையும் சொல்கிறேன். குமரிக் கடல் பிரயாணத்துக்காகவே நான் பல ஆண்டுகள் சிரமப்பட்டுத் தயாரித்த மூலிகைகளையும் காண்பிக்கிறேன். அதற்கு இந்தக் கோபுரத்தின் உச்சிக்குப் போக வேண்டும்" என்றான் கிழவன்.

இவ்வாறு கூறி விட்டு எதிரே சுவரில் இருந்த ஒரு சித்திரத்தைத் தன் கையினால் தள்ளினான் கிழவன். என்ன ஆச்சரியம்! அங்கே ஒரு வழி தென்பட்டது. சித்திரம் மறைந்து விட்டது. கிழவன் அதற்குள் புகுந்து நடந்தான். வீராங்கன் 'கோபுரத்துக்குச் செல்ல எவ்வளவு ரகசியமாக வழி வைத்திருக்கிறார்கள்!' என்று எண்ணி மனத்துக்குள் வியந்தபடியே கிழவனைப் பின்தொடர்ந்து சென்றான்.

சிறிது தூரம் சென்றபிறகு பட்டப் பகலைப் போல் வெளிச்சம் வந்தது. இந்தக் குகை போன்ற கோபுரத்துக்குள் இப்படிப் பட்ட வெளிச்சம் எங்கிருந்து எப்படி வருகிறது என்று எண்ணி வியந்த வீராங்கன், "தாத்தா! இங்கே இவ்வளவு வெளிச்சம் ஏது?" என்று கேட்டான்.

கிழவன், "கோபுரத்தின் உச்சியிலிருக்கும் சந்திரகாந்தக் கல்லால் தான் இவ்வளவு வெளிச்சம்" என்றான்.

சந்திரக்காந்தக்கல்லைப் பற்றி அறியாத வீராங்கன் "அப்படி என்றால் என்ன?" என்று வியப்புடன் கேட்டான்.

"அது ஒரு கல். சந்திரனின் ஒளியை இழுத்துப் பிரதிபலிக்கக் கூடியது. சந்திரன் இல்லாவிட்டாலும் தாரகைகளின் ஒளியை இழுத்துப் பிரதிபலிக்கும். அதை முறைப் படி கோபுரத்தின் உச்சியில் பதித்து வைத்திருக்கிறார்கள்."

கிழவன் இப்படிக் கூறியதும், தான் படகில் வரும்பொழுது மாலை வெய்யில் பட்டு, கோபுரத்தின் உச்சியில் ஏதோ பிரகாசித்ததும் அதை வைர வைடூரியங்

களென்று ...ன்னியதும் வீராங்கனின் நினைவுக்கு வந்தது.

அரை நாழிகை நேரத்தில் இருவரும் கோபுரத்தின் உச்சியை அடைந்தார்கள். அங்கே இடம் விஸ்தாரமாக இருந்தது. நான்கு பக்கங்களிலும், பார்ப்பதற்கு வசதியாகச் சாளரங்கள் இருந்தன.

கிழவன் ஒரு சாளரத்தின் அருகில் போய் நின்றுகொண்டு அங்கிருந்த ஒரு மரக்கட்டையை நகர்த்தினன். மரக்கட்டை நகர்ந்ததும் பள்ளமான பகுதி தெரிந்தது. அதில் நான்கு தேங்காய்க் குடுவைகள் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நிறம் பூசப்பட்டிருந்தது.

வீராங்கன் அளவுக்கு மீறி அதிசயப் பட்டவனாக, ''இதெல்லாம் என்ன தாத்தா? இந்த நான்கு குடுவைகளுக்குள்ளும் என்ன இருக்கின்றன?'' என்று கேட்டான்.

உடனே கிழவன் அந்த நான்கு குடுவைகளையும் சுட்டிக் காண்பித்து, ''இவற்றில் மூன்று குடுவைகள் உன் குமரிக்கடல் பிரயாணத்துக்குப் பெரிதும் உதவப் போகின்றன. இந்த நான்காவது குடுவையையும் உன்னிடமே தருவேன். ஆனால் அதை நீ கபாடபுரத்துக்குச் சென்ற பின்புதான் திறந்து பார்க்க வேண்டும்'' என்ருன்.

வீராங்கன் மகிழ்ச்சியோடு, ''உங்கள் சொல்படியே செய்கிறேன், தாத்தா! ஏதோ நிபந்தனை என்றீர்களே, அதை விவரமாகச் சொல்லுங்கள்'' என்ருன்.

கிழவன் ''அப்படி ஒன்றும் பெரிய நிபந்தனை இல்லை. நீ குமரிமுத்தை எடுத்துக் கொண்டு நேராக இங்கு வரவேண்டும். அப்புறம்தான் கபாட புரத்துக்குச் செல்ல வேண்டும்'' என்ருன்.

''நிச்சயம் இங்கு வந்து உங்களுக்கு நன்றி செலுத்தி விட்டுத்தான் கபாடபுரம் செல்வேன். அதோடு உங்களையும் அழைத்துக் கொண்டு செல்வேன்.''

''மிக்க மகிழ்ச்சி. நீ வெற்றியோடுதிரும்பி வரும் நாளை நான் ஒவ்வொரு கணமும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன். போகட்டும். இப்பொழுது இந்த நான்குகுடுவைகளுக்குள்ளும் என்ன இருக்கின்றன என்றும் அதன் உபயோகம் என்ன என்றும் சொல்லி விடுகிறேன்.''

இவ்வாறு கூறி விட்டு முதலில் இருந்த சிவப்பு நிறக் குடுவையை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு, ''வீராங்கா! நான் இருபது ஆண்டுகளாக இந்தத் தீவில் பல வித ஆராய்ச்சிகளைச் செய்து அபூர்வ சக்தி வாய்ந்த மூலிகைகளைக் கண்டு பிடித்துப் பொடி செய்து வைத்திருக்கிறேன். இதனால் குமரி முத்து சுலபத்தில் அதிக சிரம மில்லாமல் நமது கைக்குக் கிட்டி விடும்.

இதோ இந்தச் சிவப்புக் குடுவையில் ஒரு சிவப்பு நிறப் பொடி இருக்கிறது. இதை எடுத்துச் சிறிது மூக்கில் இழுத்துக் கொண்டு நீருக்குள் மூழ்கி விட்டால் எத்தனை நாட்களுக்கு வேண்டுமானாலும் எவ்வித சிரமமும் இல்லாமல் சுவாசித்துக் கொண்டே இருக்கலாம். ஆனால் நீர் மட்டத்துக்கு மேலே வந்து விட்டால் பிறகு மீண்டும் கொஞ்சம் மூக்கில் இழுத்துக் கொண்டு தான் நீருக்குள் செல்ல வேண்டும். இந்தப் பொடியினால் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் நீருக்குள்ளேயே சுற்றித் திரிந்து குமரி முத்து இருக்கும் இடத்தைக் கண்டு பிடிக்கலாம்.

''இந்தப் பச்சை நிறக் குடுவையில் பச்சை நிறப் பொடி இருக்கிறது. இதை உடல் முழுவதும் பூசிக் கொண்டு தான் குமரிக்கடலில் இறங்க வேண்டும். இல்லாவிட்டால் அந்தப் பயங்கரக் கடலில் கால் வினாடி கூட உன்னால் உயிர் வாழ முடியாது. அங்கே இருக்கும் எரிபூச்சிகளும் இரண்டு நாழிகையில் ஆளையே தீர்த்துக் கட்டி விடும். இந்தப் பொடியைப் பூசி இருந்தால் எந்த நச்சுப் பூச்சிகளும் அருகில் வர அஞ்சும். பெரிய விலங்குகள் கூட அருகே வராது; பயந்து ஓடி விடும்.

''இது வெள்ளை நிறக்குடுவை. இதற்குள் வெள்ளை நிறப் பொடிதான் இருக்கிறது. இதில் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக் கொண்டுதான் கடலில் மூழ்க வேண்டும். அதன் நீர் மட்டத்துக்கு மட்டும் வந்து விடக் கூடாது. அப்படி வந்தால் பிறகு மீண்டும் கொஞ்சம் விழுங்கி விட்டுத்தான் கடலில் மூழ்க வேண்டும். இதனால் கடல் அடியில் கவலையற்றுக் குமரி முத்தைத் தேடி எடுத்து வரலாம்.

''கடைசியாக, இந்தக் கறுப்பு நிறக் குடுவையைப் பற்றிச் சொல்லி விடுகிறேன். ஆனால் இதற்குள் என்ன இருக்கிறது என்பதை நான் சொல்ல மாட்டேன். நீயும் திறந்து பார்க்கக் கூடாது. முத்தோடு திரும்பிய பிறகு, கபாடபுரத்துக்குச் சென்ற





*தினமணி கதிர் துணை ஆசிரியரும் தமிழ் நாட்டின் தலைசிறந்த எழுத்தாளருமான திரு என். ராமசாமி (துமிலன்) அவர்களின் புதல்வி பத்மாவுக்கும் மணக்கால் திரு சந்தானகிருஷ்ண பாகவதரின் குமாரர் திரு மணக்கால் ரங்க ராஜன் அவர்களுக்கும் சென்னை தியாகராய நகரில் சென்ற மாதம் 23ந் தேதி வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்துக்குப் பத்திரிகை ஆசிரியர்களும், எழுத்தாளர்களும், பிரமுகர்களும், ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள். வாழ்க மணமக்கள்!*

பின்பு நான் திறந்து பார்க்க வேண்டும். இப்பொழுது இந்த நான்கு குடுவைகளையும் நீ எடுத்துக் கொள்ளலாம்.''

கிழவன் கூறி முடித்தான். வீராங்கன் அவன் கூறியது அனைத்தையும் கூர்மையாகக் கேட்டு மனத்தில் பதிய வைத்துக் கொண்டான். பின்பு அந்தக் குடுவைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு இருவரும் கீழே வந்தனர்.

அன்று இரவு முழுவதும் வீராங்கன் எப்படிப் பிரயாணம் செய்ய வேண்டும், எந்தெந்த முறையில் நடக்க வேண்டும், வழியில் என்னென்ன அபாயங்கள் ஏற்படும், அவற்றை எவ்வாறு சமாளிக்க வேண்டும் என்பதைக் குறித்து வெகு நேரம் அவனிடம் கூறிக் கொண்டிருந்தான் கிழவன்.

பொழுது புலர்ந்தது. தங்கத்தீவின் தென் கரையில் ஒரு சிறிய படகு புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தது. அதில் முக்கால் பாகம் காயும் கனியும் கிழங்கும் தேங்காயும் நிறைந்திருந்தன! மீதியிருந்த கால் பாகத்தில் வீராங்கன் கம்பீரமாக நின்றிருந்தான். கிழவன் கரையில் நின்றுகொண் டிருந்தான்.

வீராங்கன் கிழவனைப் பார்த்து, ''போய் வருகிறேன், தாத்தா! நான் வருகிற வரையில் பத்திரமாக இருங்கள்'' என்றான் பெரிய மனிதனைப் போல்.

கிழவன், ''நான் சொன்னதையெல்லாம் கவனமாக நினைவில் வைத்துக் கொள். வெற்றியோடு திரும்பி வா. ஒவ்வொரு நாளும் உன்னை எதிர்பார்ப்பேன்'' என்று கூறி அவனை ஆசிர்வதிப்பது போல் கையைத் தூக்கி ஆட்டினான்.

ஒரு இரவுப் பழக்கத்துக்குள் அவரைப் பிரிவது வீராங்கனுக்கு என்னவோபோல் இருந்தது. கிழவனைப் பற்றி அவன் மனத்தில் நல்ல எண்ணமே ஏற்பட்டிருந்தது. அழகிய புல் தரைக்குள் இருக்கும் கல்லையும் முள்ளையும் அறிந்து கொள்வதற்கு வீராங்கனால் முடியவில்லை.

படகு மெள்ளப் புறப்பட்டது. வர வர அதன் வேகம் அதிகமாகியது. வினாடிக்கு வினாடி வீராங்கனுக்கும் கிழவனுக்கும் இடையே இருந்த தூரம் அதிகரித்தது. சிறிது நேரத்தில் தீவின் உருவம் குறைந்து, கரும்புள்ளி வடிவமாகிக் கடைசியில் மறைந்தே போயிற்று.

பல நாட்கள் எவ்வித ஆபத்தும் தடையுமின்றிப் பிரயாணம் செய்து வந்த வீராங்கன் ஒரு நாள் அதிகாலை நேரத்தில் தூரத்தில் ஏதோ புகைபோல் நடுக்கடலில் தென்படுவதைக் கண்டு ஆச்சரியமுற்றான்.

படகு அந்தத் திசையில்தான் சென்று கொண்டிருந்தது. முதலில் பனி மூட்டமாக இருக்குமோ என்று எண்ணினான் வீராங்கன். ஆனால் பின்பு அது பனி மூட்டமல்ல என்பது உறுதியாயிற்று. உண்மையில் அது புகையும் அல்ல. கடலில் இருந்து புகையைப்போல் எழுந்து கொண்டிருந்த ஆவிதான். அங்கே தளதளவென்று நீர் கொதிக்கும் ஓசை அவன் காதுகளில் தெளிவாக விழுந்தது. வீராங்கனின் சப்த நாடியும் அடங்கி ஒடுங்கி விட்டது.

படகிலிருந்து குனிந்து தன் சுட்டு விரலால் கடல் நீரைத் தொட்டுப் பார்த்தான். அவ்வளவுதான்! அடுத்த நிமிஷம் 'ஆ' என்று அவனை அறியாமலேயே வாய் விட்டு அலறிவிட்டான். அவன் நுனி விரல் வெண்ணெயைப் போல் குழைவாக ஆகி விட்டது. 'ஐயோ! என்ன பயங்கரமான கடல்!' வீராங்கன் அந்த நீரைப்பற்றி இன்னும் விளக்கமாக அறிய விரும்பிப் படகிலிருந்த ஒரு பெரிய கிழங்கை எடுத்து நீரில் போட்டான்.

சற்று நேரத்துக் கெல்லாம் கிழங்கின் பசுமை மாறித் தோல் வழண்டு கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து நீரோடு நீராக மறைந்து போயிற்று. அந்தக் காட்சி அவன் ஈரக் குலையைத் துடி துடிக்க வைத்தது.

சட்டென்று படகைப் பற்றிய நினைவு அவனுக்கு வந்தது. இன்னும் கொஞ்சம் தூரம் போவதற்குள் படகும் இம்மாதிரி கரைந்து விடும் என்று எண்ணினான். படகு கரைந்து போனால் அப்புறம் வீராங்கனும் கிழங்கு அடைந்த கதியை அடைய வேண்டியதுதானே? (தொடரும்)



# பிரகாசம்

**—அத்தகைய பரிசுத்தம் அளிப்பது விம் ஒன்றுதான்!**

ஒரு முறை விம் உபயோகித்துப் பாருங்கள்; முன்னமேயே ஏன் உபயோகிக்காமல் போனோம் என்று அதிசயிப்பீர்கள்! பீங்கான், கண்ணாடி சாமான்களுக்கு உகந்தது அதுவே. மணமணவென்று, மழமழப்போடு சுகாதார ரீதியான சுத்தம் அளிப்பது விம். விம் உபயோகித்தால் உணவுப் பசை இருந்த சுவடே தெரியாமல் நீங்கிவிடும்; கழுவி வைப்பதற்கும் இலகுவானது—ஆகவே பாத்திரங்களுக்கெல்லாம் நல்ல பாதுகாப்பு. விம் மழமழப்பு வாய்ந்தது, ஆயினும் வழுக்காது. மேலும், சமையல் பாத்திரங்கள், ஸ்நான அறை, பேஸின்கள், தரை எல்லாவற்றிற்கும் சுகாதாரப் பவுடராகிய விம் உபயோகியுங்கள். மங்களகரமான ஒளி மங்காமல் தங்குவதற்கு உங்கள் வீட்டிலிருக்கவேண்டியது விம்!




**உங்கள் வீட்டுக்கு வேண்டியது விம்**

V. 93A-50 TM    பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு




# பிரியாத பிரிவு

மாடிக் கதவைப் பட்டென்று மூடித் தாழிட்டு விட்டு, ''நீங்கள் போகக் கூடாது. உங்களைப் போகவிட மாட்டேன்'' என்று இரைந்தாள் சொர்ணம். கோபக் கருக்கல் அவள் கண்ணின் வழி நுழைந்து நீர்த்துளிகள் இரண்டை இமை விளிம்பில் தொங்க விட்டிருந்தது.

விரைந்த காலை மனத்துக்குள் அடக்கிப் பின்னுக்கு நகர்ந்தார் பரஞ்சோதி. அன்னை பராசக்தி தாய்மைத் தவம் கலைந்து, கையிலே திரிசூலம் ஏந்தி அழிவுத் திருப்பணிக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டு விட்டதைப் போல் சொர்ணம் காய்ந்த கண்களுடன் நின்றபொழுது, பரஞ்சோதிக்கு 'அவள் தன் மனைவி' என்ற உணர்வே கலங்கி விட்டது. 'அழிவைத் தடுக்கும் போலீஸ் இன்ஸ்பெக்டர் நான்' என்ற அகம்பாவம் கரைந்து நீராயிற்று.

''நான் சொல்கிறேன் : பேசாமல் போய்ப் படுங்கள்.'' சொர்ணத்தின் பெண்மை முனைப்புடன் கூக்குரலிட்டது.

பரஞ்சோதியால் அப்பாலும் இப்பாலும் நகர முடியவில்லை. சொர்ணத்தின் ஆவேசம் அவர் கால்களுக்குத் தளையாயிற்று.

''ஏன் மரமாக நிற்கிறீர்கள்? மரமாக நின்றது போதும் ; மனிதராகுங்கள்.''

தனக்குத் தானகவே ஏற்படுத்திக்கொண்ட ஓர் ஏற்பாட்டில் மரம் நிற்கிறது. ஏற்பாட்டுக்கு அடங்காத வாழ்க்கையில் பரஞ்சோதிக்கு மரமாகக்கூட நிற்க முடியவில்லை. உள்ளத் தவிப்பில் எண்ணக் கிளைகள் ஒடிந்து விழ, உணர்ச்சியின் விளக்கத்துக்குப் பிடிப்பு ஒன்றும் கிடைக்காமல் இருளுக்குள் புதைந்து புலம்பிக் கொண்டிருந்தார்.

''மனமுள்ள மனிதராக மாட்டீர்களா? உங்கள் வாழ்க்கையில் ஒரேயொரு நாள் என்மட்டில் மனிதராக இருந்தீர்களே, அதாவது ஞாபகத்துக்கு வருகிறதா?''

பரஞ்சோதியின் மனத்திலே அந்த நாள் நெளிந்தது. அது சொர்ணத்தின் கைப்பிடித்த நாள்.

நினைவுக்குச் சிறுபொழுதைக் கொடுத்த சொர்ணம், பொழுதைச் சுருட்டி வார்த்தையாக்கிச் சீறினாள்: ''நினைவுக்கு வருகிறதா நீங்கள் மனிதராகி என்னை ஏமாற்றிய அந்த நாளைப் பற்றி? பட்டப்பகலில் பார்க்கமுடியாத அருந்ததியைப் 'பார்' என்று காட்டினீர்கள். நான் பார்க்காமலேயே பார்த்து விட்ட பாவனையில் தலைகுனிந்தேன். பகலில் குனிந்த என் தலையை இரவில் நிமிர்த்தினீர்கள். அப்பொழுது நாம் மொட்டை மாடியிலே இருந்தோம். வானத்தில் நிலவுக் குடங்கள் உடைந்துகிடந்தன. அதில் மொய்த்துக் கிடந்தான் முயங்கிய சந்திரன். வெண்ணெய்க்குச் சித்தம் வைத்து அதில் உண்டு புரளும் எறும்பைப்போல் நிலாக்கள்ளைக் குடித்து வெறிபிடித்த நீல மேகம், சீதளச் சந்திரனைச் சீண்டிக் கொண்டிருந்தது. அப்பொழுது நீங்கள் கூறினீர்கள்: 'சொர்ணம்! நான் வானம். நீ அதில் முளைத்த வட்ட நிலா. நிலவுக்குக் கோபம் வந்தால் இருள் கடலில் மூழ்கிவிடும் வானம். நீ குணமுள்ள நிலவாக இருந்தால்தான் நான் பால் மண வானமாக இருக்க முடியும்' என்று உணர்வு வீக்கத்தால், அந்த உணர்ச்சியைக் கொண்டு நீங்கள் மனிதர் என்பதைக் காட்டிக் கொண்டீர்கள். நான் ஏமாந்தேன். அருந்ததி ஏமாற்றத்திலிருந்து அடிக்கடி நீங்கள் கட்டி அமைத்த ஏமாற்றுக் கோட்டைக்குள்ளேயே ஒரு வருஷம் வாழ்ந்து விட்டேன். இப்பொழுது நான் விழித்துக் கொண்டு விட்டேன். நீங்கள் எப்பொழுதுமே மனிதரல்ல; சில சமயங்களில் மனித வேஷம் போடும் மாயாவாதி. இனி என்னை ஏமாற்ற முடியாது. இன்ஸ்பெக்டர் உடுப்பைக் கழற்றுங்கள். என் கணவராகுங்கள். பட்டது போதும் ; இனியும் என்

"மூத்த பையன் அந்தப் பெண்ணைத் தான் கல்யாணம் செய்துகொள்வேன் என்று ஒத்தைக் காலில் நின்னுண்டு இருக்கானே!"



"ஏன் இன்னொரு கால் என்ன ஆச்சு?"
"அதான் எக்மோர் பஸ்ஸுக்காகப் பஸ் ஸ்டாண்டிலும் நின்னு, நின்னு உபயோக மில்லாமல் போய்விட்டதே!"

உள்ளத்தை வருத்தாதீர்கள்." "ஒரு வருஷமாக நிமிஷந்தோறும் நினைத்துக் கனிந்த சாம்பல் தோலைப் போர்த்திய மனத்தழல் குபீரென்று ஜுவாலையைக் கிளப்பியதும், தவிப்பில் துடித்தார் பரஞ்சோதி.

"இரங்கவில்லையா இன்னும் உங்களுடைய மனம்?" என்றாள் அவள்.

ஊமையன் கனவைப்போல நெஞ்சு அவிந்து விட்ட நிலை பரஞ்சோதிக்கு. பாய்ந்துவரும் பிரளயம் போலச் சீறிச் சீறிக்கொண்டிருக்கும் சொர்ணத்தின் தோற்றம். 'கணவன்' என்று காரணம் காட்டி உதறிவிட்டுப் போக அவருக்கு அணையாயிற்று. ஓநாயைக் கண்ட மயில் பயந்து நடுங்கி வலியச் சென்று தன் கண்களை அதற்குத் தருவதைப் போல், சொர்ணத்தின் நீண்ட தவிப்புக்குத் தன் நிலையைச் சாதகமாகத் தந்தபோது, பிரிந்து நழுவப் பரஞ்சோதிக்கு வேறு வழியொன்றும் இருக்கவில்லை.

அவசியத்துக்கு ஆளுகை தந்து நெஞ்சக் குழியைத் தேய்த்துக் கொண்டார். அந்தக் கூட்டில் எண்ணம் சிலிர்த்தது. கொட்டும் மழையில் கூட்டுக்குள் மறுகிக் கீச்சிடும் பறவையைப் போல் மெலிந்த குரலில் கூறினார்: "சொர்ணம்! பெரிய திருட்டு நடந்திருக்கிறது. பறிகொடுத்தவரே போனில் அபயம் கேட்டு அலறினார். ஸ்டேஷனிலிருந்து ஜவான் வந்து போனதும் உனக்குத் தெரியும். ஸ்தலத்துக்குச் சென்று உடன் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்."

"அபயம் கேட்டு உங்கள் மனைவி அலறுகிறாள். அது உங்கள் காதில் விழவில்லையா?"

"நீ என்னைப் பறிப்பதற்காக அபயம் கேட்கிறாய், அவர் பறிகொடுத்ததற்காக அபயம் கேட்கிறார். இரண்டின் நோக்கத்திலும் வித்தியாசம் உண்டு. அது முக்கியம்."

"முக்கியம் என்றால் உங்கள் சப்-இன்ஸ்பெக்டர் சங்கரன் போகட்டுமே! அவர் புதிதாகக் கல்யாணம் பண்ணிக் கொண்டவர். உங்களைப் போல அவர் ஏமாளியல்ல. உத்தியோகத்துக்காக மனைவிளக்கை அணைக்கும் குருடர் அல்ல அவர். அவரிடம் வாழவந்தவள் கொடுத்து வைத்தவள்......" பெண்மைக்குத் திரும்பிய சொர்ணத்தால் இப்பொழுது சீற முடியவில்லை. வெடித்து வந்த அழுகைச் சுமையை இறக்கி வைக்கக் கன்னங்கள் இரண்டையும் தரத்தான் முடிந்தது.

கொம்பு சுற்றி ஆடும் காற்றுக்கு உற்சாகம் இருக்கலாம். ஆனால் கொம்புக்கு மிஞ்சுவது வேதனைதானே? அதைப் போல் தான் வெளிப்படுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததற்காக அழுகை வேண்டுமானால் குதிக்கலாம். ஆனால் அது குதிப்பதற்கு இலக்கான மனத்துக்குக் கிடைப்பது ரணம்தானே? அந்த ரணம் உணர்வில் பாய்ந்து உடலில் விரவ, பக்கலில் இருந்த படுக்கையில் வதங்கிச் சாய்ந்தாள் சொர்ணம்.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பரஞ்சோதி தாள் திறந்து வெளியே போயிருக்கலாம். அல்லது துவண்டு சாய்ந்த இளங்கொடிக்குப் பற்றுக் கொம்பாகி விட்டிருக்கலாம். இரண்டையும் செய்யவில்லை. இரண்டுக்கும் அப்பால் அவர் மனம் முரண்டிக் கொண்டிருந்தது.

சொர்ணம் புதைந்து கிடந்த தலையைத் தூக்கினாள். ஆழக் கடல் குளிக்க அச்சமின்றி வரும் புயல் போல எழுந்தாள். கணவனுக்கு முன்னால் நின்றாள். "நான் உங்களைப் போக விடமாட்டேன். வந்து போவதற்கல்ல வீடு: தங்கிப் பிறரைத் தாங்குவதற்கு. சொல்லுக்கு இங்கே சக்தியில்லை. எனவே உயிரின் சக்திகளையெல்லாம் திரட்டிக் கொண்டு வந்து நிற்கிறேன். இனி நீங்கள் போக முடியாது." இரண்டு கைகளையும் விரித்த இறக்கைகளாக எதிர் ஓடவிட்டாள்.

சொர்ணம் மன அமைப்பைத் தாண்டிப் போய் வலிமை குறித்துப் பேசினாளல்லவா? இது பரஞ்சோதியின் தவிப்பைச் சுலுவாக்கிற்று. எதிர் நீட்டிக் கிடந்த அவள் கரங்களை விலக்கிக் கொண்டு கதவண்டை சென்றார்.

ஆற்றாமையில் நழுவிய பெண்மை கூச்ச விட்டது: "நீங்கள் அரக்கர். உங்களுக்கு நான் மனைவியானதற்காக மிகவும் வெட்கப்படுகிறேன்."

பரஞ்சோதி சிரித்தார். சொன்னார்: "சொர்ணம்! நான் உன்னை மனைவியாகப் பெற்றதற்குப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். ஒரு வருஷமாக என்னில் நிலவாக இருந்த நீ, இன்று ஒரு நாள் இருளாக மாறுவதற்காக நான் நன்றி மறந்தவனாகப் போவதில்லை!"

தாழ் கிரீச்சிட்டது.

பரஞ்சோதி நின்ற இடத்தில் இப்பொழுது சூன்யம் நிலவியது.

குப்பென்று இருள் கவிந்து சொர்ணத்தைக் கரைத்த மாதிரி இருந்தது. ஜன்னலுக்கு வெளியே தெரிந்த வானத்தில் சுடர்விட்ட நட்சத்திரம், அவளுக்கும் வாழ்க்கைக்கும் உள்ள தூரத்தைக் கண்டு எள்ளி நகையாடுவது போல இருந்தது. சுவர்க் கடிகாரம் காலத்தைச் சொல்லிப் பதினொரு தடவை ஓலம் இட்டது.

'காலம் ஏன் வளர்கிறது? வளராத காலமாகி விட்டிருந்தால் சிற்றாடை புனைந்த சின்னஞ்சிறு சிட்டாகவே இருந்திருக்கலாமே! பருவத்தை வளர்த்துப் பகைமையான கற்பனைகளை மனத்துக்குத் தந்து, 'வாழ்க்கை' என்ற



ரேடியோ, சங்கீதக் கருவிகள், மற்றும் சுக வாழ்க்கைக்கான நவீன மின்சார சாதனங்களை விற்பனை செய்துவரும் முகம்மது இப்ராகிம்கம்பெனியின் ஜெனரல் மானேஜர் திரு நடராஜன் அவர்கள், வியாபாரக் கலை நுணுக்கங்களைத் தெரிந்து கொள்வதற்காக இங்கிலாந்து, ஐரோப்பா முதலிய நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்யச் சென்றிருக்கிறார். திரு நடராஜன் தாம் மேற்கொண்டிருக்கும் சுற்றுப்பிரயாணத்தை வெற்றியுடன் முடித்துக்கொண்டு, நமது நாட்டின் வியாபாரக்கலையின் அபிவிருத்திக்குப் பாடுபடுவார் என்று எதிர்பார்க்கிறோம்.

பெயராலே இணைந்து போகாத முரட்டுக்கணவனைக் கொடுத்து வாட்டி எடுக்கவா காலம் வளர்ந்தது?'

காலத்தின் மேல் மோதிக் கொண்டதும் பளிச்சென்று மின்னியது ஒரு ஞாபகம். ஓடினாள். அலமாரியைத் திறந்தாள். காலம் நடந்து போன ஒரு வருஷப் பாதையின் அடையாளம் டைரியின் ஏடுகளிலே பதிந்திருந்தது.

டைரியைப் புரட்டினாள். முதல்பக்கத்தில் "அன்பளிப்பு' என்ற தலைப்பின் கீழே பரஞ்சோதி எழுதியிருந்தார்: ''இன்று நாம் திருமணம் செய்து கொண்டோம். இனி நாம் இருவர் இல்லை; ஒருவர். ஒருவர் மனத்தால் மற்றொருவர் சிந்தித்து வாழ்வோம். உயிரும் காலமும் இணைந்தவை. அந்த இணைப்பின் திருவிழாவில் காலம் சொல்லும் இந்த டைரி சொர்ணத்துக்கு அன்பளிப்பு.''

'இனிமை தடவிய விஷச் சொற்கள். இப்படி எல்லாம் உள்ளத்தை ஒரேயடியாக வாரிக் கொட்டியவர் மணமான இரவு எப்படி நடந்து கொண்டார்?'

விண்டதொரு விம்மலுடன் இரண்டாம் பக்கத்தைப் புரட்டினாள். நீர் நனைந்த விழிகளில் எண்ணங்களைச் சேகரித்த கூடையாகி விட்டிருந்த டைரியின் இதழ் மிதந்தது. ''இரவு இரண்டு மணி. அன்று பகல் முழுதும் திருமணச் சடங்குகளைப் பாக்கி வைக்காமல் செய்த களைப்பு உடலுக்கு இருந்தது. ஆனாலும் உள்ளத்துக்குக் களைப்பு இல்லை. கண் நிறைந்தவர் கைப்பிடித்த பெருமையும், அவரோடு மனம் நெகிழ்ந்து பேசப் போகிறோம் என்ற கிளர்ச்சியும் என் மனத்தைப் பரபரக்க வைத்தன. நான் மௌனத்துடன் சோபன அறைக்குள் தள்ளிவிடப்பட்டேன்.

''பேசலாம் என்று நினைத்தேன் அல்லவா? தள்ளிவிடப்பட்டவள் அவர்மேல் தடுமாறி விழுந்தேன். என்னைப் பிடித்துக் கொண்டார். அந்தப் பிடிப்பில் இன்னும் கொஞ்சம் இறுகத்தான் விரும்பினேனே தவிர பேசிப் பெருமை கொள்ள வாய் இழந்து நின்றேன். பிடித்தவர் பிடியை நழுவவிடவில்லை. பின் பக்க மொட்டை மாடிக்கு அழைத்துச் சென்றார். வெண்ணிலவைக் காட்டி ஏதேதோ சொன்னார். நான் நிலவிலே நிலவைக் காணவில்லை. அவரைக் கண்டேன். பார்த்த இடங்களிலெல்லாம் பாரதிக்குக் கண்ண பரமாத்மா தோன்றியதைப் போல அவர் காட்டிய இடங்களிலெல்லாம் அவரைத் தவிர நான் வேறொன்றையும் கண்டேன் இல்லை!''

''கதவு ஓசையிட்டது. எங்கள் சொர்க்கக் கதவை உடைப்பது யார்? என்னைத் தொட்டவர் விட்டார். விரைந்தார். கதவைத் திறந்து கொண்டு வெளியே போனார். யாருடனோ பேசினார். பின்னர் கதவைத் தாழிடாமல் மூடிவிட்டு என்னிடம் வந்தார். இப்பொழுது அவர் முகத்தில் பழைய சிரிப்பு ஒளிவிடவில்லை. குன்றிய முகத்தில் சிரிப்பு அதரங்களுக்குள் ஒளிந்து கொண்டது.

'''சொர்ணம்...'

'''ஊம்!'

'''என் அருமை சொர்ணம்! பிரிவு உபசாரம் பெற வந்திருக்கிறேன் நான். கொலையொன்று நடந்து விட்டதாம். சப் இன்ஸ்பெக்டர் லீவில் போயிருக்கிறார். நான் அவசியம் போக வேண்டும். நீ போலீஸ்காரன் மனைவி அல்லவா? இந்தச் சங்கடம் உன் வாழ்க்கையில் அடிக்கடி குறுக்கிடும். அதைத் தாங்கிக்கொள்ள முதல் அநுபவம் உனக்கு இத்தனை சீக்கிரம் வரும் என்று நான் நினைக்கவில்லை. போய் வருகிறேன்' என்று என் கன்னத்தைப் பிடித்தார்.

''நான் என்ன சொல்வேன்? கண்ணீரில் விடை கொடுத்தேன்.

''நான் போலீஸ்காரர் மனைவி. அதனால்தானோ மற்றப் பெண்களுக்குக் கிடைக்கும் இன்பம் எனக்குத் தொலை தூரமாகிவிட்டது? 'பிரிவு உபசாரம்' என்று அமங்கலமாக ஏன் சொன்னார்? 'உபசாரம்' என்றால் பிரிவு நிரந்தரமாகி விடுமோ?

''பாலும் பழமும் மூலையில் கிடந்தன— என்னைப் போல.''

சொர்ணம் கண்களைத் துடைத்துக் கொண்டாள். முப்பது தினங்கள் டைரியில் பாழாகிக் கிடந்தன. முப்பத்தோராவது நாள்:

''சோபன அறையிலிருந்தபொழுது என்னிடமிருந்து கணவரைப் பிரித்த கொலைகாரன் பம்பாய்க்கு ஓடிவிட்டானாம். மணமான மறுநாளே அவனைத் தொடர்ந்து போனவர்தான். இன்னும் திரும்பவில்லை. வீட்டில் என்னைத் தவிர வேறு யாருமில்லை. என் குறையைச் சொல்லி யாரிடம் அழுவேன்? எனக்குத் தனிமை பயங்கரமாக இருந்தால் யாரையாவது துணைக்கு வைத்துக் கொள்ளும்படி எழுதியிருக்கிறார். யாராவது பயத்தைப் போக்கலாம். ஆனால் துணைக்கு அவரல்லவா வேண்



# உயர்தரத்திற்கும் சிறப்பான த்வனிக்கும் இணையற்ற இரு

## அற்புதமான **நேஷனல்–எக்கோ** ரேடியோ மாடல்கள்!




இதோ செவிக்கினிய விருந்தளிக்கும் இருநேர்த்தியான நேஷனல்–எக்கோ ரேடியோ மாடல்கள். உயர்தரம் வாய்ந்த இந்த ரேடியோக்களில் ஒலிபரப்புகளை அற்புதமாகக் கேட்கலாம்! இவைகள் 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டவை. மற்றும் ஒரு வருஷத்திற்கு உத்திரவாதம் கொண்டவை. உங்களுக்கு அருகாமையிலுள்ள நேஷனல்–எக்கோ ரேடியோ வியாபாரியிடம் இவைகளை இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்!



மாடல் 717: தங்கவர்ண வேலைப்பாட்டுடன்கூடிய, மரூன் நிற பிளாஸ்டிக் காபினெட். மாடல் U–717: 5 வால்வுகள்; 3 பாண்டுகள்; 230 வோல்ட் ஏஸி/டிஸி செட். மாடல் B–717: 4 வால்வுகள்; 3 பாண்டுகள்; டிரை பாட்டரிசெட். ரூ. 250/–

விலைகள் நெட்.
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 187: 6 வால்வுகள், 8 பாண்டுகள், அழகிய மர காபினெட். மாடல் A-187 ஏஸிசெட்: மாடல் U–187 ஏஸி/டிஸி செட். ரூ. 475/-

நேஷனல்–எக்கோ
ரேடியோக்கள் சிறந்தவை —
அவைகள்




செய்யப்பட்டவை

GRA. 6398




**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸெஸ் பிரைவேட் லிமிடெட்**
ஆபேரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13
1/18 மௌண்ட் ரோடு, மதராஸ் • 36/79 ஸில்வர் ஜூபிலி பார்க்
ரோடு, பங்களூர் ஜோக்கியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி

டும்? இதைப் புரிந்துகொள்ளும் மனம் அவருக்கு இல்லையா?''

மேலும் ஆறு மாதங்கள் காலியாக இருந்தன. பின்பு ஒருபொழுது:

''ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாளிரவு வீட்டில் தங்கினார். எனக்கு ஒரே கிளுகிளுப்பு. அவரது அன்புக்கு ஏங்கி நின்றேன். அவர் என்னை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. கல்யாண இரவில் இனிக்க இனிக்கப் பேசியவருக்கு இப்பொழுது வாயில் என்ன அடைத்துக் கொண்டிருக்கிறது? முகம் ஏன் அப்படிக் கடுகடுப்புடன் இருக்கிறது? 'ஏன்?' என்று கேட்கத் துடித்தேன். அப்பொழுதுதானா டி. எஸ். பி. திடீர் முகாம் செய்திருக்கிறார் என்று ஜவான் சேதி கொண்டுவர வேண்டும்? விருட்டென்று கிளம்பி விட்டார். என் கண்கள் நீரில் குளித்தன. விடியுமட்டும் நான் காத்திருந்து கண்டது? வீங்கிச் சிவந்த என் கன்னங்களைத்தான். அழுது சிவக்கும் கன்னங்கள் இன்ப வேதனையில் சிவக்கும் நாள் இனி என்று வரும்?''

மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு தேதியில் அழுதது டைரி: ''இப்பொழுதெல்லாம் என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் கூட முகாம் போய் விடுகிறார். அத்தி பூத்தது போல் எப்பொழுதோ வீட்டுக்கு வரும்போது ஒரேயொரு புன்சிரிப்புக்காக ஏங்கிப் பார்க்கிறேன் அவர் முகத்தை. அங்கே என் இதயத்தை அகழ்ந்து எடுக்கும் உணர்ச்சி இருப்பதில்லை. அந்த அழகான உடலில் ஒரு பெண்ணின் தவிப்பைப் புரிந்துகொள்ளும் இதயம் ஏன் இல்லை? இனி 'இல்லை' என்று விட்டு ஒதுக்க முடியாது. சந்தர்ப்பம் வரட்டும்; சாடி விடுகிறேன்.

இரண்டு மாதங்கள் டைரியில் புரண்டன. குறிப்புக்கு நீர் பாய்ந்த நாள் அது:

''மறுநாள் இரவு நாள் பார்த்திருக்கிறார் அவர்! ஏதோ கருணை வைத்துக் கனிவு சுரக்க எழுதியிருந்தார். என்ன வந்தாலும் இரவில் வீட்டை விட்டு அசைய மாட்டாராம். அது எத்தனை நிஜம் என்பதை நானேதான் பார்க்க வேண்டும்! வழக்கம் போல என் பெண்மையை அவர் அவமதித்தால் நான் பேயாகி விடுவேன்.''

டைரியை மூடி வைத்தான், நினைவில் சுழன்றது மனம்.

மறுநாள். மறுநாளே வந்தது. எழுதியதைப் போலவே இரவில் வீட்டுக்குத் திரும்பினார். நடந்தது என்ன? எழுதிய மை காயு முன்னே எங்கோ நடந்த கொள்ளையை நாடி ஓடிவிட்டார். பேயாகிக் கண்டது என்ன? கண்ணீர், கண்ணீர். கல்யாணத்தோடு தொடர்ந்து வரும் கண்ணீர்.

கண்ணீரில் உருவெடுத்தது ஒரு பழைய சம்பவம்: சொர்ணத்துக்கு டைரி ஒன்றைப் பரிசளித்தாரல்லவா பரஞ்சோதி? அவரைப் போலவே அவருக்கும் இவள் ஒரு டைரியைத் தந்தாள். தந்தாள் என்பதை விடத் தரவைக் கப்பட்டாள் என்பதுதான் பொருந்தும். ஏனென்றால் அந்த டைரியை அவனிடம் கொடுத்து. 'ஏதாவது எழுதிக் கொடு' என்று கேட்டுக் கொண்டவர் பரஞ்சோதிதான்.



''என்னங்க! தோளில் நிறையச் சவுக்கங்களைப் போட்டுக் கொண்டு வரி வசூலிக்கக் கிளம்பி விட்டீங்க?''

''என்ன பண்றதுங்க! வரி கொடுக்க முடியாமல் பிழியப் பிழிய அழுவாங்க. அவங்களுக்குக் கண் துடைக்கத்தான்...''

டைரியில் அவன் எழுதிக் கொடுத்த வரிகள் நினைவில் ஆடின. அவை:

''எனக்கு எழுதத் தெரியாது. ஆகவே என் சொற்களை நீங்கள் அப்படியே கேட்க, என்னுடைய இதயத்தைத் தங்களுக்குக் கொடுத்து விட்டேன்.''

''இதயத்தை எடுத்துக் கொண்டாரா வஞ்சகர்? இல்லையே! குழும் தனக்குள் என் இதயத்தைப் பிணைத்து விட்டு, 'உத்தியோகம், உத்தியோகம்' என்று ஓடி விடுகிறாரே!''

''பேசக்கூட அவர் இல்லாமல் என் உள்ளத்தை டைரிக்குள் கொட்டி வைத்திருக்கிறேனே, அதைப்போல அவர் உள்ளத்தை நான் கொடுத்திருக்கும் டைரிக்குள் ஒளித்து வைத்திருப்பாரோ? இல்லாத இதயம் வெறும் காகிதக் குவியலுக்குள்ளா இருக்கப் போகிறது?'' விம்மித் தளர்ந்தது அவளுடைய நெஞ்சம்.

'அவர் டைரியைப் பார்த்தால் வாழ்வு தெரிந்துவிட்டுப் போகிறது.'

முக்கியப் பொருள்களையெல்லாம் பரஞ்சோதி தனி அலமாரியில் வைப்பார். அவள் அதைத் திறப்பதில்லை. மற்றவர் பொருளை ஏறிட்டுப் பார்க்கக் கூடாது என்பது அவளுக்குப் பள்ளியில் கிடைத்த உபதேசம்.

'அவர் மற்ற ஒருவரா?'

எண்ணத்தைக் கடித்துக் கொண்டாள். அலமாரியைத் திறந்தாள். முன்னால் தலை நீட்டியது டைரி. பரபரப்புடன் எடுத்தாள். முதல் பக்கத்தைப் புரட்டினாள். சொர்ணத்தின் அன்பளிப்பை அடுத்து அவர் எழுதியிருந்தார்:

''சொர்ணத்தின் இதயத்தை எடுத்துக் கொண்டு விட்டேன். அதன் மிருதுவான எண்ண இழையைச் சிக்கலற்ற முறையிலே கையாள இறைவன் எனக்குச் சக்தி அளிப்பாராக—பரஞ்சோதி.''

அவள் துணுக்குற்றாள். 'அவருக்கும் இதயம் இருக்கிறதா?'

அடுத்த பக்கம்: ''முதல் இரவு. என் சொர்ணம் என்னிடம் எத்தனையோ எதிர் பார்த்திருப்பாள். பாழும் கொலை அன்று தானா நடக்க வேண்டும்? நான் கடமையில்



அதிகாரி: என்ன ஐயா மேலும் கீழுமா இப்படிப் பாலத்தைக் கட்டி அநியாயம் பண்ணி விட்டீரே......?

இன்ஜினியர்: ஏன் அலறுகிறீர்கள்? என்ன குடி முழுகிப் போச்சு? அந்த இடத்திலே ஒரு படியைக் கட்டி விட்டால் போகிறது!

கண்டிப்பானவன். என் தனிப்பட்ட இன்ப துன்பங்களுக்காக உலகத்துக்கு நான் செய்ய வேண்டிய சேவகத்தைத் தவிர்க்க முடியுமா? என் உணர்ச்சிகளோடு கலந்துவிட்ட சொர்ணத்துக்கும் அதே இன்ப துன்பங்கள் உண்டு என்பதை நான் அறியாதவனல்ல. அதற்காக நான் ஒரு சாதாரண மனிதனாகலாமா? சோபன அறையில் நான் விடைபெற்றுக் கொண்டபோது அவள் கண் கலங்கி விட்டாள். நான் சிரித்தேன். அது மேலுக்குத் தான். நானும் அழுதது அவளுக்குத் தெரியாது. தெரியக் கூடாது. அன்றிரவு பகங் கொடிக்குப் பக்கத்தில் இருக்க வேண்டிய நான் பாய்ந்த ரத்தத்தை மோப்பம் பிடித்துக் கொண்டிருந்தேன்.''

இடுக்கிட்டாள் சொர்ணம்: 'என்னைப் போல அவரும் துடித்தாரா?'

செப்டம்பர் ஏழாம் தேதி: ''யாருக்கு நான் தீவினை செய்தேன்? யார் வாழ்க்கையைப் பிரித்து வைத்தேன்? சொல்லி வைத்தாற்போல ஆறு மாதங்கள் வெளியூர் முகாம். என் சொர்ணம் எப்படித் துடிப்பாளோ? அவள் துடிப்பில் நானும் துடித்துச் சாகிறேன்.''

நீண்ட கேள்விக்குறி சொர்ணத்தின் மனத்தில்: 'எனக்காகப் புழுங்கினாரா?'

நவம்பர் பதினைந்து: ''மறுநாள் இரவு வீட்டில் என்று சொர்ணத்துக்கு எழுதி விட்டேன். டி. எஸ். பி. அதே இரவில் முகாமிடப் போவதாகப் பின்கூட்டியா செய்தி வர வேண்டும்? ஆனால் வீட்டுக்குத் திரும்பிய போது அதைச் சொர்ணத்திடம் காட்டிக் கொள்ளவில்லை. என் வேதனையையும் பலவீனத்தையும் வெளிப்படுத்துவதன் மூலம் அவள் அதிகமாகச் சோர்ந்து விடுவாளே! ஆகவே முகாம்களுக்கு முழுக்குப் போட்டுத் தொலைக்கும் வரை அவளிடம் நடிப்பதாகத் தீர்மானித்து விட்டேன். கொஞ்சம் முறைப்பாக நடந்து கொள்ள வேண்டும். வேலையில் அதிக நாட்டம் உள்ளவனாக நடைமுறைகளை மாற்றிக் கொள்ள வேண்டும். அதனால் எல்லாம் சொர்ணம் என் அன்பில் களங்கம் காண்பாளே, கண்ணீர் விடுவாளே! சில நாட்கள்தானே? அப்புறம் சொர்ணத்தின் கண்ணீரைத் துடைப்பதைத் தவிர எனக்கு வேலையிருக்கப் போவதில்லை. என் நாடகத்தின் முதல் காட்சியை அன்றிரவே நடத்திக் காண்பித்தேன். சொர்ணம் அன்புடன் வந்து பேசியபோது நான் முகத்தைத் திருப்பிக்கொண்டேன். இதெல்லாம் என்ன? என் சொர்ணத் தங்கத்தை என் இதயத்தில் அணிந்து மகிழும் திருநாள் என்று?''

சொர்ணத்தின் கையில் இருந்த டைரி நழுவிக் கீழே விழுந்தது. 'ஓ'வென்று அலறினாள். கால்கள் மறுகின; கண்கள் சுழன்றன. பிரக்ஞை தவறிப் போய், உடல் கீழே விழவிருந்த சமயத்தில் தாங்கிப் பிடித்துக் கொண்டன இரு கரங்கள்.

பிடிபட்டவள் ஏறிட்டுப் பார்த்தாள். பரஞ்சோதி! ''இந்தப் பெண் பேயை மன்னிப்பீர்களா?'' என்று புலம்பினாள்.

கண்ணீரைத் துடைத்தது அவர் கை. கனிவை உதிர்த்தது அவர் வாய்: ''சொர்ணம், நீ என்ன தவறு செய்தாய், எனக்குத் தெரியாமல்?''

''நான் பெண்மையிலிருந்து நழுவிப் பேயாக உங்களைப் பிடுங்கி விட்டேன். உன்னதமான உள்ளத்தை வைத்திருக்கும் உயர்ந்த மனிதரை நாக் கூசாமல் ஏதேதோ சொல்லிப் புண்படுத்தி விட்டேன்.'' அழுகையில் உயர்ந்தது அவள் பெண்மை.

''சொர்ணம்! தவறு செய்தவன் நான். என் நடிப்பின் மூலம் உன் இதயத்தைச் சிக்கல் படுத்தி விட்டேன். நான் எங்கிருந்தாலும் என்னில் நீ இருந்துகொண்டு தானிருக்கிறாய், சொர்ணம்!'' உணர்ச்சியில் உயர்ந்தது ஆண்மை.

''என்னில் இருந்த உங்களைப் புரிந்து கொள்ளத் தெரியவில்லையே எனக்கு? என் பெண்மையை மீண்டும் பெற்றவுடன்தான் நான் தெரிந்து கொண்டேன், நாம் பிரிவின் மூலம் பிரிவதில்லை என்பதை!''

பரஞ்சோதியின் கண்கள் கசிந்தன. ''சொர்ணம்! நாம் ஒருவரையொருவர் புரிந்து கொண்ட இந்த வேளையிலும் சோதனையே எதிர்நோக்குகிறது. அடுத்த சர்க்கிளில் பெரும் கலவரம் ஒன்று ஏற்பட்டிருக்கிறதாம். என் உதவியை அவர்கள் உடனடியாக நாடியிருக்கிறார்கள்.''

சொர்ணம் சிரித்தாள். ''உடனே செல்லுங்கள். ஆபத்திலிருப்பவர்களுக்கு விரைந்து ஆதரவு கொடுங்கள். எனக்கு இப்பொழுது பிரிவின் வேதனை இல்லை. ஏனென்றால் நாம் பிரியவில்லை.''

ஒருவர் மனத்தால் மற்றொருவர் சிந்திக்கத் தொடங்கிய அந்த வேளையில் வேதனை இல்லை; அதனால் பிரிவும் இல்லை.

பரஞ்சோதி நடந்தார். ஆனால் சொர்ணத்தின் மனத்தில் இருந்தார்.

(ஸ்தாபிதம்  1907)



# இந்தியன் பாங்க் லிமிடெட்

இதன் ஸ்தாபனத்தின் சேவையைப் பெறாத எந்த முக்கிய நகரமும் தென்னிந்தியாவில் இருக்க முடியாது!

**ரிசர்வ் & இதர நிதிகள் ரூ. 88 லட்சங்கள் — டெபாசிட் ரூ. 35 கோடிக்குமேல்**

*சென்னை நகரமும் அதன் சுற்றுப்புறங்களிலும் 22 லோகல் ஆபீஸ்களும் பம்பாய், புது டில்லி, கல்கத்தா, கொழும்பு, சிங்கப்பூர், பினாங்கு, கோலாலம்பூர், மலாக்கா முதலிய இடங்களில் கிளை ஆபீஸ்களும் உள்ளன*

சகலவிதமான பாங்கிங் அலுவல்களும் அயல்நாட்டு ஏற்றுமதி சம்பந்தமான எல்லா விஷயங்களும் ஏற்று நடத்தப்படுகிறது

London Agents: WESTMINSTER BANK LTD.; New York Agents: FIRST NATIONAL CITY BANK OF NEW YORK

டி. பி. பார்த்தசாரதி, காரியதரிசி

---

போன்: 55074 *தந்தி:* "RAJWASTE"

# கே. ஏ. ராஜா

வேஸ்ட் பேப்பர் வியாபாரி

காரியாலயம்: 64, ஆச்சாரப்பன் தெரு, சென்னை - 1
கிளை: 8, வரதா முத்தியப்பன் தெரு, சென்னை - 1
பிரிக்கும்இடம்: 16, புட்டிசாஹிப் தெரு, சென்னை - 1

*கீழ்க்கண்ட ஸ்தாபனத்திற்கு மூலப்பொருள் சப்ளை செய்பவர்கள்:*

மெஸர்ஸ். ரோடாஸ் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

டால்மியாநகர், பீஹார்

உபயோகமற்ற காகிதங்களை விற்பனை செய்ய விரும்பும் காரியாலயத்தினரும், மற்றவர்களும் எங்களுடன் தொடர்பு கொள்ளலாம்

எமது நியாயமான விலையைக் கருதி எங்களிடம் தொடர்பு கொள்ளுங்கள்

இந்தியாவின் முதல் பரிசுத்த கரணி, நம் நாட்டின் பழக்க வழக்கமான சுத்தம் செய்யும் முறைகளைப் புரட்சிகரமாக மாற்ற




டெட் செயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு பரிசுத்த கரணி. சோபபவுடர் அல்ல. சோப்பை ஆதார மாகக் கொண்டும் தயாரிக்கப் பட்டதல்ல. சோப்பைக் காட்டிலும் வெகு சீக்கிரத்தில் சுத்தம் செய்கிறது. அழுக்கு களையும், எண்ணெய்ப் பசை களையும் துப்புரவாக போக்கு கிறது. ஆயினும் டெட்டில் காரமான ரசாயனப் பொருள் கள் இல்லை. கைகளில் பட்டால் இதமாக இருக்கிறது. அது உயர்தர சலவை சோப்புகளைக் காட்டிலும், பரிசுத்தமான உடை களுக்கும் அவைகளின் நீடித்த உழைப்புக்கும் உத்திரவாதம் அளிக்கிறது.

டெட் பரிசுத்த கரணி யாதலால் தரை, பாத்திரங்கள், சுவர்கள் முதலிய எல்லா வற்றையும் சுத்தம் செய்கிறது. அது தரையையும், துணி மணிகளையும் வித்தியாசமில்லா மல் ஒரே மாதிரியாக சிறந்த முறையில் சுத்தம் செய்கிறது.






தி ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

shilpi s-o-m 513 a tam




காரியம் முடிந்து விட்ட கணக்குடன் கடமை தவறாத சூரியன் பொன் கிரணங்களை உதிர்த்துவிட்டுமறைந்து கொண்டிருந்தான். ஆடி ஓடி அலுத்துச் சலித்துப் போன மாவிடர்அமைதி காண இல்லம் நோக்கிச் செல்லும் அந்திப் பொழுது. காணாத சத்து வத்தைக் கண்டு பிடித்து விட்டது போல் எக்காளத்துடன் கூவிக் கும் மாளமிட்டுக் கூடு ஏகின பறவைகள்.

தேவநாதன் அங் கொன்றும் இங்கொன்று மாய் அலைந்து கொண் டிருந்த ஆடுகளை ஒன்று கூட்டினான். அவற்றை ஓட்டிக் கொண்டு கிரா மத்தை நோக்கிப் புறப் பட்டான். பரம ரகசியம் ஏதோ பேசுவது போல் ஒன்றை யொன்று போட்டி போட்டுக் கொண்டு உரசியபடி சென்றன ஆடுகள். அவற்றின் கழுத்து மணி கள் கீதம் இசைத்தன. தூரத்திலிருந்து மாதா கோவிலின்பிரும்மாண்ட மான மணி யொலி தவழ்ந்து வந்து தாளம் இட்டது! மனக் கவலை யற்று நடந்து கொண் டிருந்த ஆடுகளைப் பார்த் தான் தேவநாதன். யோவான் சொன்ன மொழிகள் சிந்தையில் பளிச்சிட்டன. "என் ஆடுகள் என் சத்தத்துக்குச் செவி கொடுக்கின்றன. நான் அவற்றை அறிந் திருக்கிறேன். அவை எனக்குப் பின் செல்லு கின்றன. நான் அவைகளுக்கு நித்ய ஜீவன் கொடுக்கிறேன். அவை ஒருகாலும் கெட்டுப் போவதில்லை. ஒருவனும் அவைகளை என் கையிலிருந்து பறித்துக்கொள்வதும் இல்லை."

இதை நினைத்தபோது உதட்டைக் கீறி நின்றது புன்னகை. "கர்த்தரே! நானும் உங்க ளைப் பின்தொடர விரும்புகிறேன். வழிகாட் டுங்கள்" என்று இறைஞ்சியது அவன் மனம். ஏக வழிகாட்டுகின்ற பெருமையிலே சென்று கொண்டிருந்த ஆடுகளைக் கண்டான். துள்ளித் திரிந்த குட்டியொன்றை எடுத்து அணைத்துக் கொண்டான். பொன்னொளி அதன் மீது பட்டு வண்ண ஜாலம் புரிந்தது. "என் சொத்து இது" என மறுபடியும் அணைத்தான்.

ஆமாம்! அந்தப் பதினைந்து ஆடுகளும், இறந்துவிட்ட அன்னை கழுத்திலே அணிந்து விட்ட வெள்ளிச் சிலுவையும், தன் இல்லற வாழ்க்கைக்குச் சாட்சியம் கூறுகின்ற மகன் அருள்தாஸும் தான் அவனுடைய சொத்து. அன்பு மனைவி மேரி இரண்டாம் பிரசவத் துக்குப் பிறந்தகம் போயிருக்கிறாள்.

"அப்பா!" என்று அருள்தாஸ் அழைத் தான். அவன் கையில் அவனுடைய செல்வம் ஆட்டுக்குட்டி இருந்தது.

"ஏன்டா..."

"நாம் தினமும் ஆடு மேய்க்கப் போகிறோமே, நாமும் கர்த்தரா? கர்த் தருக்குத்தானே ஆட்டுக் குடியானவர் என்று பெயர்?"

"இல்லே. அவர் ஆட்டை மட்டும் அடக்கு பவர் இல்லே. அகி லத்தையே அன் பினால் அடக்கு பவர்......"

தேவநாதன் சொன்னது தனக் குப்புரியா விட்டா லும் தலையை ஆட்டி வைத்தான் அருள்தாஸ்.

கிராமம் நெருங்கி விட்டது. பொழுதும் இருட்டிவிட்டது. மாதா கோவிலுக்குள் நுழைந் தான் தேவநாதன். பகட் டினாலும், ஆணவத்தினா லும், அகங்காரம் அடைந்து அலைந்த மனி தர், அந்த மௌனச் சூழ்நிலையிலே, உருகி எரி யும் மெழுகின் திவ்விய ஒளியிலே, சிறு துரும் பாகி, சலனமற்ற மன முடையவராகிக் கர்த்தரின் முன்னே மண்டி யிட்டு வணங்கிக் கொண்டிருந்தனர். தேவ நாதனும் அமர்ந்துமண்டியிட்டு வணங்கினான்.

பிறகு ஆடுகளை ஓட்டிக் கொண்டு குடிசை நோக்கி நடந்தான். சுருண்டு கிடந்த கேசத் தில் செம்மண் புழுதி படர, கண்கள் நிலை யில்லாது சுழலுகின்ற பார்வையுடன் அருள் தாஸ் முன்னே நடந்தான். குடிசை நெருங்கி விட்டது. முன்னே வேலி போடப்பட்டிருந்த பட்டியிலே ஆடுகளை அடைத்தான். அருள் தாஸ் தன்னுடைய செல்லமான ஆட்டுக் குட்டியை முத்தமிட்டு அதனுள் விட்டான். குடிசைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த அருள்தாஸின் காலிலே தட்டுப் பட்டது கடிதம் ஒன்று.

"அப்பா! அம்மா கடுதாசி போட்டிருக் காங்க போல இருக்குது..."

தேவநாதன் லாந்தர் விளக்கை ஏற்றிவிட்டு அந்தக் கடிதத்தைப் படித்தான். லேடிடாக்ட ருக்குப் பத்து ரூபாய் கொடுக்க வேண்டும் என்றும் அதற்குப் பணம் வேண்டும் என்றும் எழுதியிருந்தாள் மேரி.

"பத்து ரூபாய்...அப்பாடி..."—அவனையும் அறியாமல் வெடித்தன வார்த்தைகள்.

"அப்பா தம்பி பிறந்து விட்டானா?" என்று அருள்தாஸ் ஆவலுடன் கேட்டான்.

''இன்னும் இரண்டு நாட்களில் பிறந்து விடுவானாம்....'' — பதிலிலே தெம்பில்லை.

''பத்து ரூபாய் என்றால் சாமானியமா?''— கவலை நெஞ்சை அடைத்தது. பலவித எண்ணங்கள் மனத்திலே சுழல, அடுப்பைப் பற்ற வைத்தான் தேவநாதன். புகைந்து கொண்டிருந்த அடுப்பு பற்றி எரிய ஆரம்பித்தது. ஆனால் சிந்தனைப் புகைச்சல் விட்டபாடில்லை.

கலகலப்பு சிறிதும் இல்லாத தந்தையைக் கண்ட அருள்தாஸ் அவனிடம் அமர்ந்து கொண்டான்.

''ஏனப்பா, பேச மாட்டேனென்கிறே?''

''அதுவா...ஒண்ணுமில்லை. பணம் வேணு மின்னு அம்மா எழுதியிருக்காங்க...!''

''அதுக்கு என்ன? அனுப்பி விடேன்!'' இது அவனது மிகவும் சுருக்கமான பதில். அந்தக் கவலைக் கிடையிலும் தேவநாதன் சிரித்தான். குழந்தை எவ்வளவு சுலபமாகச் சொல்லி விட்டது?

''ஆமாம், அனுப்பத்தான் வேண்டும்...'' என்று அவன் திருப்திக்காக உடனே கூறி விட்டான் தேவநாதன்.

அதற்குள் வாசலில் 'அம்மே!' என்ற குரல் கேட்டு வெளியே ஓடினான் அருள்தாஸ்.

''பாவம்! இத்துடன் மூன்று கடிதங்கள் எழுதி விட்டாள், பணம் கேட்டு. எப்படியாவது அனுப்பிவிட வேண்டும். எப்படிச் சம்பாதிப்பது...?'' மலை போன்ற பிரச்னையைச் சமாளிக்க முடியாமல் தளர்ந்து உட்கார்ந்தான் தேவநாதன்.



தேவைப் பட்டவர்களிடம் பணம் இருப்பதில்லை; தேவைப் படாதவர்களிடம் தேவைக்கு அதிகமாகக் குவிந்திருக்கும். பணத்தின் இயல்பே இதுதான்.

''வயிற்றைக் கிள்ளுதப்பா'' என்று தட்டை வைத்துக் கொண்டு உட்கார்ந்தான் அருள்தாஸ். தேவநாதன் சோறு போட்டு மோர் ஊற்றினான்.

அருள்தாஸின் இளங் கரம் அதைப் பிசைய முடியாமல் தவித்தது. சிறிது நேரம் இருந்துவிட்டு மெல்லத் தந்தையின் முகம் நோக்கினான்.

சிறுவனின் விழிகள் கூறிய 'கையாலாகாத் தன'த்தைப் புரிந்துகொண்ட தேவநாதன் சிரித்துக் கொண்டே பிசைந்து விட்டான்.

* * *

**ஊ**ர் மணி ஒன்பது முறை நாதம் பரப்பியது. அருள்தாஸ் உலகத்துக் கவலைகள் சிறிதும் இல்லாத தெய்வமாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். அவன் அரவணைப்பிலே முடங்கிப் படுத்திருந்தது, அவனுடைய செல்ல ஆட்டுக்குட்டி. அன்புத் தத்துவம் ஒன்றுதான் அவனுக்குப் புரிந்த தத்துவம். ஆனால் தேவநாதனுக்குத் தூக்கம் வந்தால்தானே? ஓயாத மனம், ஓய்ந்து விட்ட உடலுக்கு உறக்கத்தைத் தர மறுக்கிறது.

மெதுவாகச் சத்தம் செய்யாமல் குடிசைக் கதவைச் சாத்திவிட்டு வெளியே நடந்தான். 'தலைவலி யென்றால் பல மைல்கள் தூரத்துக்குக் காரை அனுப்பி வைத்தியரை வரவழைக்கின்ற மனிதர்கள் வாழ்கின்ற உலகத்திலே, மனைவிக்குப் பிரசவம் என்றால் பத்து ரூபாய் கூட அனுப்ப முடியாதவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்!

ஊர் அடங்கி விட்டது. எங்கும் அமைதி. தேவநாதன் கால்போனபடி போய்க் கொண்டிருந்தான். வாழ்க்கையில் நேர்மைக்கே வழி கிடையாதா என்று குமுறினான். 'உழைக்காமல் சம்பாதிப்பவர்கள் திருடர்கள் என்ற வேதவாக்கியம் அவன் நினைவுக்கு வந்தது. அதன்படி உலகத்திலே பெரிய மனிதர்கள் அனைவருமே திருடர்கள்தாம்!'

'ஆசையின் வீடு இது. எவ்வளவு பெரியதாக இருக்கிறது! என் உழைப்பிலே ஒரு பங்கு கூட அவன் உழைப்பதில்லை. அவன் இருப்பது மாடி வீடு. நெஞ்சை வெட்டிப் பிளந்தது பெருமூச்சு.

உலகத்திலே யாருக்கு மதிப்பு என்பதற்குச் சாட்சியம் கூறுகின்ற அந்த வீட்டை இன்னொரு முறை கூர்ந்து கவனித்தான்.

அதோ, அது என்ன?

வாசற்படி ஓரத்திலே ஏதோ பளபளவென்று மின்னியது.

''போய்ப் பார்த்துத்தான் விடலாமா?''

சுற்று முற்றும் ஒருவரும் இல்லை என்று தீர்மானம் செய்து கொண்ட பின்னர் தேவநாதன் அருகில் சென்று பார்த்தான்.

வெள்ளி விளக்கு! பளபள வென்று பல பத்து ரூபாய்களைத் தன்னுள் அடக்கி வைத்திருக்கும் பொக்கிஷமல்லவோ அந்த வெள்ளி விளக்கு? 'அதை எடுத்துக்கொண்டு போய்விட்டால்?'

''சீ...திருடுவது பாவம்...''

''திருட்டாவது...? அவன் கையில் அது இருப்பதை விட என் கையில் அது வந்தால் மிகவும் பயன்படுமே! நாளைக்கு அதை விற்று மேரிக்கு......''

ஒளியைத் தரும் விளக்கு ஒரு கணத்தில் இருளைத் தோற்றுவித்து விட்டது. அவன் உள்ளத்தில்.

சலனமற்ற தெரு, பணத்தேவை, மனிதனை நெருக்குகின்ற சூழ்நிலை.

ஒரு கணம்தான்!

அந்த விளக்கை எடுத்துத் துண்டில் புதைத்துக் கொண்டு 'விடு விடு' என்று குடிசை நோக்கி நடந்தான் தேவநாதன். கால்கள் 'வெடவெட'வென்று ஆடின. 'ளொள்' என்ற நாயின் சத்தம் கேட்டு மிரண்டு போனான். பின்னும் வேகமாகக் கால்கள் வேலை செய்தன. குளித்ததுபோல அவன் உடல் நன்றாக நனைந்துவிட்டது.

வாழ்க்கையில் சம்பாதித்த நேர்மையெல்லாம் ஒருகணத்தில் பாழாகி விட்டதே என்ற உட்குரல் பேரொலி எழுப்பியது. ''பின்னே




# அழகு மிகுந்த நீண்ட அடர்ந்த கூந்தலுக்கு

# பாமாலிவ்

**பெர்ப்யூம்ட் கோகோனட் ஹேர் ஆயில்**





குடும்ப முழுவதிற்கும் மிக்க உகந்தது!

பெரிய எகானமி அளவு புட்டி
யினால் பணம் மிச்சமாகிறது!
மூன்று வித விருப்பான
வாசனைகளில் கிடைக்கும்.

லவண்டர்
மல்லிகை
ரோஜா

PCH/G/2

---

உங்கள் குழந்தையின்
மகிழ்ச்சிக்கும் ஜீரணசக்திக்கும்




ஸ்பென்ஸர்ஸ்

# கிரைப் ஸிரப்

**விலைமதிப்பில்லாத குழந்தை நோய் நிவாரணி**

வாயு உபத்திரவம், மாந்தம், வயிற்றுப் புளிப்புத்தட்டுதல் ஆகிய
வற்றால் ஏற்படும் உபாதைகளை அதிவிரைவில் போக்குகிறது!

**SPENCER & CO., LTD.**

MADRAS, BOMBAY, CALCUTTA, DELHI & BRANCHES

பணத்துக்கு ஏது வழி? குழந்தை முக்கியமா? அல்லது நேர்மை முக்கியமா...?'' தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டான் தேவநாதன். குடிசைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றால் அங்கே அருள்தாஸைப் பாயிலே காணோம்.

அவசரம் அவசரமாக மரப் பெட்டியைத் திறந்தான் தேவநாதன். லாந்தர் விளக்கை எடுத்துப் பெட்டிக்குப் பக்கத்தில் வைத்துக் கொண்டான். பெட்டியின்மேல் வேத புஸ்தகம் கிடந்தது. அதை அலட்சியமாகத் தள்ளி விட்டான். பிறகு வெள்ளி விளக்கைத் தாங்க முடியாத மனப் பாரத்துடன் பெட்டியினடியில் வைத்தான். பிறகு மற்றச் சாமான்களை அதன் மீது வைத்துப் பெட்டியை அழுத்தி மூடினான். ஏதோ நெறுநெறு வென்று பெட்டியினுள்ளிருந்து சத்தம் வந்தது. மறுபடியும் பெட்டியைத் திறந்து சாமான்களையெல்லாம் எடுத்துப் போட்டுவிட்டுப் பெட்டியடியிலே துழாவினான்.

''ஹா......''

சுருக்கென்று ஏதோ குத்தியது.

வெளியே எடுத்துப் பார்த்தான். கண்ணாடித் துண்டு! 'பரபர'வென்று லாந்தர் விளக்கைப் பெட்டியினுள் வைத்துப் பார்த்தான்.

''ஆ! மாதா...''

பெட்டியினடியில் இருந்த கர்த்தரின் அற்புதப் படம், கண்ணாடி நொறுங்கி அலங்கோலமாகிக் கிடந்தது. அதன்மீது வெள்ளி விளக்கு இருந்தது. அதுதான் படத்தை அழுத்தி நொறுக்கியிருக்க வேண்டும். கண்ணாடி ஏறிய விரலிலிருந்து பெருகிய இரத்தம் ஏசுவின் மார்பிலே வழிந்து ஓடியது. 'ஆ! கர்த்தரே...!' என்று கூவினான் தேவநாதன். ஏசுவின் மார்பிலே வழிந்தோடிய இரத்தம், ''மனிதர்களின் பாவத்துக்காக ஏசு இரத்தம் சிந்தினார்'' என்று உருக்கத்துடன் கூறியது.

அந்தப் படம் — தேவநாதனுடைய குணத்தைப் போற்றிச் சாமியார் அவனுக்கு அளித்த பரிசு. ''நல்ல குணம் எப்போது மாறியதோ, அதைப்போல் அப்பொழுதே அந்தப் பரிசும் குலைந்து விட்டது......'' அதற்கு மேல் அவனால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. ''என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று கதறினான் தேவநாதன்.

'நமது பாவங்களுக்கென மரித்து அடக்கம் பண்ணப்பட்டவர் ஏசு' என்று சாமியார் கூறியது மனத்திலே எதிரொலித்தது. அவனுடைய பாவத்துக்காகத் தன்னையே குலைத்துக் கொண்டுவிட்ட ஏசுவின் திருவுருவப் படத்தைப் பார்த்தான். உள்ளம் கசக்கு நாறு வியது. குமுறிக் குமுறி அழுதான் தேவநாதன். ஏதோ வேகத்திலே செய்துவிட்ட குற்றத்தின் நினைவு நெஞ்சில் உறுத்த, அதனால் நொந்து அழுகின்ற மனித வர்க்கத்திலே தேவநாதனும் ஒருவன்தானே!

இயந்திரம்போல் உடைந்த படத்தை வெளியே எடுத்து வைத்துவிட்டு, எல்லாவற்றையும் பெட்டிக்குள் வைத்தான். பிரிந்து கிடந்த வேத புஸ்தகத்தைப் பார்த்தான். பளிச்சென்று தெரிந்த வாக்கியத்தைப் படித்தான்.

'இதோ, நியாயாதிபதி வாசற்படியில் நிற்கிறார்!'

இதைப் படித்தவுடன் உடல் சிலிர்த்தது. ''என் காரியத்தைக் கர்த்தர் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார். உலகத்தின் வாசற்படியிலே இருக்கிறார். உள்ளத்தின் வாசற்படியிலே இருக்கிறார். வீட்டின் வாசற்படியில் இருக்கிறார்...''

தேவநாதன் வெறிபிடித்தவன் போலக் கூவினான்.

''ஆமாம், வாசற்படியிலேதான் இருக்கிறேன்!'' என்று பதில் கொடுத்தது தெளிவான குரல் ஒன்று.

தேவநாதன் திடுக்கிட்டுத் திரும்பினான். குடிசையின் வாசற்படியிலே, புரண்டு நெளிந்த கேசம் இருபுறமும் துவள, லாந்தர் வெளிச்சம் பால்வடியும் முகத்தைச் சூரியனாக ஆக்கக் கருணை பொழியும் வதனத்துடன் கையில் ஆட்டுக் குட்டியைச் சுமந்து நின்ற அருள்தாஸ் தேவநாதனுக்கு ஏசுவாகவே காட்சியளித்தான்.

''ஆமாம்! நியாயாதிபதி வாசற்படியிலே நிற்கிறார். நான் செய்ததையெல்லாம் கவனித்துக் கொண்டே நிற்கிறார்''



சிங்கப்பூர் மாரியம்மன் கோயிலில் 'தமிழ் முரசு' ஆசிரியர் திரு கோ. சாரங்கபாணி அவர்கள் தலைமையில் கலை விழா நிகழ்ந்தது. அப்போ திருமதி விஜயலட்சுமி கந்தையா அவர்கள் இனிமையாக ஒரு மணி நேரம் பிடில் இன்னிசையோடு, வாய்ப்பாட்டும் பாடினார். பிறகு திருமுருக கிருபானந்தவாரி அவர்கள் செல்வி விஜயலட்சுமியைப் பாராட்டி ''இசை ஞான ஜோதி'' பட்டத்தை வழங்கினார். படத்தில் திருமுருக கிருபானந்தவாரி அவர்களையும் திருமதி விஜயலட்சுமி கந்தையா அவர்கள் குழுவினரையும் காணலாம்.

## நடுத் தெருவில்!




தேவநாதன் ஓடிப் போய்க் குழந்தையை வாரித் தூக்கிக் கொண்டான். அவனைக் கட்டியணைத்துக் கொண்டான்.

''எங்கேயப்பா போயிருந்தாய்? நான் உன்னைக் காணமல் சிறிது தூரம் தேடி விட்டு வந்தேன்...''

''எங்கேயும் போகவில்லையடா கண்ணே! நான் இங்கேதான் இருக்கிறேன்!''

''என்ன அப்பா செய்து கொண்டிருந்தாய், நான் வந்தபோது?''

''............''

''எதையோ பெட்டியில் வைத்தாயே!''

''............''

''சொல்லு அப்பா!''

நெஞ்சை அடைத்து நின்ற சுமை பெரும் விசும்பலாக வெடித்துச் சிதறியது தேவநாதனுக்கு. அருள்தாஸ் ஒன்றும் புரியாமல் விழித்தான். அவனைப் பாயிலே படுக்க வைத்துத் தூங்கச் செய்தான். அருள்தாஸ் தூங்கிய உடனே எழுந்துபோய்ப் பெட்டியைத் திறந்தான். முதலில் தென்பட்ட வேத புஸ்தகத்தை எடுத்துப் பத்திரமாக வைத்தான், பிறகு பெட்டியின் அடியில் இருந்த வெள்ளி விளக்கை எடுத்தான்; அதைத் துண்டில் மறைத்து வைத்துக் கொண்டு அவன் வெளியே வேகமாக ஓடினன்.

அந்தக் கால்களுக்கு எப்படித்தான் அந்த வேகம் வந்ததோ? எல்லாம் உள்ளத்தின் வேகம்தான் காரணம். ''கர்த்தரே! என்னை உங்களிடம் அர்ப்பணிக்கிறேன். இந்தப் பொருள் திருட்டுப் பொருள், மாசுபட்ட பொருள், நீங்கள் அந்த மாசைத் துடைத்து விடுங்கள்'' என்று கண்ணீர் கன்னத்தை நனைக்க 'வா, வா' என வாயில் திறந்து அழைத்த மாதாகோவிலுக்குள் ஓடினன் தேவநாதன். கையிரண்டையும் விரித்துத் தஞ்சமளிக்கக் காத்திருந்த கருணாமூர்த்தியின் பக்கத்திலே விளக்கை வைத்துவிட்டு அவர் முன்னே மண்டியிட்டு வணங்கினன்.

''பாவிகளை ரட்சிக்க உலகத்துக்கு வந்த ஏக பெருமானே! எனக்கு மன்னிப்பு அளித்துக் கிருபை செய்யுங்கள். நீதிமான்களையல்ல, பாவிகளையே மனந் திரும்புகிறதற்கு அழைக்க வந்தேன்' என்று கூறிய உம் மொழி பலிக்கட்டும்'' என்று மனம் உருகி அவன் வேண்டிக் கொண்டான்.

பிறகு, தான் அங்கு வைத்த வெள்ளி விளக்கை ஏற்றினன். அந்தத் திவ்ய ஒளி அவன் மன இருளைப் போக்கியது.

குடிசைக்குத் திரும்பியபோது தேவநாதனின் நெஞ்சில் சுமையில்லை, நினைவில் சோர்வில்லை, உடலில் அயர்ச்சி இல்லை. 'உலகத்தைக் காக்க வந்த கர்த்தர் என்னையும் காப்பாற்றுவார்' என்ற நம்பிக்கையுடன் அவன் தலை நிமிர்ந்து நடந்தான்.

* * *

மறுநாள் காலை பத்து மணிக்குத் தேவநாதனுக்கு மறுபடியும் கடிதம் வந்தது. மேரியின் தங்கை எழுதியிருந்தாள்.

''அக்காவுக்கு இன்று பகல் இரண்டு மணிக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. எல்லாம் கர்த்தரின் கருணை. நீங்கள் உடனே அருள்தாஸையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டு வாருங்கள்.''

''என்ன அப்பா, கடிதாசு!''

''அருள்தாஸ்! உனக்குத் தம்பி பிறந்திருக்கிறனடா...''

''அப்படியா...?'' அருள்தாஸ் தலைகால் புரியாமல் ஆட்டுக்குட்டியைப் போலக் குதித்தான். தேவநாதன் அவனையும் அழைத்துக் கொண்டு, மாதாகோவிலுக்கு ஓடினன்.

மாதாகோவிலின் வாசலிலே ஏதோ கூட்டம். குசை அங்கே கண்களில் நீர் வழிய நின்று ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். மற்றவர்கள் அவர் கூறுவதை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு மத்தியில் தன் அருமைமகன் அருள்தாஸோடு போய் நின்றான் தேவநாதன்.

''நான் என் வெள்ளி விளக்கை மாதாகோவிலுக்குக் கொடுக்க வேண்டும் என்று நெடுநாட்களாக நினைத்திருந்தேன். நேற்று யாரோ அதை விலைக்குக் கேட்டார்கள். எனக்கும் விற்று விடலாமா என்று சபலம் ஏற்பட்டது. ஆனல்...ஆனல்...அதை இன்று காலை காணவில்லை. ஏசு தண்டித்து விட்டார் என்று ஓடோடி இங்கு வந்தேன்...'' குசையால் மேலே தொடர முடியவில்லை. குலுங்கிக் குலுங்கி அழுதார்.

''அந்த விளக்கு..இங்கே கருணாமூர்த்தியின் பக்கத்திலே ஒளி விட்டுக் கொண்டிருந்தது. என் தீய எண்ணத்தை உணர்ந்த கர்த்தர் அதை எப்படியோ தம்மிடத்தில் சேர்ப்பித்துக்கொண்டு விட்டார்.'' இதைக் கேட்டவர்களின் கண்கள் நீரைச் சொரிந்தன.

தேவநாதன் இதைக் கேட்டான். நேரே உடல்சிலிர்க்கக் கர்த்தரின் முன்பு மண்டியிட்டான். ''கால வெள்ளத்திலே சிறுதுரும்பு போன்று அலையும் மனித இதயத்தின் வழியே பலவித எண்ணங்களைத் தோற்றி, தீமையும், நன்மையின் நியாயத்துக்கே பயன்படுமாறு செய்கின்ற மாபெரும் சக்தியே! உன்னை வணங்குகின்றேன்'' என்றான்.

உடனே வற்றாத ஆற்றுக்கு ஊற்றாயின அவன் இரு விழிகள்.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்க்

உபயோகித்தால்

**நாள்முழுவதும் புத்துணர்ச்சி யுடனும், நறுமணத்துடனும் இருக்கலாம்**

மிகுந்த சுகமூட்டுவதும், நறுமணம் வாய்ந்ததுமான பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகித்தால், நீங்கள் கொடிய வெப்பத்திலும், புழுக்கமான காலங்களிலும்கூட இனிய உணர்ச்சியுடன் இருக்கலாம். மென்மையான இந்த டால்கம் பவுடரை உடம்பில் தூவிக்கொண்டால், எரிச்சலூட்டும் வியர்வைத் தொல்லை ஒழியும். நாள் முழுவதும் புது மலரைப் போல் இனிய புதுமையுடன் இருக்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)



# பேசும் பாறைகள்

பிலோ இருதயநாத்

“தூங்கை ஏற்றுக் கொள்ளாக் கொம்பு உண்டா?'' இல்லை. ஆனல், தவளைகள் இல்லாத குளம் உண்டா? உண்டு!

தேவர்களும், அசுரர்களும் ஒன்றுசேர்ந்து, அமிர்தத்துக்காகத் திருப்பாற்கடலைக் கடைந்தார்களாம். அமிர்தம் கிடைத்ததாம். உடனே அசுரர்களை ஏமாற்றித் தாங்களே அதைச் சாப்பிட நினைத்த தேவர்கள், பூலோகத்துக்கு வந்து, பூஜித்து விட்டு எல்லாத் தேவர்களும் உண்டபின், இன்று பையூர்க் கோட்டத்தில் இருக்கும் ''அமிர்த புஷ்கரணி'' என்ற திருக்குளத்திலே கையைக் கழுவினர்களாம். இதைக் கண்ட அசுரர்கள், தவளைகளாக உருவங்கள் கொண்டு, இக் குளத்தில் கரைந்திருக்கும் அமிர்தத்தை உண்ண முற்பட்டார்களாம். இதையறிந்த தேவர்கள், அக்குளத்தில் தவளைகள் இருக்கக் கூடாது என்று சபிக்கவே, அன்றுமுதல் இன்று வரையில் அக்குளத்தில் தவளைகளே கிடையாதாம். இவ்விஷயம் எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்குத் தெரியாது. ஆனல் அக்குளத்தில் தவளைகளே இருப்பதில்லை என்பது மாத்திரம் உண்மைதான்.

பண்டைக் காலத்தில் பையூர்க் கோட்டம் ஒரு பாலைவனமாக இருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கப்படுகிறது. அந்த ஸ்தலம் செங்கற்பட்டு ஜில்லாவில், பொன்னேரி தாலூக்காவில் உள்ளது. இன்று அதற்குத் ''திருப்பாலை வனம்'' என்ற பெயர் வழங்கப்படுகிறது. இது பொன்னேரி ரயில் நிலையத்திலிருந்து சுமார் பத்து மைல் தூரத்தில் இருக்கிறது. இதைக் காணச் செல்லும் பக்தர்கள், கோவிலைத் தரிசனம் செய்தபின், சாப்பிடுவதற்குப் பொன்னேரிக்குத்தான் வரவேண்டும்.

பஸ்ஸில் போகும்போது சுமார் ஒரு மைல் தூரத்திலிருந்தே, கோவிலின் கோபுரம் கம்பீரமாக நின்று நம்மை வரவேற்கிறது. கோவில், ஊரின் மேற்குப் பாகத்தில், கிழக்கு நோக்கி இருக்கிறது. கோவிலின் எதிர்ப் பக்கத்தில், பதினறுகால் மண்டபமும், மண்டபத்தையும், கோவிலையும் அழகு பெறச் செய்ய, அழகிய திருக்குளமும் இருக்கின்றன. இக்கோவிலின் சிலாசாஸனம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. சுவாமியின் பெயர் ஸ்ரீபாலீசர், அம்பாளின் பெயர் ஸ்ரீ லோகாம்பாள்.

இக்கோவிலின் கர்ப்பக்கிருகத்தின் பின்புறம் யானையின் முதுகைப் போல் அமைந்திருப்பது ஒரு தனிச் சிறப்பாகும். சுவாமி கோவிலைச் சுற்றியிருக்கும் உட்பிராகாரத்தில் புராதன கற்சிலைகள் பல இருக்கின்றன. ஒவ்வொன்றும் பேசும் சிலைகளாகவும், சிரிக்கும் சிலைகளாகவும், பக்தர்களைப் பார்வையிடும் பாவைகளைப் போலவும் காணப்படுகின்றது. இச் சிலைகளைத் தரிசிக்கும்போது, நாம் எங்கிருக்கிறோம் என்பதையே மறந்து விடுகிறோம். சில சிலைகள் சிற்பக் கலையின் சிகரமாக விளங்குகின்றன.

வடக்கே இமயம் வரையில் தமிழகத்தின் வீரக்கொடியை நாட்டிய தென்னாட்டு அரசர்கள் பலர். வடக்கே சென்று வெற்றியுடன் திரும்பிய சோழ அரசர்களில் ஒருவன், இவ்வழியே வரும்போது, குளமும் சோலையுமாக இருப்பதைக் கண்டு சுண்டு தங்கி இளைப்பாறினன். அப்பொழுது ஒரு மரத்தடியில் கட்டிய யானைகளும், குதிரைகளும் இறந்துவிடவே, அரசன் சினங் கொண்டு, மரத்தை அடியோடு வெட்டிச் சாய்க்க உத்தரவிட்டான். அரசன் கட்டளைப்படி ஆட்கள் வெட்ட, அடி மரத்திலிருந்து குருதி குபீர் குபீரென்று வெளிக் கிளம்பியது. இதைக் கண்ட ஆட்கள் விஷயத்தை அரசனிடம் கூறினர்கள். அரசனும் வந்தான், உண்மையை உணர்ந்தான், உள்ளமுடைந்து, ''ஆண்டவன், ஆண்டவன்'' என்று அலறினன்: ஆலயமும் கட்டினன். அவன் கட்டிய ஆலயமே இன்று இத்திருப்பாலைவனத்திலுள்ள ஆலயம். அன்று ஆட்களின் கோடரியால் ஏற்பட்ட வடு இன்றும் ஆண்டவன் மேல் காணலாம். இந்த ஆண்டவர்க்குப் பால், பன்னீர், இளநீர்

சுத்த ஜலம் தவிர வேறு ஒன்றும் அபிஷேகம் செய்வதில்லை.

கி. பி. 1143-ம் ஆண்டு இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய காலத்துக்கு முன்பே அக் கோவில் ஏற்பட்டுள்ள தென்று கல்வெட்டுக்களி லிருந்து தெரிகிறது. இக் கல்வெட்டுகளால், பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட பண்டைக்கால விஷயங்கள் நமக்குத் தெரிய வருகின்றன. மேற்படி கல்வெட்டுகளில், 10, 11 வது நூற்றாண்டில் இக் கோவிலின் விவரங்கள் காணப்படுகின்றன.



மேலும் அந்தக் கோவிலின் கல்வெட்டுகளில் திருப்பாலேவன மென்ற அவ்விடம் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து மெய்க்குன்ற வள நாட்டு, "பையூர்க் கோட்டத்துத் திருப்பாலேவன மென்றும், சுவாமியின் பெயர், திருப்பாலேவன முடையார்" என்றும், அம்பிகையின் பெயர், "பிரியாத நாச்சியார்" என்றும், "பெரிய நாச்சியார்" என்றும், குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இத் தலத்திலுள்ள நடராஜப் பெருமானின் திருவுருவத்தின் அடிப் பீடத்தில் கன்னட பாஷையில், உதயகிரி மந்திரி திம்மண்ணு என்பவரின் குமாரர் அவசரம் பிரம்மப்ப நாயக்கர் என்பவரால் கி.பி. 1440-ம் ஆண்டு தானம் செய்யப்பட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. சந்திரசேகரர் உருவத்தின் கீழ் இருக்கும் தெலுங்கு எழுத்துக்களிலிருந்து, சந்திரசேகரசுவாமியும், அம்மனும் கி. பி. 1759-ம் ஆண்டுசாளுவரகு நாயகுலராஜு என்பவரால் தானம் செய்யப்பட்டது என்றும், ஆஞ்சநேயர் சிலையின் மேல் திக்கன் என்பவரால் தானம் கொடுக்கப்பட்டது என்றும், ராஜராஜ தேவனுடைய 18வது ஆட்சிக் காலத்தில் காரைக்காலம்மையாரின் உருவம் ஒன்று சோழ மண்டலத்து அலங்கூர் வணிகர் ஒருவரால் நிறுவப்பெற்றது என்றும் தெரிகின்றன. இன்று இக்கோவிலுக்குள்ளிருக்கும் பாறைகள் நம்மிடம் பேசாவிட்டால், சுமார் 800-900 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த பல விஷயங்கள் நமக்கொன்றுமே தெரிவதற்கு இடமில்லை.

## மே மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. மே மாதப் போட்டிக்கு மே 1-ந் தேதியிலிருந்து 31-ந் தேதி வரை கதைகள் எழுதி யனுப்பலாம். மே மாதப் போட்டிக்கு வந்த கதைகள் மே மாதம் முழுதும் பரிசிலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஜுலை மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசிலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பியனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

—ஆசிரியர், கல்கி



"பிராஸோ கொண்டு பாலிஷ் செய்வதற்கு முன்னால், பித்தளை இவ்வளவு பளபளப்பாக இருக்கும் என்று எனக்குத் தெரியாது"




பித்தளை மற்றும் தாமிர சாமான்களை பாலிஷ் செய்ய பிராஸோவிற்கு நிகர் ஒன்றுமில்லை. பிராஸோ சுத்தம் செய்வதுடன் பளபளப்பாகவும் செய்கிறது — அதுவும் விரைவாக, எளிதாக, மிருதுவாக.




திரவம் அல்லது பசை

# பிராஸோ

மெட்டல் பாலிஷ்

உங்கள் வீட்டிற்குப் பிரகாசத்தைக் கொண்டுவருகிறது

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப் பெற்றது)

---




# டீ கெர்ல்
# டீ டஸ்ட்

## இது
## சிறந்த ஸ்ட்ராங்
## டீ
## தருகிறது

LIPTON (INDIA) LTD. (*Incorporated in England*)

LTGC-35 TM




தெய்வானை படுக்கையை விட்டு எழுந்தாள்.

வேல்முருகன் படுக்கையை விட்டு எழுந்திராமல் இன்னும் படுத்திருப்பதைப் பார்த்தாள்.

முப்பது வருட காலமாக இல்லாத செய்கையாகவல்லவா இருக்கிறது? அவன் இன்னமும் எழுந்திராமல் படுத்திருப்பது அவளுக்குப் புதுமையாகவும், அதிசயமாகவும் இருந்தது.

முப்பது வருட காலமாக அவள் கண்டு களித்து வந்த காட்சி அவள் மனக்கண் முன்னால் விரிந்தது.

பொழுது புலர அரைஜாமப் பொழுது இருக்கும். கீழ் வானத்தில் காலைப் பிறையும், ''விடிவெள்ளியும் அருகருகே ஒளிர்ந்து கொண் டிருக்கும் வேளையில், வேல்முருகன் ''முருகா, முருகா'' என்று சொல்லிக்கொண்டே எழுந்திருப்பார். திருக்குளத்தில் நீராடி விட்டுப் பால் காவடியை எடுத்துக்கொண்டு வீட்டை விட்டுக் கிளம்பி விடுவார்.

அவர் வாய் ஏதாவது துதிப் பாடலை ஜபித்தபடி இருக்கும்.

அதிகாலையில் பால் காவடியுடன் புறப்படுபவர், சுற்று வட்டம் உள்ள கிராமங்களுக்குப் போவார். நடைக்கு அஞ்சார். பத்து மணி சுமாருக்குத்தான் திரும்புவார். இரண்டு பால் குடங்களிலும் பால் தளும்பி வழியும்.

காவடியைக் கொண்டு வந்து இறக்குவார்.

முருகனுக்குப் பால் அபிஷேகம் நடப்பதைக் கண் குளிரக் காணுவார்.

மடைப்பள்ளியிலே மூன்று பட்டைச் சாதம் கொடுப்பார்கள். அதை வாங்கி வருவார். வீட்டில் அவர் மனைவி கொஞ்சம் மோர் வாங்கி வைத்திருப்பாள்; சாப்பிடுவார்கள்.

சாயங்காலம் கோவிலில் ஆண்டவனுக்குச் சாம்பிராணி தூபம் போடுவார். இரவு இரண்டு பட்டைச் சாதம் கொடுப்பார்கள். மறுபடியும் சாப்பாடு, தூக்கம். மறுநாள் பொழுது புலர இருக்கும்போது திரும்பவும் பால்காவடியுடன் கிளம்புதல், மாதச்சம்பளம் இரண்டு ரூபாய். மத்தியானம் மூன்று பட்டைச் சாதம். இரவு இரண்டு பட்டைச் சாதம் கிடைக்கும்.

கடந்த முப்பது வருட காலத்தில் இந்தத் தினசரி வேலை நின்றதே இல்லை.

மழையோ, இடியோ, புயலோ, கடும் வெய்யிலோ அவர் பொருட்படுத்தமாட்டார். முருகக் கடவுளும் கொஞ்சம் சுயநலக்காரர் தானோ என்னமோ? வேல் முருகனுக்கு உடம்புக்கு ஏதாவது வந்துவிட்டால் தமக்குப் பால் அபிஷேகம் நின்றுவிடுமோ என்று அவர் வேல் முருகனுக்கு நோயற்ற வாழ்வைக் கொடுத்திருந்தார்.

வேல்முருகனுக்கு முன்னால் அவர் தகப்பனார் பால் காவடி தூக்கி வந்தார். வேல் முருகனுக்கு இருபது வயது இருக்கும்போது அவர் இறந்தார். இறக்கும்முன் வேல் முருகன் தோளில் அவர் தூக்கி வைத்த பால்காவடியை வருடம் முப்பது ஆகியும் வேல் முருகன் இறக்கவே இல்லை. முப்பது வருட காலம் பால் காவடியைத் தூக்கி, தூக்கி அவர் தோள்கள் பூரிப்பு அடைந்திருந்தன. முருகனுக்குச் சேவை செய்வோம் என்ற திருப்தி உடம்பு முழுதும் பரவி அவர் முகத்துக்கு நல்ல தேஜஸைக் கொடுத்திருந்தது. இனமும் ஏழு, எட்டு மைல்கள் நடந்த கால்கள் அந்த வேகத்தைத் தளரவில்லை.

* * *

இன்று அவர் படுக்கையை விட்டு எழுந்திராதது தெய்வானைக்கு விசித்திரமாக இருந்தது. அவரை எழுப்பினாள்.

'' என்னங்க இன்னும் நீங்க எழுந்திருக்காமல் இருக்கீங்களே.''

'' சும்மா இரு. தெய்வானை !''

'' நீங்க பால்காவடி எடுத்துக்கிட்டுப் புறப்படவில்லையா ?''

'' இன்னிக்குப் போகல்லே, தெய்வானை !''

'' அப்படியானால் முருகனுக்கு இன்றைக்குப் பால் அபிஷேகம் என்ன ஆவது ?''

'' எனக்கு இன்னிக்கு வெளியிலே வேறு வேலை இருக்கு.''

'' வேலை இருந்தால் காவடி எடுத்தப்புறம் அதைக் கவனிக்கிறது.''

'' உன்னுடைய வேலையைப் போய்ப் பாரு, தெய்வானை !''

* * *

வேல் முருகன் புறப்பட்டார். ஆனால் பால் காவடி மூலையில் தூங்கியது. காவடி இல்லாது புறப்பட்டார்.

எதிரே குருக்கள் வந்தார்.

'' என்ன, வேல் முருகு ! இன்றைக்குச் சீக்கிரமாகவே பால்காவடி எடுத்தாச்சா ? பத்து

மணிக்குத்தானே வருவே? எங்கே காவடி? கோவிலிலே கொண்டுபோய் வச்சுட்டியா?''

''இன்னிக்குக் காவடி எடுக்கலீங்க!''

''ஏன், அப்போ முருகனுக்குப் பால் அபிஷேகம்?''

''இன்றைக்கு இல்லீங்க.''

''இல்லேயா?''

குருக்களுக்குத் தம் கண்கள்மீதே நம்பிக்கை உண்டாகவில்லை.

''என்ன வேல் முருகு, காவடி எங்கே?''

''இன்னிக்கு ஒரு சேர் கூட எடுத்து வைச்சிருக்கேன். பால் அபிஷேகத்துக்கு.''

''இன்னிக்கு மாடு உதைச்சுட்டுது. இருந்தாலும் முருகனுக்குப் பால் கிடைத்துவிட்டது.''

''எங்கே, பால்காவடி?''

''எங்கே, பால்காவடி?''

இப்படிப் பல பெண்மணிகள் அவர் போன இடங்களிலெல்லாம் அவரைக் கேட்டார்கள்.

''எல்லாம் நாளைக்கு, நாளைக்கு'' என்று சொல்லிக்கொண்டே நடந்தார் வேல்முருகன்.

மூன்று மைல் தூரம் நடந்து விட்டார்.

கால்களில் வலி தோன்றியது.

ஓரிடத்தில் போய் உட்கார்ந்தார். அவர் போக வேண்டிய இடம் இன்னும் மூன்று மைல் தூரத்தில் இருந்தது.

கால்களில் வலி ஏற்பட்டது. அவருக்கே ஆச்சரியமாக இருந்தது.



விடியற்காலம் புறப்பட்டால் காலை பத்து மணி வரையில் ஒரு நிமிடம்கூட நிற்காமல் எட்டு, பத்து மைல் சுமையுடன் நடப்பார். கால்களிலோ வலுவான தோள்களிலோ வலியே தோன்றியதில்லை.

ஆனால் இன்றோ, தோளில் சுமையில்லாமல் இருந்தும்கூடக் கால்களில் மூன்று மைல் நடப்பதற்குள் வலி. ஆண்டவனுக்குச் சேவை செய்யும் போது ஏற்படும் வலியை ஆண்டவன் தாமே வாங்கிக் கொண்டு விடுகிறாரோ, என்னவோ?

மறுபடியும் அங்கிருந்து எழுந்து புறப்பட்டார் வேல் முருகன்.

இருபது நாட்களுக்கு முன்பு, ஒரு நாள் அவர் பால்காவடியுடன் வரும்போது ஆறாவது மைலில் இருந்த ஒரு ஊர் வழியாக வந்து கொண்டிருந்தார். இன்னும் எட்டு மைல் தூரம் உள்ள கிராமம்தான் அவருடைய கடைசி இலக்கு. அதுவரை பால் காவடியுடன் போய்த் திரும்பினால்தான் பால் குடங்கள் நிறையும்.

''என்ன காவடிக்கார ஐயா! ஒரு டீ சாப்பிட்டுவிட்டுப் போயேன்.''

திரும்பிப் பார்த்தார் வேல் முருகன்.

புதிதாக வந்திருந்த டீக் கடை வாசலில் டீக் கடைக்காரக் குமாரவேலு நின்று கொண்டிருந்தார். அவரை அவருக்குத் தெரியாது. ஒரு வாரமாக அவரைப் பார்த்திருக்கிறார்.

''முப்பது வருடங்களாக இல்லாத பழக்கம் எதற்கு?'' என்றார் வேல் முருகன்.

''இது என்ன கள்ளா, சாராயமா? குடிப்பதில் தப்பில்லே. வேணும்னா உங்களுக்குக் கிளாஸிலே கொடுக்காமல் டபரா டம்ளரிலே தருகிறேன்'' என்றார் டீக் கடைக்காரர்.

வேல் முருகன் தேநீர் வாங்கிக் குடித்தார். உடனே உடம்பில் கொஞ்சம் உற்சாகம் உண்டாகி விட்டது.

''சில்லறை எவ்வளவு? இன்றைக்குக் காசு கொண்டு வரவில்லே, நாளைக்கு எடுத்து வரேன்'' என்றார் வேல்முருகன்.

''பரவாயில்லே, நம்ம கணக்கு இன்றைக்கு. துட்டு தரவேண்டாம்'' என்றார் டீக் கடைக்காரர். ''ஏன் பால்கார ஐயா, இவ்வளவு பாலேயுமா நீங்க சாமிக்கு அபிஷேகம் செய்யறீங்க? இரண்டு குடமும் சேர்ந்து எவ்வளவு பால்?'' என்று கேட்டார்.

''இருபது சேர். ஒவ்வொரு குடமும் பத்து சேர் இருக்கும்.''

''இதிலே என் கடைக்குத் தினமும் மூணு சேர் கொடுப்பீங்களா. துட்டு தந்துடறேன்.''

''அபிஷேகப் பாலிலேயா எடுக்கிறது?'' திடுக்கிட்டார் வேல் முருகன்.

''எடுத்தால் என்னவாம்? இப்போ நீங்க இரண்டு ஊர் போகாமல் இருந்தால் பால் குறையாதா? அதை நினைச்சுக்கிறது.''

''இரண்டு ஊர் போகாமல் பால் குறைஞ்சால் பரவாயில்லே. ஆனால் சாமிக்குன்னு ஜனங்கள் கொடுத்த பால். நாமே அதை எடுக்கலாமா?''

''சரி உங்க இஷ்டம்! மூணு சேர் பாலு முக்கால் ரூபாய் ஆவுது. எட்டணா உங்களுக்குக் கொடுத்துப்பிடுவேன். எனக்கு நாலணா லாபம். உங்களுக்கும் எட்டணா கிடைக்கும். யாரோ கொடுத்த பால். யோசிச்சுச் செய்யுங்க.''

''அந்தத் தப்பு தண்டாவுக்கெல்லாம் என்னை இழுக்காதீங்க'' என்றார் வேல்முருகன்.

பால் காவடியுடன் வேகமாகப் போய் விட்டார் வேல் முருகன்.

அதன் பின் அவர் இரண்டு நாட்கள் டீக் கடைப் பக்கம் கூடப் போகிறதில்லை.

மூன்றாவது நாள் டீக்கடைக்குப் பால் காவடியுடன் வந்தார் வேல்முருகன்.

டீக்கடைக்காரர் கெட்டிக்காரர். வேல் முருகன் மசிந்து விட்டதை அறிவார்.

''இந்தாங்க மூணு சேர் எடுத்துக்கிட்டு எட்டணா எடுங்க.'' வேல்முருகன் சொன்னார்.

''சரி, தினமும் இங்கே மூணு சேர் ஊத்தி விட வேண்டியது, எட்டணா துட்டை வாங்கிக்க வேண்டியது.''

''சரிங்க, ஆனால் நான் பால் போடுகிற சமாசாரம் வேறு ஒருவருக்கும் தெரிய வேண்டாம்.''

''மூச்சு விடமாட்டேன். நீங்களும் அதைப் பற்றிச் சொல்ல வேண்டாம்.''

* * *

அதன் பின் சில நாட்கள் ஓடிவிட்டன.

''காவடிக்கார ஐயா! இந்த டீக்கடையிலே இனிமேல் உங்களுக்கும் பங்கு உண்டு. இனிமேல் வர லாபத்திலே உங்களுக்குப் பாதி'' என்றார் டீக்கடைக்காரர்.

''என்னங்க. ஏதேதோ பேசறீங்க. முதல் போட்டுக் கடை வச்சிருப்பது நீங்க. எனக்கு எப்படி லாபம் வரும்?''

''நீங்களும் கொஞ்சம் முதல் போடறது. முதல் போட்டா வர லாபத்திலே ஆளுக்குப் பாதி எடுத்துக்கலாம். உங்களுக்கும் உதவியாய் இருக்கும். நீங்களும்கூடக் கடையிலே வந்து குந்திக்கலாம். டீக்கடை அப்புறம் சாப்பாட்டுக் கடை ஆயிடும். கடையைக்கூட 'வேல்முருகன் விலாஸ்' என்று போட்டு விடலாம். கூடிய சீக்கிரம் மின்சாரம் இந்த ஊருக்கு வரப்போவுது. ரேடியோ வைச்சோமானால் கூட்டம் கூடும். உதவிக்கு இரண்டு பசங்களைப் போட்டுக்கலாம்.''

பெரிய வலையாக விரித்து விட்டார் டீக் கடைக்காரர். வேல்முருகன் அதில் மாட்டிக் கொண்டார்.

''நீங்க சொல்றது சரிதான். ஆனால் பணம் எங்கிட்டே இல்லீங்களே.''

''போனவாரம் ஏதோ பேசறபோது திருச்செந்தூர், சுவாமிமலை முதலிய முருக ஸ்தலங்களுக்கு ஒரு தடவை மனைவியோடு போய் விட்டு வர நூறு ரூபாய் சேர்த்து வைத்திருப்பதாகச் சொன்னீங்களே, அதை எடுத்துக் கொடுக்கிறது!''

''அதெப்படி, உயிர் இருக்கச்சேயே இந்த ஊர்களுக்குப் போய் வரத்தானே இவ்வளவு வருடமாக ஒண்ணும் அரையுமாய் சேர்த்து வைச்சிருக்கேன். அதை எடுத்து விட்டால் அப்புறம் அங்கெல்லாம் எப்படிப் போக முடியும்?''

''கதிர்காமம் நீங்க போயிருக்கீங்களா, பால்கார ஐயா?''

''போனதில்லே. அதுவுமில்லாமல் கடல் தாண்டி இல்லே போகணும்? அதுக்கெல்லாம் ஆசைப்பட்டா முடியுமா? விரலுக்குத்தக்கபடி தானே வீங்கணும்!''

''இப்போ நான் சொல்றபடி கேட்டால் தமிழ்நாட்டிலே உள்ள முருகன் ஸ்தலங்களுடன் கதிர்காமமும் போகலாம்.''

''அந்தப் பணத்தைக் கேட்கீங்க.''

''ஆமாம். நூறு ரூபாய் கொடும். நாளைக்கே கடையை விரிவுபடுத்தி விடலாம். அப்புறம் வர லாபத்தைச் சேர்த்து வைச்சா எல்லா ஊரும் போகலாம்.''

''சரி, இன்னும் ஒருவாரத்திலே உங்களுக்குப் பணம் தருகிறேன்.''

ஒரு வாரம் சென்றது. நூறு ரூபாயை எண்ணிக் கொடுத்தார் வேல் முருகன்.

''இன்றைக்கே போய்க் கிராமபோன், பெஞ்சு மேஜை வாங்கி வந்து விடுகிறேன்.''

''அப்போ நான் நாளைக்கு வர்றேன்!''

''சரியா எட்டு மணிக்கு வந்து விடுங்கள். புது மேஜை நாற்காலிகளைப் போட்டு, கடையைப் புதிசா நாளைக்கு ஆரம்பித்துவிடலாம்.''

''இன்னொரு சமாசாரமுங்க. நாளைக்குப் பால் காவடியை எடுத்துக்கிட்டு வர வேண்டாம். முருகனுக்கு நாளைக்கு லீவு விட்டுடுங்க. நாளை முழுதும் நீங்க கடையிலே இருந்து வியாபாரம் நடத்த வேணும்.''

அதனால்தான் அன்று காவடி எடுத்துப் போகவில்லை வேல்முருகன். கிராமத்தை எட்டிப்பிடித்து விட்டார்.

'சரி, நாமும் ஒரு கடைக்கு முதலாளி ஆகி விட்டோம். லாபம் வந்ததும் ஒரு தடவை எல்லா முருகன் ஸ்தலங்களுக்கும் கதிர்காமத்துக்கும் போய் வந்து விடவேண்டும்.'

கடையைச் சமீபித்து விட்டார். இதென்ன? டீக்கடை எங்கே?

கடையில் ஈ, காக்கை இல்லை. உள்ளே அடுப்புகள் அடைந்து கிடந்தன.

அவரை ஏமாற்றி விட்டு டீக்கடைக்காரர் நூறு ரூபாயுடன் கம்பி நீட்டிவிட்டார்.

வாய் தவறி ஒரு நாள் தம்மிடம் நூறு ரூபாய் இருப்பதைச் சொன்னது எவ்வளவு முட்டாள்தனம் என்று எண்ணினார்.

அவர் தம் பணம் போனதற்காக வருத்தப் படவில்லை. முருகனுக்குப் பால் அபிஷேகத்துக்கு என்று வாங்கி, அதை விற்றதுதான் அவரை வாட்டியது.



''முருகா, முருகா! உனக்குச் செய்த அபசாரத்துக்கு எனக்கு விமோசனமே கிடையாது'' என்று மனம் உருகினார்.

வீட்டுக்குத் திரும்பினார். எதிரே குருக்கள் வந்தார்.

''வேல் முருகு! நாளை முதல் உனக்குப் பதிலாக வேறு பால் காவடிக்காரனுக்கு ஏற்பாடு செய்தாகி விட்டது'' என்றார்.

தாம் செய்த புரட்டு தெரிந்து விட்டதா என்று திடுக்கிட்டார் வேல்முருகன்.

''எதனால் தெரியுமா?'' என்றார் குருக்கள். வேல்முருகன் பதில் பேசவில்லை.

''திருப்பணி செட்டியாரும் அவர் வீட்டு ஆச்சியும் தமிழ் நாட்டில் உள்ள முருகன் ஸ்தலங்களையெல்லாம் சுற்றி விட்டுக் கதிர்காமம் போய் வரப் போகிறார்களாம். அவர்களுக்குத் துணையாக உன்னையும் உன் மனைவியையும் அழைத்துப் போகப் போகிறார். திரும்பி வர மூன்று மாதமாகலாம். அதனால்தான் வேறு பால்காவடியை ஏற்பாடு செய்திருக்கிறேன்.''

''அப்படியா?'' விம்மினார் வேல்முருகன்.

''வேல்முருகா! உன்னிடம் முருகனுக்கு அதிக அன்பு. இல்லாவிட்டால் உன் கைக்காசு செலவில்லாமல் அவருடைய க்ஷேத்திரங்களைப் பார்க்கும் பாக்கியம் உனக்குக் கிட்டுமா? முருகனுக்கு நீ செய்த சேவையை யார் அறியார்?'' என்றார் குருக்கள்.

''முருகா! உனக்குத் துரோகம் செய்தேன். உன் அபிஷேகப் பாலை விற்றேன். ஆனால் நீ என்னைக் கைவிடவில்லை!'' என்று மனத்தில் வைத்து மருகினார் வேல்முருகன்.

# படித்துப் பாருங்கள்

## மலைச்சாரல் மாதவி

ஸ்ரீமதி ஆனந்தி எழுதிய இந்த நவீனத்தை யார்தான் உற்சாகமாக வாசிக்க விரும்ப மாட்டார்கள்! அப்படி ஒரு தடவை வாசித்து விட்டால் கதாநாயகி மாதவி, கருணாகரன், சிவசங்கரன், ஜயந்தி ஆகிய பாத்திரங்கள் நம் உள்ளத்தை விட்டு அகலவே மாட்டார்கள். குணசித்திரம் அவ்வளவு அழகாக அமைந்துள்ளது.

பெண்ணினத்தை ஏறெடுத்துப் பார்ப்பதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்ட சிவசங்கரன் தற்செயலாக மாதவியைச் சந்தித்துக் காதல் கொள்கிறார்.

மாதவியோ, தன் தம்பி கருணாகரன் மீது உயிரையே வைத்திருக்கிறாள். அவன் படிப்புக்கும் உயர்வுக்கும் பாடுபட்டு வருகிறாள். இதில் தனக்குக் கல்யாணமாக வேண்டும் என்ற பிரக்ஞையே இன்றி 28 வயது வரை வளர்ந்து விடுகிறாள். இப்பொழுது அவள் சிவசங்கரனைக் கண்டு மையல் கொள்கிறாள்.

முன் கோபக்காரனான கருணாகரன், வேலையில் கெட்டிக்காரன். அவன் வேலை செய்யும் தொழிற் கூடத்தின் முதலாளி தம் ஒரே மகள் ஜயந்தியைக் கருணாகரனுக்கு மணம் முடிக்க விரும்புகிறார்.

ஆனால் கருணாகரன், தன் முன்கோபம் காரணமாகப் பெரும் சிக்கலில் அகப்பட்டுக் கொள்கிறான்.

நீதிபதி தமது கடமையைச் செய்கிறார். காதலும் பாசமும் அவரைக் கடமை யுணர்ச்சியிலிருந்து பிறழச் செய்யவில்லை. இதிலிருந்து அவர்கள் வாழ்க்கையில் பெரும் புயல் கிளம்புகிறது.

கருணாகரன் கொல்லப்படுகிறான். யார் குற்றவாளி என்பது தெரிவதில்லை. நிரபராதிகளெல்லாம் தாங்களே குற்றவாளிகள் என்று சொல்லிக் கொள்வதால், உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிப்பது போலீஸ் இலாக்காவுக்குப் பெருந் தொல்லையாகப் போய் விடுகிறது!

கதை முதல் அத்தியாயத்திலேயே சூடு பிடித்து விடுகிறது! ஐந்தாறு அத்தியாயங்களுக்குப் பிறகுதான் கதை சற்றுச் சூடு தணிந்து கை தாங்கக் கூடிய வெப்பமாக, சுகமாக இருக்கிறது.

சிவசங்கரன் தம் வாழ்க்கை வரலாற்றைச் சொல்லத் தொடங்கும் இடத்திலிருந்து கதை கம்பீரமாக நடை போட்டுச் செல்கிறது. கோதாவரியும் கிருஷ்ணையும் போல் விசாலமாகப் பரந்து செல்கிறது. அந்த இடங்களில் இந்தக் கதை எழுதுபவர் ஒரு பெண்மணி என்பதைத் தமது நுட்பமான வாழ்க்கை அனுபவங்கள் மூலம் வெளிப்படுத்தி விடுகிறார்.

உதாரணமாக இந்தக் கீழ்வரும் பத்தியைப் பாருங்கள்:

''உங்களுக்கு வேண்டியது அன்பா, அனுதாபமா? அனுதாபம் யாரிடம் வேண்டுமானாலும் பிறக்கும். யார் கஷ்டப்பட்டாலும் 'ஐயோ பாவம்!' என்று இரக்கம் ஏற்படும். ஆனால் அன்பு சுரப்பது மிக அபூர்வம். உங்களிடம் நான் அன்பைச் சொரிந்து கொண்டிருக்கிறேன். அதனால்தான் உரிமையுடன் சொல்கிறேன். நீங்கள் எவ்வளவு வித்தியாசமாகப் பேசினாலும் அது என்னைப் பாதிக்காது'' என்றாள் ஜயந்தி அழுத்தமான குரலில். இதைக் கேட்டதும் கருணாகரனின் மனம் குழைந்து விட்டது!

இதை ஒரு பெண்மணியன்றி வேறு யாரால் சொல்ல முடியும்!

ஒரு சமயம் பேராசிரியர் கல்கி அவர்கள் ஒரு கதாநாயகி தன் கதையைச் சொல்வது போல் கதை ஆரம்பித்தார். அந்தக் கதாநாயகி பின்வரும் மொழிகளைக் கூறுவதாகக் கதையைத் தொடங்குகிறார்:

''சிலர் பிறக்கும்போதே எழுத்தாளர்களாகப் பிறக்கிறார்கள். சிலர் தங்கள் சொந்த முயற்சியால் எழுத்தாளர்களாகிறார்கள்! சிலர் எழுத்தாளர் உலகில் தள்ளப்படுகிறார்கள். அப்படித் தள்ளப்பட்டவள் நான்!''

ஸ்ரீமதி ஆனந்தி, ஏதோ இரண்டொரு கதைகள் எழுதியிருந்தாலும், அவர் மொத்தத்தில் எழுத்தாளர் உலகில் தள்ளப்பட்டவர்தான். பேராசிரியர் 'கல்கி' அவர்கள் பாதியில் விட்ட அமரதாராவை வெற்றிகரமாகத் தொடர்ந்து எழுதிக் கல்கி நேயர்களின் பாராட்டுதல்களைப் பெற்றார். இப்பொழுது, தாம் சொந்தமாகக் கூட ஒரு நவீனம் எழுத முடியும் என்பதை மலைச்சாரல் மாதவி மூலம் காட்டி விட்டார். எழுத்துலகில் தள்ளப்பட்டாலும் வெற்றிகரமாக நீந்தி எழுத்துலகில் நிலையான இடம் பெற்று விட்டார். வாழ்க்கை அனுபவம் அதிகமாக ஆக இனி வரும் அவர் நவீனங்களும் முன்னதை விடச் சிறப்பாக அமையும் என்ற நம்பிக்கையை ஊட்டுகிறது.

பிரசுரம்: பாரதி பதிப்பகம், சென்னை-17
விலை ரூ. 4;

## இளந் தென்றல்

தமிழில் விஞ்ஞானக் கட்டுரைகள் வெளி வந்திருக்கின்றனவா? இலக்கியக் கட்டுரைகள் வளர்ந்திருக்கின்றனவா? கணிதத்தின் அருமை பெருமைகளை அறிவுறுத்தும் கட்டுரைகள் வந்திருக்கின்றனவா? ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்திருக்கின்றனவா? இப்படியாகக் கேள்விகளுக்கு மேல் கேள்விகளை அடுக்கிக் கொண்டு போகும் நபர்களுக்குப் பதில் சொல்லும் முறையில் இளந்தென்றல் வெகு அழகாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. 'மற்றைய நாடுகளில் நகைச்சுவை' என்ற நகைச்சுவைக் கட்டுரை, 'புவிசீர்ப்பு' என்னும் விஞ்ஞானக் கட்டுரை, 'கர்நாடக சங்கீதமும் மேல் நாட்டுச் சங்கீதமும்' என்னும் ஆராய்ச்சிக் கட்டுரை ஆகியவை இடம் பெற்றுள்ளன.

இலங்கைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த தமிழ்ச் சங்கத்தின் இப்பணி, பிறர் பார்த்துப் பின்பற்றுமளவுக்கு உயர்வாயிருக்கிறது.

கிடைக்குமிடம்: தமிழ்ச் சங்கம், இலங்கைப் பல்கலைக் கழகம், கொழும்பு. விலை ரூ. 1-00.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publication Private Limited
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

பூவைப் போல...
உங்கள் மேனியை மலரச்
செய்வது ரெக்ஸோனா

ரெக்ஸோனா சோப்பில் இருப்பது கேடில். எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமாகிய கேடில் உங்கள் சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கையழகை வெளிக்கொணரத் துணை புரியும்.

கேடில் கலந்துள்ள டாய்லெட்
சோப் இது ஒன்றே



